முதல் பதிப்பு : டிசம்பர், 1954
இரண்டாம் பதிப்பு : அக்டோபர், 1957


ஆசிரியரின்
மற்ற இலக்கிய நூல்கள்

மணல் வீடு
முல்லைத்திணை
ஓவச்செய்தி
குறுந்தொகை விருந்து
குறுந்தொகைச் செல்வம்
நற்றிணை விருந்து
நெடுந்தொகைச் செல்வம்
தமிழ் நெஞ்சம்
இலக்கிய ஆராய்ச்சி
கொங்குதேர் வாழ்க்கை
திருவள்ளுவர் அல்லது
வாழ்க்கை விளக்கம்
கண்ணகி
மாதவி
நடைவண்டி

சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை-14

# முன்னுரை

சார்ல்ஸ் லாம்ப் (Charles Lamb) என்று ஆங்கில அறிஞர் ஒருவர் வாழ்ந்து இலக்கியத் தொண்டு ஆற்றினார். நுண்ணிய நகைச்சுவை மிளிர எழுத வல்லவர் அவர். அத்தகைய புலமைநுட்பம் மிக்கவர், ஷேக்ஸ்பியர்நாடகங்களைக் குழந்தைகளுக்குச் சிறுகதைகளாக எளிமையாக்கி எழுதியுதவினார். முன்னோரின் இலக்கியச் செல்வங்களைக் காக்க விரும்புவோர் மறவாமல் போற்ற வேண்டிய அருஞ்செயல் அது.

எவ்வளவு சிறப்பு வாய்ந்த இலக்கியமாயினும், அதன் எதிர்காலம், கற்கும் மக்களைப் பொறுத்தே அமைகின்றது. ஒரு புறம், அதனை ஆழ்ந்து கற்று உணரும் புலவரும் வேண்டும். மற்றொரு புறம், அதன் கருத்தை உணர்ந்து போற்றிப் புகழும் பொதுமக்களும் வேண்டும். பொதுமக்களின் உள்ளத்தில் இடம்பெறாமல், புலவர் நெஞ்சில் மட்டும் வாழும் வாழ்வு போதாது. பொதுமக்களின் புறக்கணிப்பு, இலக்கியத்தின் எதிர்கால வாழ்வுக்கு இடையூறாகும்.

சங்க இலக்கியம் என்றால் என்ன என்று அறியாதவரும், அந்தத் தொடரைக் கேட்டறியாதவரும் பலர். இந்த நிலை தமிழகத்தில் இனியும் நீட்டித்தல் நன்றன்று. சங்க இலக்கியம் என்றால், எமது எமது என்று பெருமிதத்துடன் எண்ணும் நெஞ்சமும், கூறும் நாவும் இனி மிகுதல் வேண்டும். ஷேக்ஸ்பியர் முதலான புலவர் பெருமக்களின் நூல்களுக்கு அத்தகைய சிறப்பான வாழ்வு அமைந்திருத்தலை மேற்கு நாட்டவரிடையே காணலாம்.

இவ்வாறு மக்களில் பெரும்பாலோர் தம் முன்னோரின் இலக்கியச் செல்வத்தைப் போற்றும் நிலை வேண்டுமானால், பழைய இலக்கிய நூல்களை எளிய முறையில் - ஆயினும் அடிப்படையான உண்மை திரியா வகையில் - வெவ்வேறு வடிவில் தருதல் வேண்டும். சிறிது கற்றோரும் தாமே படித்துணருமாறு எளிதில் பொருள் விளங்க வேண்டுமானால், அரிய பழஞ் சொற்களையும் தொடர்களையும் புதிய எளிய சொற்களாலும் தொடர்களாலும் விளக்குதல் வேண்டும். இந்த நோக்கம் கொண்டே, இந்தச் சிறு நூலில் இற்செறிப்பு வரைவுகடாதல் முதலான பல தொடர்கள் இல்லாமல், இக்காலத்தில் பயின்று வழங்கும் சொற்களையும் தொடர்களையுமே கூடியவரையில் பயன்படுத்த நேர்ந்தது. அதனாலேயே சந்திகளைப் பிரித்தலில் ஓரளவு மரபு கடந்து செல்லவும் நேர்ந்தது. ஆசிரியரிடம் அணுகிப் பாடம் கேட்டுக் கற்கும் பழைய முறை, இன்று எல்லோர்க்கும் வாய்க்குமானால், இவ்வாறு எளிமைப்படுத்த வேண்டுவதில்லை. ஆயின் இன்றைய நிலை வேறு வகையாகவே உள்ளது.

* * *

சங்க இலக்கியம் எட்டுத்தொகை என்றும் பத்துப் பாட்டு என்றும் வகுக்கப்பட்டுள்ளது. எட்டுத் தொகையுள் அகநானூறு என்பது ஒரு தொகை நூல் ஆகும். சங்ககாலப் புலவர் பலர்; அவர்கள் இயற்றிய பாட்டுக்கள் ஆயிரக் கணக்கானவை. அவற்றை அழியாமல் காக்க வேண்டும் என்று சான்றோர் சிலர் பெரு முயற்சி செய்தனர்; கிடைத்த பாட்டுக்கள் பலவற்றுள் சிறப்

புடைய சிலவற்றை மட்டும் தொகுத்துத் தொகை நூல்கள் எனத் தந்தனர். அவற்றுள் அகப் பொருள் பற்றிய—காதல்நெறி பற்றிய—நீண்ட அடிகள் உடைய நானூறு பாட்டுக்கள் சேர்ந்த தொகை நூல் நெடுந் தொகை எனப்பட்டது. பதின்மூன்று அடி முதல் முப்பத்தோரடி வரையில் கொண்ட பாட்டுக்கள் இதில் உள்ளன. இந்த நெடுந்தொகையே பிற்காலத்தில் அகநானூறு என்று மற்றொரு பெயரும் பெற்றது; இதுவே அகப்பாட்டு என்றும் அகம் என்றும் குறிக்கப் படுதலும் உண்டு.

நெடுந்தொகை அல்லது அகநானூறு என்னும் இந்த நூலைத் தொகுப்பித்தவன் (தொகுக்குமாறு தூண்டி உதவி புரிந்தவன்) தமிழக வேந்தன் ஒருவன்; பாண்டியன் உக்கிரப்பெருவழுதி என்பவன். தொகுத்தவர் மதுரை உப்பூரிகுடிகிழான் மகனார் உருத்திரசன்மர். இந் நூல் தொகுக்கப்பட்டுள்ள முறை, வியந்து போற்றத் தக்க தனிச்சிறப்பு உடையது. நானூறு பாட்டுக் களைக் கொண்ட இந்த நூலில் ஒற்றை எண் உடைய பாட்டுக்கள் இருநூறும், பாலை (காதலர் பிரிந்து வருந் தல்) என்னும் ஒரு பொருள் பற்றி அமைந்துள்ளன. இரண்டு, எட்டு என்னும் எண் உடையவை, குறிஞ்சி (காதலர் கூடுதல்) என்னும் ஒரு பொருள் பற்றி அமைந் துள்ளன. நான்கு என்னும் எண் உடையவை, முல்லை (காதலர் பிரிந்து பொறுத்திருத்தல்)என்னும் ஒருபொருள் பற்றி அமைந்துள்ளன. ஆறு என்னும் எண் கொண்ட பாட்டுக்கள், மருதம் (காதலர் பிணங்குதல்) என்னும பொருள் உடையவை. பத்து என்னும் எண்ணுடன்

அமைந்தவை, நெய்தல் (காதலர் பிரிவுத்துயரால் நைந்து அழிதல், அல்லது, கடற்கரையில் உள்ள காதலரின் வாழ்வு) என்னும் பொருள் பற்றிய பாட்டுக்கள். ஆகவே, ஒரு பாட்டின் எண்ணைக் குறிப்பிட்டவுடன், அது இன்ன பொருள் பற்றிய பாட்டு என்று கூறுமாறு இந்த நூல் தொகுக்கப்பட்டுள்ளது. அகநானூறு 87-ஆம் பாட்டு எனின், அது பாலை; 132 எனின் குறிஞ்சி; 284 எனின் முல்லை; 376 எனின் மருதம்; 40 எனின் நெய்தல்: இவ்வாறு எண்ணை அறிந்தே பொருளை உணரும் வகையில் பாட்டுக்கள் தொகுக்கப்பட்டுள்ளன. தொகுத்தவரின் முயற்சியைக் கற்பனையில் கண்டு ஆராய வல்லவர்க்கே, அவர்தம் உழைப்பின் பெருமையும் திறனும் ஓரளவு புலப்படும்.

புலவர்பெருமக்கள் இந்த நூலின் அருமையை நன்கு உணர்ந்து போற்றியிருக்கின்றார்கள். அதனாலேயே செல்வக் குழந்தைக்குப் பல பெயர்கள் வழங்குதல்போல், நெடுந்தொகை, அகநானூறு, அகப்பாட்டு, அகம் என்று பல பெயர்கள் இதற்கு வழங்குகின்றன. மேலும், வேறு எந்தத் தொகைநூலிலும் காணாத மற்றொரு சிறப்பும் இதில் காணலாம். இதன் பாட்டுக்களில் முதல் நூற்றிருபது களிற்றியானைநிரை என்றும், அடுத்த நூற்றெண்பது மணிமிடைபவளம் என்றும், இறுதி நூறு நித்திலக்கோவை என்றும் கருத்தமைந்த பெயர்களுடன் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது. இந்த உட்பிரிவுகளின் பெயர்களையே எடுத்துச் சுட்டும் அளவிற்கு உரையாசிரியர்களின் காலத்தில் நூல் போற்றப்பட்டிருந்தது.

இத்தகைய அரிய நூலை, எளிய முறையில், வேறு வடிவில், சுருக்கமான விளக்கத்துடன், தொடர்ந்த கதை போன்ற போக்கில் தர வேண்டும் என்று முயன்ற போது என் நெஞ்சம் உற்ற தயக்கம் பெரிது ; மிகப் பெரிது. தமிழகம் இந்தச் சிறிய முயற்சியையும் ஏற்றருளும் என நம்புகின்றேன்.

12–8–54 மு. வ.

# 1. காதல்நோய்

தலைவன் வயல்வளம் நிறைந்த மருத நிலத்தைச் சார்ந்தவன். தலைவி கடல்வளம் மிகுந்த நெய்தல் நிலத்துப் பரதவர் குடியில் பிறந்து வளர்ந்தவள். அவளுடைய தந்தை உப்பு வாணிகன்; மாட்டுவண்டியில் உப்பைக் கொண்டு சென்று உள்நாட்டில் விற்றுவருபவன். உப்பங் கழியில் தந்தை விளைக்கும் உப்பை மகளும் சில நாட்களில் பக்கத்து ஊர்களுக்குச் சுமந்து சென்று தெருக்களில் பண்டமாற்றாக விலைகூறி விற்றுவருவது வழக்கம். அவ்வாறு விற்கச் சென்ற நாட்களில் ஒருநாள் தெருவில் அவளைக் கண்டு தலைவன் காதலுற்றான். காதலால் வருந்தி வாடிய அவன்நிலைமையை அவனுடைய நண்பன் உணர்ந்தான்; காரணம் என்ன என்று கேட்டான். தலைவன் அப்போது அவனிடம் பின்வருமாறு கூறுகிறான்.

" கடலில் மீன்பிடித்து வாழும் பரதவர் பெரிய உப்பங் கழியில் உழவு செய்யாமலே உண்டாக்கிய வெண்ணிற உப்பை விலை கூறிக்கொண்டு உப்பு வாணிகருடைய செல்வ மகள் ஒருத்தி ஒருநாள் இவ்வழியே வந்தாள். வளையல் ஒலிக்குமாறு கைவீசி, "நெல்லுக்கு நேர்விலை வெள்ளை உப்பு" என்று தெருவில் பண்டமாற்றாக விலைகூறி வந்தாள். அவளுடைய வேற்றுக் குரலை அறிந்த வீட்டுநாய் குரைத்துச் செல்ல, அவள் அதற்கு அஞ்சி ஒதுங்கினாள். அஞ்சிய நிலையில் தோன்றிய அவளுடைய மருண்ட கண்களைக் கண்டேன். கண்டு மயங்கினேன். மதர்த்த கயல்மீன் இரண்டு எதிர்த்துத் தாக்குவது போல் அந்தக் கண்கள் தோன்றின. அந்தக் கண்களின் பார்வையே இப்போது யான் வெம்மையான

மூச்சு விட்டு வருந்தும் இந்த நோய் ஆயிற்று. பழஞ்சேற்றில் அழுந்திவிட்ட உப்புவண்டியின் இடர்ப்பாடு தீருமாறு வருந்தியிழுக்கும் எருதுகள்போல் – அவளுடைய தந்தை கையிற் பற்றிச் செலுத்தும் எருதுகள் போல் - யானும் வருந்திப் பெருமூச்சு விடும் நோய் ஆயிற்று.''

தலைவன் :

பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்
இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த
வெண்கல் உப்பின் கொள்ளை சாற்றி
என்றூழ் விடர குன்றம் போகும்
கதழ்கோல் உமணர் காதல் மடமகள்
சில்கோல் எல்வளை தெளிர்ப்ப வீசி
நெல்லின் நேரே வெண்கல் உப்பெனச்
சேரி விலைமாறு கூறலின் மனைய
விளிஅறி ஞமலி குரைப்ப வெரீஇய
மதர்கயல் மலைப்பின் அன்ன கண்எமக்கு
மாமூது அள்ளல் அழுந்திய சாகாட்டு
எவ்வம் தீர வாங்கும் தந்தை
கைபூண் பகட்டின் வருந்தி
வெய்ய உயிர்க்கும் நோய்ஆ கின்றே.*

---

*அக. 140. அம்மூவனூர்.

வேட்டம் - மீன்வேட்டை. சிறுகுடி - ஊர். செறு - வயல், உப்புவயல். கொள்ளை - விலை. என்றூழ் - ஞாயிற்றின் வெப்பம். விடர - பிளப்புக்களை உடைய. கதழ் - எருதை விரைவாகத் தூண்டும். உமணர் - உப்பு வாணிகர். கோல் - திரட்சி. எல் - ஒளி. தெளிர்ப்ப - ஒலிக்க. நேர் - ஒத்த விலை. சேரி - தெரு. ஞமலி - நாய். வெரீஇய - அஞ்சிய. மலைப்பு - மாறுபாடு. அள்ளல் - சேறு. சாகாடு - வண்டி. எவ்வம் - துன்பம். மா - கரிய. வாங்கும் - இழுக்கும். பகட்டின் - எருதுபோல். ஆகின்று - ஆயிற்று.

## 2. கடற்கரையும் உறங்கவில்லை

தலைவி கடற்கரையை அடுத்த புன்னை மரத்து நிழலில் தோழியரோடு விளையாடி வந்தாள். அங்குத் தனிமையாக இருந்தபோது தலைவன் வந்து அவளைக் கண்டு காதல் கொண்டான். மறுநாளும் அங்கு வந்தான்; ஆயின் அன்று அவளைத் தனியே காணவில்லை; தோழியர் கூட்டத்துடன் கலந்து விளையாடிக்கொண் டிருக்கக் கண்டான். ஆதலின் தலைவியைத் தனிமையில் கண்டு பேசமுடியாமல் திரும்பினான். அடுத்து வந்தபோது தலைவியோடு நெருங்கிப் பழகும் தோழி யார் என்பதை ஆராய்ந்து கண்டான். அவளுடைய உதவி பெற்றுத் தலைவியைக் கண்டு பேசுவதே வழி என உணர்ந்தான். அந்தத் தோழியைக் கண்டு தன் காதலை எடுத்துரைத்துப் பலவாறு பணிமொழி கூறி வேண்டினான். முதலில் அவனுடைய வேண்டுகோளுக்குச் செவி கொடாமல் மறுத்த தோழி, அவன் செலுத்தும் அன்பு உண்மையான அன்பே என்பதைத் தெளிந்த பிறகு, அவனுக்காக இரக்கம் உற்றாள். தலைவியிடம் அவனுடைய நிலைமையை எடுத்துச் சொல்லத் துணிந்தாள்; தக்க வாய்ப்பை எதிர்பார்த்துக் கூறுகிறாள்.

"என்ன காரணமோ, தெரியவில்லை. அலைகள் மோதுவதால் தாக்குண்டு வருந்தி அசையும் புன்னைமரத்தின் பூங்கொத்துக்களிலிருந்து பூம்பொடிகள் உதிர்ந்து அழகுபடுத்துகின்ற மெல்லிய மணல்மேட்டில் கூட்டமான தோழியரோடு நாங்கள் கலந்து விளையாடிக்கொண் டிருந்தோம். அப்போது தேர் ஊர்ந்து வந்த ஒருவன், தன் தேரையும் ஏவலாளரையும் தொலைவிலேயே நிறுத்திவிட்டு வந்தான். தாரும் கண்ணியும் அணிந்த கோலத்தோடு என்னை அணுகிவந்தான். நாம் செய்த மணல்வீட்டைப்

புகழ்ந்து சொல்லிக்கொண்டு நின்முன். நாங்கள் ஒன்றுமே மறுமொழி கூருமல் இருந்தோம். ஆகவே, ஒன்றும் மறுமொழி பெருமல் திரும்பினன். அதுமுதல் தாங்குவ தற்கு அரிய துன்பத்தோடு தோள் மெலிந்து வருந்துகிறோம். பரதவரின் ஊராகிய இந்தச் சிறுகுடியில் வாழும் கொடிய வாய் உடைய பெண்டிர் அலர் தூற்ற, அதனால் கலங்கினேம். இவ்வாறு மெலிந்து வளை கழலும் நிலைமை உற்ற நம்மோடு சேர்ந்து இந்த நள்ளிரவில் கடற்கரையும் தூங்காமலிருக் கின்றது. என்ன காரணமோ? தெரியவில்லை.''

தோழி :

*எவன்கொல் வாழி தோழி மயங்குபிசிர்*
*மல்குதிரை உழந்த ஒல்குநிலைப் புன்னை*
*வண்டுஇமிர் இணர நுண்தாது வரிப்ப*
*மணம்கமழ் இளமணல் எக்கர்க் காண்வரக்*
*கணங்கொள் ஆயமொடு புணர்ந்துவிளை யாடக்*
*கொடுஞ்சி நெடுந்தேர் இளையரொடு நீக்கித்*
*தாரன் கண்ணியன் சேரவந்து ஒருவன்*
*வரிமனை புகழ்ந்த கிளவியன் யாவதும்*
*மறுமொழி பெருஅன் பெயர்ந்தனன் அதற்கொண்டு*
*அரும்படர் எவ்வமொடு பெருந்தோள் சாஅய்*
*அவ்வலைப் பரதவர் கானலஞ் சிறுகுடி*
*வெவ்வாய்ப் பெண்டிர் கவ்வையின் கலங்கி*
*இறைவளை நெகிழ்ந்த நம்மொடு*
*துறையும் துஞ்சாது கங்கு லானே.**

*அக. 250. செல்லூர்கிழார் மகனர் பெரும்பூதங்கொற்றனர்.

மயங்கு பிசிர் - நெருங்கிக் கலங்கும் துளிகள். மல்கு திரை - மிக்க அலைகள். உழந்த - வருந்திய. ஒல்கு - சாய்தல். இமிர் - ஒலிக்கும். இணர - பூங்கொத்துக்களை உடைய. வரிப்ப - அழகு படுத்த. எக்கர் - மணல்மேடு. காண்வர - அழகுபெற. கணம் -

# 3. மறைந்துகொள்வதா ?

தலைவனுடைய வேண்டுகோளுக்கு இசைந்த தோழி தலைவியிடம் வந்து அவனுடைய காதலைப் பற்றி எடுத்துரைத்தாள். தலைவன் தேர் ஊர்ந்து வந்த செய்தி, தேரை நிறுத்திவிட்டு நெருங்கிவந்து ஊர் எங்கே என்று கேட்டது, பிறகு விடை பெறுமல் திரும்பியது ஆகியவற்றைத் தலைவிக்கு நினைவூட்டினுள். அவற்றைக் கேட்ட பின் தலைவியின் மனத்தில் நிகழ்வது யாது என ஆராய்ந்தாள். தலைவி வாளா இருக்கவே, மேலும் சிறிது நெருங்கிக் கூறத் தொடங்குகிறுள் : அவன் உள்ளத்தில் கொண்டது காதலே என்பதைத் தெளிவாக்குகிறுள். மறுநாள் தலைவி இல்லாமல் தனித்திருந்தபோது அவன் மீண்டு வந்ததாகவும், துணையோடு வாழும் நண்டுகளைக் காட்டி அவற்றின் காதல்வாழ்வை வியந்து குறிப்பிட்டதாகவும், தனக்கு அத்தகைய நல்ல வாழ்க்கை (துணைவியோடு வாழும் வாழ்க்கை) அமையவில்லையே என்று வருந்தியதாகவும் கூறுகிறுள் ; அவன் உள்ளம் இத்தகையது என்பதைத் தலைவி உணர்ந்து கொள்ளுமாறு கூறுகிறுள். இவ்வாறு கூறிக்கொண் டிருந்தபோது, தலைவனுடைய தேர் தொலைவில் வருவதை உணர்கிறுள் ; உணர்ந்ததும், இன்று என்ன செய்வது என்று திகைத்துக் கலங்குவதாக நடிக்கிறுள். அவளுடைய திகைப்பையும் கலக்கத்தையும் மெய் என்று தலைவி உணர்ந்து

---

கூட்டம். கொடுஞ்சி - தேரின் முன்னுள்ள ஓர் உறுப்பு. இளையர்- ஏவலாளர். கிளவியன் - சொல்லை உடையவனுகி. படர் எவ்வம் - நினைந்து வருந்தும் துன்பம். சாஅய் - மெலிந்து. கானல் - கடற்கரைச் சோலை. கவ்வை - அலர். இறை - முன்கைப் பகுதி. கங்குலான் - கங்குலில்.

அவனுடைய வேண்டுகோளுக்கு உடன்படுவாள் என நம்பு கிருள்.

"தேரைத் தொலைவிலேயே நிறுத்திவிட்டுத் தனியாக வந்து 'உங்கள் ஊர் எது?' என்று கேட்டுக் குறுகக் குறுக ஒதுங்கி வந்து முந்திய நாட்களில் திரும்பிச் சென்ற தலைவன், நேற்று நீருண்ணும் துறையில் அகன்ற இலைகளை உடைய நாவல்மரம் உதிர்த்துள்ள நாவல்பழத்தை அதன் அழகு சிதையுமாறு இழுத்துச் சென்று தாழைமரத்தின் வேரில் உள்ள வளையில் வாழும் தன் அன்பான பெண்நண்டுக்குத் தருகின்ற ஆண்நண்டைக் காட்டி, 'இந்த நண்டு நல்வினையுடையது' என்று கூறினான். பிறகு அதையே நினைந்த நெஞ்சத்தோடு நெடுந்தொலைவு சென்றான். அவனுடைய தேர் அதோ வருகின்றது. முந்திய நாட்களில் செய்தது போல், இன்றும் நாம் அவனை அன்புடன் ஏற்றுக்கொள்ளாமல் விட்டால், அவன் அதையே (அன்பு இல்லை என்பதையே) மெய் என்று துணிந்துவிடுவான்போல் தெரிகிறது. ஏன் எனில், அவன் நாணம் மிக உடையவன். என்ன செய்வது? நான் வெண்ணிற மணலின் உயர்ந்த கரையில் மறைந்து கொள்ளட்டுமா? தோழி! நீ சொல்."

தோழி :

*தேர்சேண் நீக்கித் தமியன் வந்துநும்*
*ஊர்யாது என்ன நணிநணி ஒதுங்கி*
*முன்னாள் போகிய துறைவன் நெருநை*
*அகல்இலை நாவல் உண்துறை உதிர்த்த*
*கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன்*
*தாழை வேரளை வீழ்துணைக்கு இடூஉம்*
*அலவன் காட்டி 'நற்பாற்று இது' என*
*நினைந்த நெஞ்சமொடு நெடிதுபெயர்ந் தோனே ;*

உதுக்காண் தோன்றும் தேரே ; இன்றும்
நாம்எதிர் கொள்ளாம் ஆயின் தான்அது
துணிகுவன் போலாம் ; நாணுமிக உடையன் ;
வெண்மணல் நெடுங்கோட்டு மறைகோ ?
அம்ம தோழி ! கூறுமதி நீயே.*

## 4. நெஞ்சம் நாணியதோ ?

தனக்கும் தன் காதலிக்கும் இடையே உறவு ஏற்படுத்த வல்லவள் அவளுடன் நெருங்கிப் பழகும் உயிர்த்தோழியே என்பதைத் தலைவன் உணர்ந்தான். உணர்ந்தவன் தோழியிடம் அணுகித் தன் கருத்தை எடுத்துரைத்துப் பலவாறு வேண்டினன். முதலில் மறுத்து நீக்கிய தோழி பிறகு அவனுக்கு உதவுவதாக இசைந்தாள். ஆயின் அதற்குப் பிறகே அவள் செய்வது அறியாமல் திணறலானாள். தலைவியிடம் அவன்கருத்தை எவ்வாறு எடுத்துரைப்பது என்றும், எடுத்துரைக்க இடம் தாராமல் அவள் மறுத்து ஒதுங்கினால் என்ன செய்வது என்றும், மறுத்து நீக்காத வகையில் சொல்லும் முறை என்ன என்றும் எண்ணி எண்ணித் திகைத்தாள். இறுதியில் ஒருவழி உணர்ந்து மகிழ்ந்தாள். அவன் தம்மோடு எவ்வெவ்வாறு பழகி உள்ளத்தைக் கவர்ந்தான் என்பதை எடுத்துரைத்தல், பிறகு தாம் புறக்

---

*அக. 380. மதுரை மருதனிளநாகனார்.

சேண் - தொலைவில். நணி நணி - குறுகக் குறுக. நெருநை - நேற்று. கவின் - அழகு. வாங்கி - இழுத்து. அளை - வளை. வீழ் - விரும்புகின்ற. இடூஉம் - இடுகின்ற. அலவன் - நண்டு. பாற்று - பால் உடையது - ஊழ் உடையது. உதுக்காண் - அதோ பார். கோடு - கரை.

கணித்தாற்போல் நடப்பதால் அவன் சோர்ந்து வருந்திச் சென்றதாகக் கூறுதல், அவன் சென்ற பிறகுதான் தன் நெஞ்சம் அவனைப் பற்றி இரக்கம் கொண்டது என்று உரைத்தல், பிறகு அந்த நெஞ்சம் அவனிடம் எதையும் தெரிவிக்க நாணுவதாகக் கூறுதல், அதன் பிறகு அவனுடைய தேர் சென்ற வழியைக் காட்டி அது மறைந்த நிலைமையும் சொல்லுதல்—இவ்வாறு ஒன்றன்பின் ஒன்றாக நிலைமையைப் படிப்படியாக எடுத்துரைத்தால் தலைவியின் நெஞ்சம் குழையும் என்றும், பிறகு மெல்ல இசைந்துவிடுவாள் என்றும் நம்பினாள். தான் தலைவனுடன் பழகியதையும் தான் வேண்டுவதையும் கூறாமல் மறைத்து, பற்றற்றவள் போல் தன் இரக்கத்தை மட்டும் எடுத்துரைக்கிறாள்.

"உப்பங்கழியில் உள்ள பூக்களைப் பறித்துக் கொடுக்கிறான். கடற்கரைச் சோலையில் நம்மோடு தங்குகிறான். வண்டல்பாவை செய்து மணலில் விளையாடுகிறான். இன்பமாக நம்மோடு சேர்ந்து மகிழ்கிறான். சிறுமை தோன்ற நம்மிடம் பணிந்து நடக்கிறான். பிறகு தன் துயரம் வெளிப்படுமாறு செல்கிறான். தவறு இல்லாத நாம் படும் துயரத்தை அவன் அறியவில்லை. அதனால் சோர்ந்த நெஞ்சத்தோடு திரும்பிச் செல்கின்றான். அந்தோ! திரும்பிச் செல்கின்ற அவனுக்குப் பின்னே இருந்து இரக்கம் கொள்கின்றது என் நெஞ்சம். இரக்கம் கொண்டு முன்சென்று தடுப்பதற்குச் செல்கின்றது என் நிறை இல்லாத நெஞ்சம். அந்த நெஞ்சம் அவரிடம் சென்று சேர்ந்ததோ? சேர்ந்தும், நம் காதலை அவரிடம் எடுத்துரைக்க நாணியதோ? அதோ பார், அவர் ஏறிய தேர்: உயர்ந்து விளங்கும் தோற்றத்தோடு சென்று மறைகின்றது."

தோழி :

*கழிப்பூக் குற்றும் கானல் அல்கியும்*
*வண்டல் பாவை வரிமணல் அயர்ந்தும்*
*இன்புறப் புணர்ந்தும் இளிவரப் பணிந்தும்*
*தன்துயர் வெளிப்படத் தவறுஇல் நம்துயர்*
*அறியா மையின் அயர்ந்த நெஞ்சமொடு*
*செல்லும் அன்னோ மெல்லம் புலம்பன் ;*
*செல்வோன் பெயர்புறத்து இரங்கி முன்னின்று*
*தகைஇய சென்றஎன் நிறைஇல் நெஞ்சம்*
*எய்தின்று கொல்லோ தானே ? எய்தியும்*
*காமம் செப்ப நாணின்று கொல்லோ ?*
*உதுவ காண்அவர் ஊர்ந்த தேரே...*
*நிவந்துபடு தோற்றமொடு இகந்துமா யும்மே.**

## 5. பழி உற்றேன்

தலைவனுடைய வேண்டுகோளுக்கு இசைந்த தோழி, அவன் விரும்பியவாறே தலைவியிடம் சென்று அவனுடைய காதலைத் தெரிவித்தாள். தலைவியோ தன் உள்ளத்தில் உள்ள காதலை மறைத்து அவனுடைய சொல்லை மறுத்துக் கூறினாள். அதற்குத் தோழி நயமுற மறுமொழி

---

*அக. 330. உலோச்சனார்.

குற்று - பறித்து. கானல் - கடற்கரைச் சோலை. அல்கி - தங்கி. அயர்ந்து - விளையாடி. இளிவர - தாழ்வுற. அயர்ந்த - சேர்ந்த. அன்னோ - அந்தோ. புலம்பன் - கடற்கரைப் பகுதித் தலைவன். பெயர் - திரும்புகின்ற. தகைஇய - தடுக்க. எய்தின்று - அடைந்தது. காமம் - காதல். நாணின்று - நாணியது. நிவந்து - உயர்ந்து. இகந்து - கடந்து. மாயும் - மறையும்.

அளித்தாள் ; ஆழ்ந்த பல கருத்துக்களைச் சுருங்கிய சில சொற்களில் புலப்படுத்தும் திறனோடு எடுத்துரைத்தாள்.

"மலைநாடனாகிய தலைவனோடு உறவு கொள்வதில் தவறு ஒன்றும் இல்லை ; அது குற்றம் அற்ற ஆசை கலந்த காதல். அத்தகைய காதல் உனக்கும் அவனுக்கும் இடையே இருப்பது உண்மை என்றால், அதற்காக வருந்த வேண்டிய தில்லை ; மகிழ்ச்சி அடையத் தக்கது அது. அவ்வாறு எண்ணிப் பார்த்தால் நீ மறுத்துரைக்க வேண்டிய காரணமே இல்லை. ஆராய்ந்து பார்க்காததால் நீ இவ்வாறு மறுத்துரைக்கிறாய்" என்றாள் :

தோழி :

> மாமலை நாடனொடு மறுஇன்று ஆகிய
> காமம் கலந்த காதல் உண்டுஎனின்
> நன்றுமன்; அதுநீ நாடாய் கூறுதி...

அவ்வாறு தோழி கூறியதைக் கேட்ட தலைவி நாணினாள். அதைக் கண்ட தோழி, "நீ நாணத்தோடு இருக்கிறாய். உலகத்தில் மற்றவர்களும் நாணத்தோடு வாழ்கிறார்கள். நான் ஒருத்திதான் நாணம் அற்றவள்" என்றாள். அந்தச் சொல்லால் அவள் குறிப்பாகப் புலப்படுத்த விரும்பியது வேறு. "நாணம் இல்லாமல் யான் கூறவில்லை. யானும் நாணம் உடைய பெண்தான். உண்மையாக உள்ள காதலை ஏன் மறைக்க வேண்டும் ?" என்னும் கருத்துப் புலப்பட, "நாணம் இல்லாதவள் நான் ஒருத்திதான் இந்த உலகத்தில்" என்றாள். "என்னை உயிர்த்தோழியாகக் கொண்டு பழகியவள் நீ. ஆயினும் உன்னிடம் நெருங்கிச் சென்று அன்பான வேண்டுகோள் ஒன்றைக் கூறியபோது அதற்கு இடந்தராமல் மறைத்தும் மறுத்தும் பேசுகிறாய். இதுதான்

நட்பா ? இந்த உலகத்தில் நட்பு இல்லாதவள் யான் ஒருத்தி தான் என்று தெரிகிறது " என்று குறிப்பிட்டாள் :

தோழி :

**நாணும் நட்பும் இல்லோர்த் தேரின்**
**யான்அலது இல்லைஇவ் வுலகத் தானே ..**

இதைக் கேட்ட தலைவி அமைதியாக இருந்தாள். " ஆமாம். என் தவறுதான் இது. என் உயிர்த் தோழி நீ. யான் தலைவனோடு பேசி அவன் கூறியதைக் கேட்டறி வதற்குமுன் உன்னிடம் கலந்து எண்ணியிருக்க வேண்டும் " என்றாள் தோழி ; " தந்தை விதித்துள்ள காவல்வரம்பை மீறி நடந்தவளாக என்னைப் பற்றி எண்ணம் தோன்றும். அவரோ, மூங்கில் தனித்து வளராமல் முளைகள் செழித்துப் பலவற்றுடன் கூடி வளர்வதுபோல் நிறைந்த சுற்றத்துடன் கூடி வாழ்பவர் ; பெரும் புகழ் பெற்றவர். நான் அவருடைய அரிய காவலுக்கு அடங்கி நடக்கவில்லை என்பது உண்மைதான். ஆயினும் ஒன்று சொல்வேன். இவை எல்லாவற்றையும் யான் நன்கு அறிந்துள்ளேன். செய்வதை எண்ணிப் பார்த்தே செய்துள்ளேன். செய்தபின் வருந்தி இரங்கத்தக்க செயல் செய்யவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆதலின் பெரும்பழிகள் அடைந்தேன் என்றபோதிலும் அவை உண்மையல்லாத பழிகளே ; எனக்குப் பொருந்தாத பழிகளே " என்றாள்.

தோழி :

**இன்னுயிர் அன்ன நின்னொடும் சூழாது**
**முளைஅணி மூங்கிலின் கிளையொடு பொலிந்த**
**பெரும்பெயர் எந்தை அருங்கடி நீவிச்**

செய்துபின் இரங்கா வினையொடு
மெய்யல பெரும்பழி எய்தி னேனே.*

இவ்வாறு அவள் மறைத்தலின் தவறும், தன் முயற்சியின் நன்மையும், குடும்ப நிலைமையும், தன் பொறுப்பும் விளங்கப் பலவாறு எடுத்துரைத்தால், அவளுடைய மனம் மாறித் தன்னிடம் உண்மையை உரைப்பாள் எனக் கருதினாள்; ஆயினும் சொல்லும்போது தக்க சிறு சொற்களால் கூறுதலே பயன்தரும் என்று சுருங்க எடுத்துரைத்தாள்.

## 6. என் பொறுப்பு

தலைவனுடைய வளமான உடம்பு வாடிய வாட்டத்தையும் பணிந்து வேண்டும் முறையையும் தோழி அறிந்து மனம் நெகிழ்ந்தாள். அவன் உண்மையானவன், நம்பிக்கைக்கு உரியவன், நம்பினோரைக் கைவிடாதவன் என்பவற்றைப் படிப்படியாக ஆராய்ந்து அறிந்தாள் தோழி. இத்தகைய ஒருவனைத் தெளிந்து அவனைக் காதலனாகக் கொண்டு தலைவி தொடங்கும் வாழ்க்கை பழுதாகாது என உறுதியாக உணர்ந்தாள். உணர்ந்த பிறகு தலைவியை அணுகி அவனுடைய காதலின் பெற்றியை எடுத்துரைக்கிறாள். உண்மையான அன்பு உடைய அத்தகைய தலைவன்

---

*அக. 268. வடமவண்ணக்கன் பேரி சாத்தனார்.

மறு இன்று ஆகிய - குற்றம் இல்லாதது ஆகிய. காமம் - விருப்பம். நாடாய் - ஆராயாமல். தேரின் - ஆராய்ந்தால். சூழாது - ஆராயாமல். கிளை - சுற்றம். அருங்கடி - அரிய காவல். நீவி - நீங்கி. மெய் அல - உண்மை அல்லாதனவாகிய.

உதவி பெறுமல் கலங்கி அழிந்து திரும்புமாறு செய்வது கூடாது என்றும், அவன் தலைவியை எக்காரணத்தாலும் கைவிட்டுப் பிரிய மாட்டான் என்றும், அவ்வாறு பிரிவானுனல் தானே பொறுப்பு ஏற்பதாகவும் தோழி உறுதி பெறக் கூறுகிறுள்.

"அழகுடைய தன் உடம்பின் வாட்டத்தை நன்கு அறிந்திருந்தும், நம்மிடம் பின்நின்று இரத்தலை அவன் வெறுத்துக் கைவிடவில்லை. 'பொன்னுல் செய்யப்பெற்றது போன்ற அழகும் விரும்பத்தக்க மென்மைத் தன்மையும் மடப்பமும் உடைய காதலியிடத்தில் இடையூறு இல்லாமற் போகுமாறு நீ புணையாக உதவுக' என்று என்னையும் மிக வேண்டுவானுனல், அவன் கலங்கித் திரும்பிச்செல்லுதல் மிகக் கொடியதாகும். ஆதலின் இனி இசைவாயாக; என் தோழி! தலைவன் நம்மைக் கைவிட்டுப் பிரிந்து செல்ல மாட்டான். அதுவும் அன்றி, தனக்கு உரியது அல்லாத பண்பால் ஒருகால் பிரிவானுனல், உன் அழகை மீண்டும் தருபவள் யானே ஆவேன்."

தோழி :

பண்புடை யாக்கைச் சிதைவுநன்கு அறீஇப்
பின்னிலை முனியான் ஆகி நன்றும்
தாதுசெய் பாவை அன்ன தையல்
மாதர் மெல்லியல் மடநல் லோள்வயின்
தீதுஇன்று ஆக நீபுணை புகுகஎன
என்னும் தண்டும் ஆயின், மற்றுஅவன்
அழிதகப் பெயர்தல் நனிஇன் னுதே;
ஒல்இனி வாழி தோழி!...வெற்பன்
பிரியுநன் ஆகலோ அரிதே; அதாஅன்று

உரிதல் பண்பின் பிரியுநன் ஆயின்...
யான்ஆ குவல்நின் நலன்தரு வேனே.*

## 7. அதோ எம் ஊர்

தலைவன் தலைவியைக் கண்டு காதல் கொண்ட பிறகு, அந்த உறவை மேலும் வளர்த்துப் பழகுவதற்குத் தோழியின் உதவியை நாடினான். தலைவிக்கு எந்நேரமும் துணையாக இருந்து உயிர்த் தோழியாகப் பழகியவள் அவளே. அவளிடம் தலைவி நெருங்கிப் பழகுவதைத் தலைவன் பலநாள் கண்டிருக்கிறான். ஆகையால் அவளை அணுகி அவளுடைய அன்பைப் பெற்றால், காதலுறவு வளர்வதற்கு வாய்ப்பாக இருக்கும் எனக் கருதினான். அவன் ஒருநாள் தோழியிடம் சென்று தன் காதலை எடுத்துரைத்து அவளுடைய உதவியைக் கோரினான்; வேண்டினான். அவனுடைய உண்மை நிலை அறிந்த தோழி, தலைவியும் அவனிடம்

*அக. 392, மோசி கீரனார்.

சிதைவு - மெலிந்து வாடுதல். அறீஇ - அறிந்து. பின்நிலை - பின் நிற்றல், இரத்தல். முனியான் - வெறுக்காதவன். நன்றும் - பெரிதும், மிகவும். தாது - பொன். தையல் - கட்டழகு. மாதர் - விருப்பம். புணைபுகல் - உதவியாக இடையில் புகுதல். என்னும் - என்னையும். தண்டும் - நெருங்கிக் கேட்கும், விரும்பிக் கேட்கும். அழிதக - நெஞ்சு அழிய. பெயர்தல் - திரும்புதல். வெற்பன் - மலைநாட்டுத் தலைவன். பிரியுநன் - பிறகு கைவிட்டுப் பிரிபவன். அதாஅன்று - அது அல்லாமல். உரிதல் - உரிதுஅல் - உரியது அல்லாத. நலன் - அழகு.

காதல்கொண்டிருப்பதை எடுத்துரைக்கிறாள்; தலைவி மிகச் சீரும் சிறப்புமாக வளர்க்கப்பட்ட செல்வ மகள் என்பதையும் அவளுடைய பண்புநலனையும் எடுத்துரைக்கிறாள்; தம் ஊர் உள்ள இடத்தைச் சுட்டிக்காட்டுகிறாள்; இவ்வாறு கூறி அவனுடைய வேண்டுகோளுக்கு உடன்படுகிறாள்.

"தேரையும் ஏவலாளரையும் தொலைவிலே நிறுத்திவிட்டு இங்கே வந்து நின்றாய். நீயும் பெருந்தன்மை உடையவனாக இருக்கிறாய். பார்ப்பவர் வணங்கத் தக்க உடல்தோற்றத்தோடு இருக்கிறாய். ஆயினும் நெஞ்சம் அழிந்த நிலையை மேற்கொண்டு பல நாளும் இங்கே வந்து பணிவான சொற்களைத் திரும்பத் திரும்பச் சொல்கிறாய். இவளும் (தலைவியும்) குவளைமலர் போன்ற மை தீட்டிய கண் கலங்க உன்னிடத்துப் பெரிய காதல்மயக்கம் அடைந்திருக்கிறாள். தாய்வீட்டில் சுற்றத்தார் பாராட்டப் பேரன்போடு வளர்ந்த பெண்கள் ஆகையால், இவளும் இவளைப் போன்றவர்களும் ஓரளவு மிக்க மடம் உடையவர்கள். ஆகையால், இன்று இங்கு விரும்பாமல் சென்றருள்க. சிறிது தொலைவு சென்றால் அந்த மலர்ந்த புன்னைமரத்திற்கு மேலே தோன்றும் பனைமரத்திற்கு அப்பால் உள்ளது எங்கள் ஊர்; இடிபோன்ற முழக்கத்தோடு அலைகள் உடைந்து சிதறும் கடலை எல்லையாக உடைய எம்முடைய சிறிய நல்ல ஊர் அது."

தோழி :

***கடுந்தேர் இளையரொடு நீக்கி நின்ற***
***நெடுந்தகை நீர்மையை அன்றி நீயும்***
***தொழுதகு மெய்யை ; அழிவுமுந் துறுத்துப்***
***பன்னாள் வந்து பணிமொழி பயிற்றலின்***

குவளை உண்கண் கலுழ நின்மாட்டு
இவளும் பெரும்பே துற்றனள் ; ஓரும்
தாயுடை நெடுநகர்த் தமர்பா ராட்டக்
காதலின் வளர்ந்த மாதர் ஆகலின்
பெருமடம் உடையரோ சிறிதே ; அதனால்...
இன்றுஇவண் விரும்பா தீமோ ; சென்றுஅப்
பூவிரி புன்னை மீதுதோன்று பெண்ணைக்கு
ஊஉங்க ணஃதே தெய்ய...
உரும்இசைப் புணரி உடைதரும்
பெருநீர் வேலிஎம் சிறுநல் ஊரே.*

## 8. யான் ஒருத்தி மட்டுமோ ?

தலைவனும் தலைவியும் தினைப்புனத்தில் கண்டு பழகிய காதல்வாழ்வு ஒருவருக்கும் தெரியாத களவொழுக்கமாக இருந்துவந்தது. ஆனால் தலைவியோடு நெருங்கிப் பழகிய தோழிக்கு மட்டும் சில காரணங்களால் ஐயம் தோன்றியது. தலைவி தன்னோடு முன்போல் நெருங்கிப் பழகவில்லை என்பதையும், தன்னை விட்டு விலகித் தனியே இருந்து கவலையுறுகின்றாள் என்பதையும், விளையாட்டிலும் முன்போல் விருப்பம் இல்லை என்பதையும், உள்ளத்திலும் உடலிலும் சோர்வு அடைகின்றாள் என்பதையும் தோழி எண்ணிப்

*அக. 310. நக்கீரனார்.

கடுந்தேர் - விரைவாகச் செல்லும் தேர். நீர்மையை - தன்மை உடையாய். அழிவு - நெஞ்சு கலங்கல். பேதுற்றனள் - மயங்கினாள். ஓரும் - அசை. நகர் - வீடு. மடம் - இங்கே நாணம். விரும்பாதீமே - விரும்பாமல் இருந்தருள்க. ஊஉங்கண் - அப்பால். தெய்ய - அசை.

பார்த்து ஐயம் கொண்டாள். தலைவியே தன்னிடம் கூறு வாள் என்று எதிர்பார்த்தாள். மிகச் சோர்ந்து வருந்திக் கிடந்த நிலையில் ஒருநாள் தலைவியைக் கண்டு மெல்லக் காரணம் கேட்டாள்.

அப்போது தலைவி அவளிடம் உண்மையைக் கூறுகிறாள். உண்மையைக் கூறும்போதும், தனக்கும் தலைவனுக்கும் உள்ள உறவைக் கூறவில்லை. ஆயின், ஒருநாள் அவனைக் கண்டதாகவும், கண்ட நாள் முதல் தன்மனம் ஒருநிலைப்படவில்லை என்றும் குறிப்பாகவே புலப்படுத்துகிறாள்.

“தோழி! ஒருநாள் ஒருவன் அழகான வில்லைக் கையில் பற்றிக்கொண்டு, அம்பை ஆராய்ந்து எடுத்துக் கொண்டு, இவ்வழியே வந்தான். ‘யான் துரத்திவரும் யானை ஒன்று இவ் வழியில் வந்ததா?’ என்று கேட்டு நம் தினைப்புனத்தில் ஒரு பக்கமாக நின்றான். மலர்ந்த மாலை அணிந்த மார்பனைக் காட்சி அளித்தான். அவனை யான் மட்டும் காணவில்லை. அங்கிருந்த தோழிமார் பலரும் கண்டனர். ஆயினும் அவர்கள் பலரும் கவலை இல்லாமல் வாழ்கின்றார்கள். யான் ஒருத்தி மட்டும் இரவெல்லாம் படுக்கையில் கிடந்தவாறே கண்ணீர் சொரிந்து தோள் மெலிந்து வருந்துவது ஏனோ?”

தலைவி :

**உருவ வல்வில் பற்றி அம்புதெரிந்து**
**செருச்செய் யானை செல்நெறி வினைஅய்**
**புலர்குரல் ஏனல் புழையுடை ஒருசிறை**
**மலர்தார் மார்பன் நின்றோன் கண்டோர்**
**பலர்தில் வாழி தோழி! அவருள்**
**ஆரிருள் கங்குல் அணையொடு பொருந்தி**

*ஓர்யான் ஆகுவது எவன்கொல்*
*நீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே.**

## 9. வந்தார் அவர்

தலைவன் தலைவியைக் காண நள்ளிரவில் வந்தான். அவன் வருகையைத் தலைவியும் தோழியும் எதிர்பார்த் திருந்தனர். அவன் வந்து நின்றதை முதலில் அறிந்தவள் தோழியே. தலைவிக்கு அதைத் தெரிவிக்க எண்ணினாள். ஆயின், அதற்கு முன்பு, தாய் விழித்திருக்கின்றாளா அல்லது உறங்கிவிட்டாளா என்பதை அறிந்துகொள்ள முயன்றாள்.

தாய் உறங்கிவிட்டிருப்பதாக எண்ணினாள். ஆயினும் உண்மையாகவே ஆழ்ந்த உறக்கமா இல்லையா என்பதை அறிந்துகொள்வதற்காக ஒரு முயற்சி செய்தாள். "அம்மா" என்று கூப்பிட்டாள்; மற்றொரு முறையும் கூப்பிட்டாள். பதில் குரல் இல்லை. உடனே அமைதியான செய்தி ஒன் றைச் சொல்லிப் பார்க்கலாம் என்று ஒன்று கூறினாள். "நம் தோட்டத்தில் குளிர்ச்சியான பள்ளத்தில் நெருங்கி வளர்ந்த கூதளஞ் செடியின் தளிர்களில் விழும் அருவியின் இனிய ஒலி சிறிதளவாவது கேட்கிறதா அம்மா?" என்றாள். அதற் கும் தாயின் குரல் இல்லை. ஒருகால் மென்மையான உறக்க மாக இருக்கலாம், திடீரென விழித்துக்கொள்ளவும் கூடும் என எண்ணினாள். ஆழ்ந்த உறக்கமாக இருந்தால் திடுக்கி

---

*அக. 82, கபிலர்.

உருவ - அழகான. செரு - போர். புழை - வாயில். சிறை - பக்கம்.

டான செய்தியைக் கூறினும் எழ முடியாது என்பதைக் கருதி, முன் போல் அமைதியான செய்தியைக் கூருமல், திடுக்கிடான செய்தியைக் கூறினுள். " அம்மா ! நம் தோட்டத்தில் உள்ள அசோக மரத்தின் உயர்ந்த கிளையில் ஊசலாகக் கட்டிய கயிறு பாம்பு போல் தோன்றுவதால், அதைப் பாம்பு என்று கருதி மரம் அடியோடு முறியும்படியாக இடி இடித்து விழுந்ததே, கேட்டதா ?" என்ருள். அதற்கும் குரல் கொடுத்து விழிக்காததைக் கண்டு, தாய் ஆழ்ந்த உறக்கத்தில் இருத்தலை உணர்ந்தாள்.

தோழி :

*அன்ருய் வாழிவேண்டு அன்னை ! நம் படப்பைத்*
*தண்ணயத்து அமன்ற கூதளம் குழைய*
*இன்னிசை அருவிப் பாடும் என்னதூஉம்*
*கேட்டியோ ? வாழிவேண்டு அன்னை! நம் படப்பை*
*ஊட்டி அன்ன ஒண் தளிர்ச் செயலை*
*ஓங்குசினைத் தொடுத்த ஊசல் பாம்பென*
*முழுமுதல் துமிய உரும்எறிந் தன்றே ;*
*பின்னும் கேட்டியோ எனவும்அஃது அறியாள்*
*அன்னையும் கனைதுயில் மடிந்தனள்...*

இவ்வாறு தாய் ஆழ்ந்த உறக்கத்தில் கிடத்தலை அறிந்ததும் தோழி தலைவியிடம் தலைவன் வந்த செய்தியைத் தெரிவித்தாள். " தோழி ! தாயும் மிக்க துயிலில் ஆழ்ந்திருக்கின்ருள். மேலும், எல்லா உயிர்களும் உறக்கத்தில் ஆழ்ந்து சோர்ந்திருக்கின்ற பொழுது இந்த நள்ளிரவு. காதலர் வருவாராயின், அதற்கு உரிய நேரம் இதுவே என்று கவலையுற்று மெலிந்திருக்கும் நம்முடைய எண்ணம் பழுது ஆகாதபடி அவர் வந்துவிட்டார். வானத்தில் மேகங்கள் திரண்டு மழை பெய்தமையால் எங்கும் வெள்ளம் பரந்து ஓட, யானைக்

கன்று அந்த வெள்ளத்தின் சுழியில் இழுத்துக்கொண்டு போகப்பட்டதால், பெண் யானை ஆரவாரம் செய்து முழங்க, அதனோடு ஆண்யானையும் முழங்கி நீரில் துழவித் தேடு கின்ற பொல்லாத வழியில் அவர் வந்துள்ளார்; பாம்புச் செடி களை உடைய வழி அது ; செல்வோர் பகலிலும் அஞ்சுகின்ற வழி அது; அத்தகைய வழியில் நள்ளிரவில் வந்துள்ளார்'' என்று தெரிவித்தாள்.

தோழி :

**அன்னையும் கனைதுயில் மடிந்தனள் ; அதன்தலை**
**மன்னுயிர் மடிந்தன்றால் பொழுதே ; காதலர்**
**வருவ ராயின் பருவம் இதுஎனச்**
**சுடர்ந்திலங்கு எல்வளை நெகிழ்ந்த நம்வயின்**
**படர்ந்த உள்ளம் பழுதன் றாக**
**வந்தனர் வாழி தோழி அந்தரத்து**
**இமிழ்பெயல் தலைஇய இனப்பல கொண்மூத்**
**தவிர்வில் வெள்ளம் தலைத்தலை சிறப்பக்**
**களிறுகால் ஒய்யும் கடுஞ்சுழி நீத்தம்**
**புன்தலை மடப்பிடிப் பூசல் பலவுடன்**
**வெண்கோட்டு யானை விளிபடத் துழவும்**
**அகல்வாய்ப் பாந்தள் படாஅர்ப்**
**பகலும் அஞ்சும் பனிக்கடுஞ் சுரனே.***

*அக. 68, ஊட்டியார்.

படப்பை - தோட்டம். அயம் - பள்ளம். அமன்ற - நெருங் கிய. குழை - தளிர். பாடு - ஒலி. செயலை - அசோகு. ஊட்டி அன்ன - நிறம் ஊட்டினாற் போல் தோன்றும். முழுமுதல் - அடி மரம். துமிய - துண்டுபட. உரும் - இடி. எறிந்தன்று - எறிந்தது. கனை - மிக்க. மடிந்தன்று - மடிந்தது, சோர்ந்தது. எல்வளை - ஒளிஉடைய வளையல். இமிழ்பெயல் - இடிக்கும் மழை. தலைஇய - பெய்த. கொண்மூ - மேகம். தலைத்தலை - இடந்தோறும். ஒய்யும் -

# 10. கடமை மறந்தால்—?

தலைவன் தலைவியைத் தினைப்புனத்தில் கண்டு பழகிய பின் அவர்களிடையே காதல் வளர்ந்தது. தலைவன் பகலில் வந்து விடைபெற்றுச் சென்றபின், மறுநாள் பகலில் அவன் வரும்வரையில் தலைவி அவனையே எதிர்பார்த்து ஏங்கியிருந் தாள். தினைப்புனத்திற்குத் தலைவி வந்து சென்றது வெறும் பொழுதுபோக்கிற்காக அன்று. புனத்தில் தினைப்பயிர் கதிர் ஈன்றது முதல் அறுவடை வரையில் கிளிகள் வந்து கவராதவாறு காவல் புரியட்டும் என்றே தாய் அவளையும் தோழியையும் அனுப்பிவைத்தாள். ஆயின், தினைப்புனம் காக்கும் கடமையில் தலைவியின் நெஞ்சம் படியவில்லை. அவள்நெஞ்சம் தலைவனுடைய வருகையை நினைந்தே ஏங்கியது.

தோழி இதனைக் கண்டாள். தாய் அறிந்தால் வருந்து வாள் என்றும் கடிவாள் என்றும் தோழி உணர்ந்தாள். தலைவிக்கு அறிவுரை கூறித் திருத்த வேண்டும் என எண்ணி னாள். எவ்வாறு கூறுவது என்று தயங்கினாள். காதல் எத்தகையது, இளைஞரின் வாழ்க்கையில் அது எத்தகைய மாறுதலை விளைக்கவல்லது என்பவற்றை நன்கு அறிந்தவள் தோழி. ஆகவே கடிந்து கூறும் முறையில் என்ன கூறினும் பயன் விளையாது என்பதை உணர்ந்தாள். தலைவியும் தலை வனும் காதல்வாழ்க்கையே குறிக்கோளாகக் கொண்டு நடப் பதால், அதற்கு இடையூறு வரும் என்று எடுத்துரைத்

---

இழுத்துச் செல்லும். நீத்தம் - வெள்ளம். பூசல் - ஆரவாரம். பாந்தள் படார் - பாம்புச் செடி. பனிக் கடுஞ்சுரம் - நடுங்கத்தக்க கொடிய வழி.

ஊட்டி அன்ன என்று அசோகந் தளிரைக் குறிப்பிட்ட அடையின் சிறப்பால், புலவர் ஊட்டியார் எனப்பட்டார்.

தால்தான் அவர்களின் மனம் எண்ணித் தயங்கும் எனக் கருதினாள். தினைக் கதிர்கள் வீணாகின்றன என்றோ, கடமையைச் செய்தலே முதன்மையானது என்றோ, பெற்றோர் அறிந்தால் கடுமொழி கூறுவர் என்றோ, எந்த வகையில் எடுத்துரைத்தாலும் அவர்கள் பொருட்படுத்தமாட்டார்கள் என்பது அவளுக்குத் தெரிந்தது. அவர்கள் இயல்பாக நல்ல பண்பினர் எனினும், காதல் கடமையையும் மறக்கச் செய்யும் என்று தெளிந்தாள். ஆதலின், கிளிகள் தினை கவர்வதையோ, கடமைச் சிறப்பையோ, பெற்றோரின் கடுமொழியையோ எடுத்துரைக்காமல், அவர்களின் காதல் வாழ்க்கைக்கே இடையூறு நேரும் என்பதைப் புலப்படுத்துகிறாள். அதையும் எப்போது கூறுகிறாள்? தனியே தலைவிக்கு மட்டும் கூறின், அவள் என்ன செய்வாள்? தலைவனுடைய பொறுப்பு என வாளா இருப்பாள். தனியே தலைவனுக்கு மட்டும் கூறின், 'யான் என்ன செய்வேன்? தலைவியின் பொறுப்பு அது' என அமைதியாகச் செல்வான். இருவரும் ஒருங்கே இருக்கும்போது கூறினும், காதலின் மயக்கத்தால் உண்மை உணர மாட்டார்கள். ஆகவே நல்லதொரு வாய்ப்பு எது என்று எண்ணி, தக்க சமயத்தில் இருவரும் உணருமாறு கூறுகிறாள்.

தலைவன் தலைவியைக் காண வேண்டும் என்று வேலிப் புறமாக வந்து நின்றான். அவன் வந்து நின்றதைத் தோழி கண்டுகொண்டாள்; ஆயினும் காணாதவள் போல் நடிக்கத்தொடங்கினாள். இதுதான் தக்க வாய்ப்பு, இப்போது கூறினால் இருவர்நெஞ்சிலும் பதியும் என நம்பி எடுத்துரைக்கிறாள். தலைவன் வேலிக்கு அப்பால் இருந்து கேட்க, தலைவிக்கு மட்டும் உரிய அறிவுரைபோல் கூறுகிறாள்.

"அம்மா! உடலினின்றும் நீராமல் பொருந்தியுள்ள காதல் இருத்தலால், நான் என்ன சொல்லினும் அறியமாட்டாய். உன் தவறு அன்று; காதல் அத்தகையது. ஆயினும் சொல்லவேண்டியது என் கடமை; அதனால் சொல்கின்றேன். தினைக்கதிர்கள் முற்றி, கொய்வதற்கு முன்னமே பலவும் தட்டைகளாக நிற்கின்றன. (கிளிகள் கவர்ந்தமையால் அவ்வாறு ஆய்விட்டன). நீயோ, கிளிகளை ஓட்டாமல், பலவகை மணம் கமழும் மாலைகளை அணிந்து விரைந்து ஓடும் நாய்களோடு பல மலைகளிலும் வேட்டை மேற்கொண்டு செல்லும் தலைவனை நாடுவதோடு அமைந்துவிட்டாய். நீ அணிந்த மலர்மாலை அசையுமாறு எழுந்து எழுந்து கிளி ஓட்டும் தெளிந்த ஓசைகளை இடையிடையே எழுப்பி இடந்தோறும் சென்று காவல் காக்காவிட்டால், தாய் என்ன செய்வாள்? நம் மகளுக்குக் கிளி ஓட்டத் தெரியவில்லை என்று எண்ணி வேறு யாரையாவது தினைப்புனக் காவலுக்கு அனுப்பி நிறுத்துவாளானால், அதன்பிறகு தலைவனுடைய மலர்ந்த மார்பு நீ அடைய முடியாததாகிவிடும்."

தோழி:

*மெய்யின் தீரா மேவரு காமமொடு*
*எய்யாய் ஆயினும் உரைப்பல் தோழி;*
*கொய்யா முன்னும் குரல்வார்பு தினையே*
*இருவி தோன்றிய பலவே; நீயே*
*முருகுமுரண் கொள்ளும் தேம்பாய் கண்ணிப்*
*பரியல் நாயொடு பன்மலைப் படரும்*
*வேட்டுவன் பெறலொடு அமைந்தனை; யாழநின்*
*பூக்கெழு தொடலை நுடங்க எழுந்தெழுந்து*
*கிள்ளைத் தெள்விளி இடையிடை பயிற்றி*
*ஆங்காங்கு ஒழுகாய் ஆயின், அன்னை*

சிறுகிளி கடிதல் தேற்ருள் இவளெனப்
பிறர்த்தந்து நிறுக்குவள் ஆயின்
உறற்கரிது ஆகும் அவன் மலர்ந்த மார்பே.*

## 11. மறந்துவிட்டேனே

தலைவியும் தோழியும் காவல் காத்துவந்த தினைப் புனத்தில் கதிர்கள் முற்றி, அறுவடையும் முடிந்துவிட்டது. வீட்டார் அவர்களைத் தினைப்புனத்திற்கு அனுப்பவேண்டிய நிலைமை இல்லையாயிற்று. தலைவன் திருமணத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் எனத் தோழி வற்புறுத்த எண்ணிஞள். ஆயின் அவ்வாறு வற்புறுத்துவதற்கு ஏற்ற உரிமையான நிலைமை இன்னும் ஏற்படாமையால் தோழி தான் எண்ணியவாறு கூறத் தயங்கிஞள். எனினும், இனி அவர்களைத் தினைப்புனத்தில் காண முடியாது என்பதையும், தம் வீட்டருகே வந்து காணலாம் என்பதையும் அவனுக்குத் தோழி உணர்த்த வேண்டும். அவற்றை நேரில் கூறுவதை விட, தலைவியுடன் தான் பேசும் பேச்சில் குறிப்பிட்டு வருந்துவது போல் நடிப்பது மிக்க பயன் தரும் எனக் கருதிஞள். நேரில் கூறின், தலைவன் அவ்வளவாக அக்கறை கொள்ள மாட்டான்; தான் இல்லாதபோது இவ்

*28. பாண்டியன் அறிவுடைநம்பி.

மேவரு - பொருந்திய. எய்யாய் - அறியாய். குரல் - கதிர். இருவி - கதிர் இல்லாத தட்டை. முருகு - மணம். முரண் கொள்ளும் - ஒன்ருெடொன்று வேறுபடும். பரியல் - விரைந்து செல்லுதல். யாழ் - அசை. தொடலை - மாலை. நுடங்க - அசைய. தேற்ருள் - அறியாள். உறற்கு அரிது - அடைவதற்கு அரியது.

வளவு வருந்தினர்களே எனக் கண்டு உணர்ந்தால் மனம் இரங்கிக் கடமை உணர்வான். எதையும் நேரில் கூறி அறிவுறுத்துவதைவிட, மறைமுகமாக உணரச் செய்தல் நெஞ்சில் பதிவிக்கும் ஆற்றலுடையதாகும். மனத்தின் இயல்பு இத்தகையது. ஆதலின் தலைவனுடைய மனத்தை எவ்வாறேனும் மாற்றித் திருத்த வேண்டும் என்று முயலும் தோழி, அவன் இல்லாதபோது பேசுவது போல் நடித்து அவன் செவியில் விழுமாறு பின்வருவன கூறுகிறாள்.

" தலைவன் வேங்கை மாலையும் குவளை மாலையும் சூடிக்கொண்டு, வில்லை இடப்பக்கத்தே தாங்கிக்கொண்டு, சிறந்த அம்பை ஆராய்ந்து வலக்கையில் எடுத்துக்கொண்டு, துணையை நினைத்துத் தேடிக்கொண்டு இங்கு வருவது திண்ணம். வந்தால் இங்கு நம்மைக் காணமல் ஏமாற்றம் உறுவானே. அந்த இடத்தில் அசோக மரத்தில் உயர்ந்த கிளையில் கட்டிய கயிற்றால் ஆகிய ஊசல் இல்லாமை காண்பான். நாம் ஒருங்கே பாய்ந்து விளையாடும் சுனைப்பக்கம் செல்வான். அங்கு நாம் நீரில் விளையாடாத காரணத்தால், நீர் கலங்காமல் தெளிவாக விளங்கி நீலப் பூக்கள் கண் போல் மலர்ந்து அமைதியாக இருக்கும் காட்சியும் காண்பான். கிளி எடுக்க முடியாதபடி அவ்வளவு கனமான கதிர்களோடு இருந்த தினை அறுக்கப்பட்டுத் தட்டைகள் மட்டும் நிற்கும் காட்சியும் காண்பான். அவற்றைக் கண்டு கண்டு நெடிது நினைப்பான்; நினைத்துத் துன்புற்றுத் திரும்பிச் செல்ல முடியாமல் வருந்துவானே? அந்தோ என்ன தவறு செய்தேன்! என் அழகு கெடுவதாக! வெண்ணிற அருவி சூடிய உயர்ந்த மலையில் கூப்பிடு தூரத்தில் உள்ளது எம்முடைய ஊர் என்று நம் இருப்பிடத்தை

அறிவித்திருக்க வேண்டும். அறிவிக்க மறந்துவிட்டேனே!''

இவ்வாறு கூறின், முதல்முதலில் தலைவன் வேட்டை மேற்கொண்டு அப்பக்கமாக வந்தது அவனுக்கு நினைவு வரும். பிறகு ஊசலாடிய போதும் நீரில் விளையாடிய போதும் தினைக் காவல் புரிந்தபோதும் அவன் வந்து சென்றதும் நினைவுக்கு வரும். அந்நாட்களில் தோழி அவனுக்குச் செய்த உதவியும் நினைவுக்கு வரும். அவற்றை எல்லாம் நினைத்தால் நன்றியுணர்வு கொண்டு தன்விருப்பத்திற்கு இணங்கித் திருமண ஏற்பாடு செய்வான் என்று கருதியே தோழி இவ்வாறு கூறுகிறாள்.

தோழி :

**விரியிணர் வேங்கை வண்டுபடு கண்ணியன்**
**தெரியிதழ்க் குவளைத் தேம்பாய் தாரன்**
**அம்சிலை இடவ தாக வெஞ்செலல்**
**கணைவலம் தெரிந்து துணைபடர்ந்து உள்ளி**
**வருதல் வாய்வது வான்தோய் வெற்பன் ;**
**வந்தன னாயின் அம்தளிர்ச் செயலைத்**
**தாழ்வில் ஓங்குசினைத் தொடுத்த வீழ்கயிற்று**
**ஊசல் மாறிய மருங்கும் பாய்புஉடன்**
**ஆடா மையின் கலும்பில தேறி**
**நீடுஇதழ் தலைஇய கவின்பெறு நீலம்**
**கண்என மலர்ந்த சுனையும் வண்பறை**
**மடக்கிளி எடுத்தல் செல்லாத் தடக்குரல்**
**குலவுப்பொறை இறுத்த கோல்தலை இருவி**
**கொய்துஒழி புனமும் நோக்கி நெடிதுநினைந்து**
**பைதலன் பெயரலன் கொல்லோ ஐதேய்த்து ;**
**அயவெள் ளருவி சூடிய உயர்வரைக்**

கூஉங்கண் ணஃதுளம் ஊர்என
ஆங்குஅதை அறிவுறல் மறந்திசின் யானே.*

## 12. எனதே தவறு

திருமணத்திற்கு முன்பு தலைவியைக் காண்பதற்காகத் தலைவன் நள்ளிரவில் புறப்பட்டு இடர் மிகுந்த வழியில் வருதலால் தலைவிக்கு வருத்தம் மிகுந்தது. இதை உணர்ந்த தோழியும் மிக வருந்தினாள். திருமணத்திற்கு ஏற்பாடுகள் செய்து விரைவில் இல்லறம் ஏற்குமாறு தலைவன் முயல வேண்டும் என்பது அவள்கருத்து. ஆயின் அந்தக் கருத்தை நேரே அவனிடம் கூறுவதால் பயன் இல்லை என்று உணர்ந்து, ஒருநாள் அவன் வேலிப்புறமாக வந்து நின்றபோது, அவனைக் காணாதவள்போல் நடித்து, அவன் செவியில் விழுமாறு தலைவியைப் பார்த்துத் தன் வருத் தத்தை எடுத்துரைக்கிறாள்.

" தோழி ! நள்ளிரவு இது. மின்னல் இருளைக் கிழிப் பது போல் மின்னுகின்றது. மழை பெருமழையாய்ப் பெய் கிறது. தலைவன் வரும் வழி பொல்லாதது. அங்கே மின்

*அகநானூறு, 38. வடம வண்ணக்கன் பேரி சாத்தனார்.

இணர் - பூங்கொத்து. கண்ணி, தார் - மாலைவகை. சிலை - வில். கணை - அம்பு. தெரிந்து - ஆராய்ந்து. செயலை - அசோக மரம். சினை - கிளை. மருங்கு - பகுதி. கலுழ்புஇல் - கலங்கல் இல்லாதனவாக. தேறி - தெளிந்து. தலைஇய - பொருந்திய. பறை - பறத்தல். குரல் - கதிர். பொறை - சுமை. பைதலன் - துன்பம் உடையவனாய். பெயரலன்கொல் - திரும்பானோ. ஐ - அழகு. தேய்கு - தேய்க. அயம் - சுனை. கூஉம்கண்ணது - கூவும் தொலைவினது.

மினிப் பூச்சிகள் மொய்த்திருக்கும் புற்றுக்களில் ஆண்கரடி கள் புற்றுஞ் சோற்றைத் தோண்டி எடுக்கும் நேரம் இது. அந்தப் புற்றுக்களில் மொய்க்கும் மின்மினிகள், காய்ச்சிய இரும்பை அடிக்கும்போது சிதறுகின்ற பிதிர்களைப் போல் ஒளி வீசித் தோன்றும். அந்தக் கரடியோ உலைக்களத்தின் அருகே அமர்ந்து இரும்புவேலை செய்யும் கொல்லன் போல் தோன்றும். இத்தகைய இடர்களுடைய, போவதற்கு அரிய வழியாகும் அது. அவ்வழியில் உள்ள ஆறுகளில், நினைப்ப வரும் நடுங்கத் தக்க கொடிய முதலைகள் உள்ளன. அந்த ஆறுகளில் உள்ள வெள்ளமோ, ஓடக்கோல் மறையும்படி யான பெருவெள்ளமாய்க் கற்களில் மோதி ஒலிக்கும். இத்தகைய வழிக்கு அஞ்சுவோம் என்றும், தனியாகச் செல்கின்றேம் என்றும் எண்ணுமல் வருகின்றார் தலைவர். மேகம் தவழும், உயரமான மூங்கில்கள் அசைந்து ஒலிக்கும் பக்கமலைகளில் இந்த வழி அமைந்திருக்கின்றது. அங்கே இந்த நேரத்தில், கருவுற்ற பெண்புலியின் பசியைத் தீர்ப்ப தற்காக, பெரிய யானையைக் கொன்ற புலி அதை இழுத்துச் செல்லும். பாம்பு தன் மணியை உமிழ்ந்துவிட்டு மேய்வ தற்குச் செல்வதால், அந்த மணியின் ஒளி அந்தப் புலிக்கு விளக்கொளி போல் உதவியாகும். அப்படிப்பட்ட வழியில் கூர்மையான கற்கள் இருப்பதால், அதில் நடப்பது வாள் மேல் நடப்பது போல் இருக்கும். நினைப்பவர் நடுங்கும் படியான அந்தக் கல்வழியில் வருகின்றார். நம்மேல் அருள் கொண்ட நெஞ்சத்தோடு வருகின்றார். வேலே தமக்குத் துணையாக வருகின்றார். அவர்மேல் குற்றம் கூறிப் பயன் இல்லை. அவரும் கொடியவர் அல்லர். அவர் வருவதற்குக் காரணமான நீயும் தவறு செய்யவில்லை.

உனக்குத் தீராத் துன்பத்தைச் செய்த யான்தான் தவறு உடையேன்.''

தோழி :

*இருள்கிழிப் பதுபோல் மின்னி வானம்*
*துளிதலைக் கொண்ட நளிபெயல் நடுநாள்*
*மின்மினி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்*
*பொன்எறி பிதிரின் சுடர வாங்கிக்*
*குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை*
*இரும்புசெய் கொல்எனத் தோன்றும் ஆங்கண்*
*ஆறே அருமர பினவே ; யாறே*
*சுட்டுநர்ப் பனிக்கும் சூருடை முதலைய ;*
*கழைமாய் நீத்தம் கல்பொருது இரங்க*
*அஞ்சுவம் தமியம் என்னாது மஞ்சுசுமந்து*
*ஆடுகழை நரலும் அணங்குடைக் கவாஅன்*
*ஈருயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய*
*இருங்களிறு அட்ட பெருஞ்சின உழுவை*
*நாம நல்லராக் கதிர்பட உமிழ்ந்த*
*மேய்மணி விளக்கின் புலர ஈர்க்கும்*
*வாள்நடந் தன்ன வழக்கருங் கவலை*
*உள்ளுநர் உட்கும் கல்லடர்ச் சிறுநெறி*
*அருள்புரி நெஞ்சமொடு எஃகுதுணை யாக*
*வந்தோன் கொடியனும் அல்லன் ; தந்த*
*நீதவறு உடையையும் அல்லை ; நின்வயின்*
*ஆனா அரும்படர் செய்த*
*யானே தோழி தவறுடை யேனே.**

---

*72. ஏருமை வெளியனார் மகனார் கடலனார்.

நளி பெயல் - மிக்க மழை. நடுநாள் - நள்ளிரவு. முரவு வாய் - சிதைந்த வாய்ப்புறம். பொன் - இரும்பு. குரும்பி - புற்றாஞ் சோறு. ஏற்றை - ஆண் கரடி. கழை - ஓடக்கோல். மாய் - மறையும். நீத்தம் - வெள்ளம். இரங்க - ஒலிக்க. அணங்குடைக்

## 13. பல தடை

தலைவனும் தலைவியும் களவொழுக்கத்தில் ஒருவரை ஒருவர் கண்டு பழகுவதற்கு எவ்வளவோ இடையூறுகள் இருந்தன. அந்த இடையூறுகள் அவர்களின் காதலை மேன்மேலும் வளர்த்துவந்தன. திருமணம் செய்து கொண்டு வாழும் இல்வாழ்க்கையே தக்கது என்ற எண்ணம் அவற்றால் தூண்டப்பெற்றுவந்தது. தலைவனும் திரு மணம் செய்துகொள்ள முயன்றான். ஆயினும் முயற்சி போதிய அளவுக்கு இல்லை. அவன் விடாது முயல வேண் டும் என்ற ஆர்வம் தலைவிக்கும் தோழிக்கும் ஏற்பட்டது.

ஒருநாள் இரவு தலைவன் வேலிப்புறமாக வந்துநின்ற போது, அவன் மறைந்திருந்து கேட்குமாறு, தலைவி தோழிக்கு உரைப்பவள் போல் அந்த இடையூறுகளைக் கோவையாக எடுத்துக்கூறுகிறாள்.

"தோழி! கள் மழைபோல் மிகுதியாக உடைய இந்த ஆரவாரமான ஊர் அமைதியாக உறங்குவதே இல்லை. திருவிழா இல்லாதபோதும் அமைதி இல்லாமல் ஆரவாரம் செய்யும் ஊர் இது. ஆகவே இராக்காலத்தில் யாரும் அறியாமல் தலைவர் வந்து நம்மைக் காண்பது எவ்வாறு? கடைத்தெருவும் மற்றத் தெருக்களும் ஒலியில்லாமல் அடங்கிய போதிலும், வலிய குரலும் கடுஞ் சொல்லும் உடைய அன்னை உறங்குவதில்லை. பிணித்துக்கொள்ளும் சிறை போன்ற அன்னை ஒருகால் உறங்கிவிட்டாள் என்றா லும், உறங்காத கண்களை உடைய ஊர்க்காவலர் விரைந்து வந்து காவல் புரிவார்கள். வேல் ஏந்திய அந்தக் காவலர்

---

கவான் - தெய்வம் உள்ள பக்க மலை. பிணவு - பெண்புலி. வயவு - வேட்கை. நாமம் - அச்சம். எஃகு - வேல். படர் - துன்பம்.

உறங்கிய போதிலும், கூரிய பல்லும் சுருண்ட வாலும் உடைய நாய் உறங்காமல் குரைக்கும். ஓயாது ஒலிசெய்யும் வாயை உடைய நாய் அமைதியாய் அடங்கிய நிலையில், பகல் போய் நிலவு ஒளி பரப்பி வானில் நிறைமதி நின்று விளங்கும். அந்தத் திங்கள் மேற்குமலையைச் சார்ந்து இருள் மிகுதியாகப் பரவும் நிலை வந்தால், வீட்டெலியைப் பிடித்துத் தின்னும் வலிய வாயை உடைய கூகை, பேய் திரியும் நள்ளிரவில் மனம் அஞ்சி அழியுமாறு கத்தும். அந்த ஆண்கூகையும் அமைதியுற்றால், வீட்டுச் சேவல் பெரிய குரல் எழுப்பிக் கூவும். இடையூறுகளாகிற இவை எல்லாம் இல்லாமல் ஒருநாள் இரவு வாய்க்குமானால், அன்று இரவு நிலையற்ற நெஞ்சம் உடைய தலைவர் வாராமல் நின்று விடுவார். அதனால், நம் களவொழுக்கம் பல இடையூறுகளை உடையதாக இருக்கின்றதே !"

தலைவி :

இரும்பிழி மாரி அழுங்கல் மூதூர்
விழவுஇன் றாயினும் துஞ்சா தாகும் ;
மல்லல் ஆவணம் மறுகுடன் மடியின்,
வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள் ;
பிணிகோள் அருஞ்சிறை அன்னை துஞ்சின்
துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர் ;
இலங்குவேல் இளையர் துஞ்சின், வைஎயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும் ;
அரவவாய் ஞமலி மகிழாது மடியின்,
பகல்உரு உறழ நிலவுக்கான் றுவிசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்றுவிரி யும்மே ;
திங்கள் கல்சேர்பு கனைஇருள் மடியின்,
இல்எலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங்கு யாமத்து அழிதகக் குழறும் ;

வளைக்கண் சேவல் வாளாது மடியின்,
மனைச்செறி கோழி மாண்குரல் இயம்பும் ;
எல்லாம் மடிந்த காலை ஒருநாள்
நில்லா நெஞ்சத்து அவர்வா ரலரே, அதனால்...
பல்முட் டின்றால் தோழிநம் களவே.*

## 14. தளரடி தாங்க

தலைவன் இராக்காலத்தில் கடந்து வரும் மலைவழி மிகப் பொல்லாதது. அந்த வழியின் தீங்குகளை நினைத்து நினைத்துக் கவலையுற்ற தோழி, தலைவனை வாராமல் தடுக்க வேண்டும் என்றே துணிந்தாள். தலைவனைக் கண்டு மகிழும் இன்பத்தைவிட, அவன் வரும் வழியில் உள்ள தீங்குகளை நினைந்து கலங்கும் துன்பமே மிகுதி என்று உணர்ந்து, அதைத் தலைவனுக்கு உணர்த்த விரும்பினாள். ஒவ்வொரு நாள் இரவும் அவன் வருகையை எதிர்பார்த்து ஏங்கும் தன் நெஞ்சம் வழியின் தீங்குகளை நினைந்து, அந்த மலைவழியில் சென்று அலைவதாகக் கூறக் கருதினாள். மிக்க நயமான முறையில், அவன் வேலிப்புறமாக வந்து நின்றபோது, தோழிக்குக் கூறுவாள்போல் பின்வருமாறு கூறுகிறாள் :

---

*122. பரணர்.

இரும்பிழி - மிக்க கள். அழுங்கல் - ஆரவாரம். மல்லல் - வளம். ஆவணம் - கடைத்தெரு. மறுகு - தெரு. இளையர் - ஏவலாளர் ; இங்கே காவலர். வை - கூர்மை. எயிறு - பல். தோகை - வால். ஞாளி - நாய். அரவம் - ஒலி. உறழ - போல. கல் - மலை. கனை - மிக்க. வல்சி - உணவு. கூகை - கோட்டான். கழுது - பேய். முட்டு - தடை, இடையூறு.

"தோழி! மன்றம் ஒலி அடங்கி, மனையும் அமைதி யுற்றது. கொன்றாற் போன்ற கொடுமையோடு இன்று நள்ளிரவு வருகின்றது; வந்தால் காதல் மிகுந்து கடலை விட மிகுதியாகப் பரவிக் கரை கடந்து செல்லும். என்ன காரணமோ, அறியேன், தோழி. யான் மயங்கி இந்த நிலையில் இருக்க, என் நல்ல நெஞ்சம் என்னையும் கலந்து கேட்காமல் தோழியாகிய உன்னையும் கேட்காமல், கைகடந்து சென்றது! குறுங்காடாகி இருண்ட நெருங்கிய சிறிய மலைப் பகுதியில், (சிறிய சுனையில் மலர்ந்த குவளைமலர்களைச் சூடிக் கொண்டு) தலைவன் வரும் வழி - மலைமேல் உள்ள அந்தச் சிறிய வழி - யானை முதுகில் உள்ள கயிற்றுத் தழும்பு போன்றது. அங்கே மழை பெய்து நீர் பரந்து செல்லும். செல்ல முடியாத நெருக்கமான இடங்களில் படுகுழிகள் உள்ள வழியில் இருளில் வருகின்றார் அவர். அவர் மிதிக்கும் இடத்தைப் பார்த்து, அவருடைய அடி தளருமானால் அந்த அடியைத் தாங்கிக்கொள்வதற்காக என் நெஞ்சு இப்போது அங்கே சென்றிருக்கிறதே:"

தலைவி:

மன்றுபாடு அவிந்து மனைமடிந் தன்றே;
கொன்றோ ரன்ன கொடுமையோடு இன்றே
யாமம் கொளவரின் கனைஇக் காமம்
கடலினும் உரைஇக் கரைபொழி யும்மே;
எவன்கொல் வாழி தோழி? மயங்கி
இன்னம் ஆகவும் நன்னர் நெஞ்சம்
என்னொடும் நின்னொடும் சூழாது கைம்மிக்கு
இறும்புபட்டு இருளிய இட்டருஞ் சிலம்பில்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கான நாடன் வரூஉம் யானைக்

*கயிற்றுப்புறத்து அன்ன கல்மிசைச் சிறுநெறி*
*மாரி வானம் தலைஇ நீர்வார்பு*
*இட்டருங் கண்ண படுகுழி இயவின்*
*இருளிடை மிதிப்புழி நோக்கிஅவர்*
*தளரடி தாங்கிய சென்றது இன்றே.*✻

## 15. துன்பமான வழி

தலைவன் இரவில் தீங்கு நிறைந்த மலைவழியில் வருவதை நினைந்து நினைந்து கலங்கியதால் தலைவி மெலிந்தாள். அவள் மெலிவைப் பற்றிக் கவலையுற்ற தாய் தெய்வக் குற்றம் என்று எண்ணி வேலனையும் கட்டுவிச்சியையும் வீட்டிற்குத் தருவித்துத் தெய்வத்தை வழிபடக் கருதினாள். வேலிப்புறமாக நிற்கும் தலைவனுக்கு இந்தச் செய்தியை மறைமுகமாகத் தெரிவித்தால், அவன் விரைவில் மணம் செய்துகொள்ள முயல்வான் என்று நம்பி, அவ்வாறே தெரிவித்தாள் ; தோழிக்கு உரைப்பவள் போல் எடுத்துக் கூறுகிறாள்.

" அன்பு மிக்க தோழி ! யான் சொல்வதைக் கேள். என் கண்களில் நீர் ததும்ப யான் சிறிது வருந்தித் துன்புற்றேன். அதைக் கண்ட அன்னை வேறொரு காரணம் என்று

---

*128. கபிலர்.

மன்று - மன்றம். பாடு - ஒலி. மடிந்தன்று - மடிந்தது - அடங்கியது. கனைஇ - மிகுந்து. உரைஇ - பரவி. இன்னம் - இத்தன்மையேம். சூழாது - கலந்து எண்ணாது. கைம்மிக்கு - வரம்பு கடந்து. இறும்பு - சிறு காடு. இட்டு - இடுக்கு - நெருக்கு. கல்மிசை - மலைமேல். தலைஇ - ஏற்பட்டு - பெய்து. இயவு - வழி.

ஐயமுற்றாள். அதனால் வேப்பிலையோடு நீலப்பூக்களைச் சூடி, இனிய இசைக் கருவிகள் ஒலிக்க, கையால் தொழுது, அச்சம் பொருந்திய சிறப்பை உடைய முருகனை வீட்டிற்குத் தருவித்து, அவனுடைய கடப்ப மாத்தையும் யானையையும் பாடி, அசைந்து அசைந்து, பனங்தோடும் கடம்ப மலரும் கையில் கொண்டு, இரவெல்லாம் வேலனும் கட்டுவிச்சியும் ஆடி வழிபட ஏற்பாடு செய்கின்றாள். என் துன்பம் தீர்வதற்காக அவர்கள் அவ்வாறு ஆடுதல் நல்லதோ ? என் துன்பத்திற்குக் காரணம் என் நெஞ்சம் வருந்தி நினைந்த நினைவே ஆகும். திருமணம் செய்து கொள்வதாக உன்னிடம் நெடுங் காலமாக உறுதி கூறினார் தலைவர். அவர் இரவுக்குறியை நாடி வருகின்ற நள்ளிரவில் மலையுச்சியில் வழி தவறிப் போகுமாறு பரவிய மிக்க இருளில் அரிய கல் பிளப்புக்களை உடைய அந்தத் தீமையான நெடிய வழியையே என் நெஞ்சம் நினைந்து வருந்துகின்றது.''

தலைவி :

**இகுளை ! கேட்டிசின் காதலந் தோழி !**
**குவளை உண்கண் தெண்பனி மல்க**
**வறிதுயான் வருந்திய செல்லற்கு அன்னை**
**பிறிதொன்று கடுத்தனள் ஆகி வேம்பின்**
**வெறிகொள் பாசிலை நீலமொடு சூடி...**
**ததும்புசீர் இன்னியம் கறங்கக் கைதொழுது**
**உருகெழு சிறப்பின் முருகுமனைத் தரீஇக்**
**கடம்பும் களிறும் பாடி நுடங்குபு**
**தோடும் தொடலையும் கைக்கொண்டு அல்கலும்**
**ஆடினராதல் நன்றோ ? நீடு**
**நின்றெடு தெளித்த நன்மலை நாடன்**

*குறிவரல் அரை நாள் குன்றத்து உச்சி*
*நெறிகெட வீழ்ந்த துன்னருங் கூரிருள்...*
*இன்னா நீளிடை நினையும்என் நெஞ்சே !**

## 16. வீண் முழக்கமோ ?

தலைவன் திருமணம் செய்துகொள்ளாமல் காலம் நீட்டித்தவாறே, இரவில் தலைவியைக் காண வந்துகொண்டிருந்தான். ஒரு நாள் அவன் அவ்வாறு இரவில் வந்து வேலிப்புறமாக நின்றான். தோழி அவனைப் பார்த்தாள். அப்போது அவளைத் தாய் கண்டு ஐயுற்றாள். தான் தலைவனைக் காண முயன்றது தாய்க்குத் தெரியாதவாறு மறைக்க வேண்டும் என்று அதற்கு உரிய வழியை ஆராய்ந்தாள். அப்போது வானத்தில் கருமுகில்கள் திரண்டு மின்னிக்கொண்டும் இடித்துக்கொண்டும் இருந்தன. இதுவே தக்க வழி என்று, வானத்து முகில்களைப் பார்ப்பவள் போல் பார்த்துவிட்டு உள்ளே திரும்பினாள். மழையைப் பார்த்து ஏதோ சொல்பவள் போல் அதை விளித்துப்

---

*138. எழுஉப்பன்றி நாகன் குமரனார்.

இகுளை - தோழி. கேட்டிசின் - கேட்பாயாக. உண்கண் - மை தீட்டிய கண். தெண்பனி - தெளிந்த நீர் - கண்ணீர். மல்க - நிறைய. வறிது - சிறிது. செல்லல் - துன்பம். கடுத்தனள் - ஐயுற்றாள். வெறி - மணம். பாசிலை - பச்சை இலை. ததும்பு - ஒலிக்கும். உரு - அச்சம். நுடங்குபு - அசைந்து. அல்கலும் - இரவு முழுதும். தெளித்த - தெளியுமாறு கூறிய. அரை நாள் - நள்ளிரவு. துன் அரு - நெருங்க முடியாத. நீள் இடை - நீண்ட வழி.

பேசினுள். அதனுல் தாயின் ஐயம் தீரும் என்று நம்பினுள். அதே நேரத்தில் வேலிப்புறமாகக் காத்திருக்கும் தலைவனோடு பேசியது போலவும் அவனுக்கு அறிவித்தது போலவும் தன் பேச்சு இருக்க வேண்டும் என எண்ணினுள். ஏற்ற சொற்களால் திறம்படக் கூறுகிறுள். ஓர் அம்பில் இரண்டு குறி வாய்த்தாற் போல், மழையைப் பார்த்துக் கூறிய சொல்லே தலைவனுக்கும் அறிவுரையாக முடிகிறது.

" அரிய போர்க்களத்தில் எதிர்க்கும் பெருஞ் செயல் வல்ல வீரர்கள் உறையிலிருந்து எடுத்த வாள் போல் விளங்கும் மின்னல்தொகுதியோடு, நாள்தோறும் பயன் இல்லாமல் ஆரவாரம் செய்கின்றுயோ ? அல்லது, பொன் போல் மலர்ந்த வேங்கைமலர்மாலையை அணிந்து, சிறப்புற்ற ஆயத்தாரோடு அழகுற நடந்து, தழலை வளைத்துச் சுற்றியும், தட்டை அடித்துத் தட்டியும், அசோகின் தழையால் அமைத்த தழையாடை உடுத்தும், குறமகளாகிய இவள் (தலைவி) காவல் காக்கும் தினைப்புனத்தை மழை பெய்து காப்பாற்றுவாயோ ? (அல்லது, வீண் ஆரவாரம் செய்து நீங்குவாயோ ") :

தோழி :

**அருஞ்சமத்து எதிர்ந்த பெருஞ்செய் ஆடவர்**
**கழித்தெறி வாளின் நளிப்பன விளங்கும்**
**மின்னுடைக் கருவியை ஆகி நாளும்**
**கொன்னே செய்தியோ அரவம் ? பொன்என**
**மலர்ந்த வேங்கை மலிதொடர் அடைச்சிப்**
**பொலிந்த ஆயமொடு காண்தக இயலித்**
**தழலை வாங்கியும் தட்டை ஓம்பியும்**
**அழலேர் செயலை அந்தழை அசைஇயும்**

குறமகள் காக்கும் ஏனல்
புறமும் தருதியோ வாழிய மழையே.*

'குறமகள் (தலைவி) காக்கும் தினைப்புனத்தைக் காப்பாற்றுவாயோ' என்ற கேள்வி, தலைவனை நோக்கி, 'தலைவி போற்றும் காதலைக் காப்பாற்றும்வகையில் திருமணம் செய்துகொண்டு இல்லறம் நடத்துவாயோ?' என்னும் குறிப்பை உணர்த்தியது. 'நாளும் வீணாக ஆரவாரம் செய்து கழிக்கின்றாயோ' என்ற வினா, 'நாள்தோறும் திருமணம் செய்துகொள்வதாக வெறும் பொய் சொல்லி ஏமாற்றிக் காலம் கழிப்பாயோ' என்ற குறிப்பை உணர்த்தியது. இவ்வாறு தலைவனுக்கு அறிவுரையாகப் பயன்படுமாறு தோழி திறம்படக் கூறியது போற்றத் தக்கது.

## 17. இன்னும் உள்ளேன்

தலைவன் வேலிப்புறமாக வந்து நின்றபோது, அவனைக் காணாதவர்கள் போல் தோழியும் தலைவியும் பேசத் தொடங்கினர். அவன் திருமணம் செய்துகொள்ள முயலுமாறு மறைமுகமாகத் தூண்ட வேண்டும் என்றே இவ்வாறு பேசினர். தாம் பேசிக்கொள்வதை வேலிக்கு அப்பாலிருந்து கேட்டுத் தாம் படும் துன்பத்தை உணர்ந்து கடமையைச் செய்வான்

*188. வீரை வெளியன் தித்தனார்.

சமம் - போர். செய் - செயல். நளிப்பன - செறிவு உடையனவாகி. கருவி - தொகுதி. கொன்னே - வீணே. அரவம் - ஆரவாரம். தொடர் - மாலை. அடைச்சி - சூடி. காண்தக - காட்சி பொருந்த. இயலி - இயங்கி. அழல் ஏர் - நெருப்புப் போன்ற அழகுள்ள. அசைஇ - உடுத்து. ஏனல் - தினை.

என்று கருதி நடித்தனர். முதலில் தோழியே பேசத் தொடங்கினாள். தலைவன் பிரிந்த காலத்தில் எய்தும் தனிமைத்துயர், அன்னை சினம் கொண்டு பார்க்கும் பார்வை, வாடைக்காற்று வீசும் பனிக்காலத்து மாலைப்பொழுது இவை எல்லாம் துன்புறுத்துவன என்பதைத் தோழி எடுத்துக் கூறித் தலைவியின் நிலைமைக்காக வருந்துவது போல் பேசினாள். அதற்கு விடையாகத் தலைவி கூறும்போது, தலைவன் கொடுத்த வாக்குறுதியையும், வாக்குறுதியை மறந்து அவன் இப்போது பிரிந்து வாழ்வதையும் எடுத்துரைக்கிறாள். தான் உயிரோடு வாழ முடியாமல் வருந்துவதாகவும், தலைவனுடைய மலையின் உச்சி கண்ணுக்குப் புலப்படுவதால் அதைக் கண்டு கண்டு உயிர் தாங்கிக்கொண்டிருப்பதாகவும் கூறுகிறாள்.

"பெரிய மலைநாட்டுக்கு உரியவனாகிய நம் தலைவன் பிரிந்ததனால் நேர்ந்த தனிமைத் துயரமும், சினங்கொண்ட அன்னையின் மாறுபட்ட பார்வையும், வாடைக்காற்று வீசும் பனிக்காலத்தில் ஒளி பொருந்திய மண்டலம் மழுங்கக் கதிரவன் மேற்குக் கடலைச் சேரும் துன்பம் மிக்க மாலைக் காலமும் ஆகிய எல்லாம் வருந்தித் துயரம் செய்ய, நீ எவ்வாறு இவற்றைத் தாங்கிக்கொண்டு வாழ்கின்றாயோ" என்று சொல்கிறாய். தோழி! பிரிய மாட்டேன் என்று உறுதிமொழி கூறி நம்மைத் துறந்து சென்ற தலைவர் நம்மை நினைக்காவிட்டாலும் யான் உயிரோடு இருக்கின்றேன். அவருடைய நாட்டில் (மிக்க வலிமை பொருந்திய தெய்வத்தை உடைய) நீண்ட பெரிய மலையில் இனிய ஓசை உடைய அருவியைச் சூடிய வான் அளாவிய உச்சி என் கண்ணுக்குத் தோன்றுவதால், அதன் வாயிலாக அவரை நினைத்து நினைத்து உயிருடன் இருக்கின்றேன்."

தலைவி :

பெருங்கல் நாடன் பிரிந்த புலம்பும்
உடன்ற அன்னை அமரா நோக்கமும்
வடந்தை தூக்கும் வருபனி அற்சிரம்
சுடர்கெழு மண்டிலம் மழுங்க ஞாயிறு
குடகடல் சேரும் படர்கூர் மாலையும்
அனைத்தும் அடூஉநின்று நலிய நீமற்று
யாங்கனம் வாழ்தி என்றி தோழி :
நீங்கா வஞ்சினம் செய்துநத் துறந்தோர்
உள்ளார் ஆயினும் உளனே அவர்நாட்டு...
கடுந்திறல் அணங்கின் நெடும்பெருங் குன்றத்துப்
பாடின் அருவி சூடி
வான்தோய் சிமையம் தோன்ற லானே.*

## 18. அவன்மலை நீர்

தலைவன் திருமணம் செய்துகொள்ளாமல் காலம் நீட்டித்து வந்தான். அவன் வந்தபோது மகிழ்ந்து, பிரிந்த போது வருந்தினாள் தலைவி. பிரிவாற்றாமல் வருந்தும் துன்பமே மிகுதியாக இருக்கக் கண்ட தோழி, அவனுக்கு

---

*378. காவட்டனார்.

கல் - மலை. புலம்பு - தனிமைத் துயர். உடன்ற - சினம் கொண்ட. அமரா - பொருந்தாத. வடந்தை - வாடைக்காற்று. தூக்கும் - அசைக்கும், வீசும். அற்சிரம் - பனிக்காலம். குட கடல் - மேற்குக் கடல். படர் - நினைத்துத் துன்புறுதல். கூர் - மிக்க. அடூஉநின்று - வருத்தி. உளன் - உளேன் - இருக்கின்றேன். கடுந்திறல் - மிக்க வலிமை. அணங்கு - தெய்வம். பாடு இன் - இசை இனிமை உள்ள. சிமையம் - உச்சி. தோன்றலான் - தோன்றுவதால்.

அதை அறிவுறுத்த விரும்பினாள். தலைவன் சிலநாள் வாராமல் நின்று, பிறகு ஒருநாள் இரவில் வேலிப்புறமாக வந்து நின்றபோது, அவனைக் காணாதவள்போல் நடித்து, தலைவியை நோக்கிச் சில சொற்கள் கூறுகிறாள். வானத்தைப் பார்ப்பவள்போல் பார்த்து, மலையில் மேகம் சூழ்ந்திருப்பதைக் குறிப்பிடுகிறாள். அன்று இரவு மழை பெய்யும் என்றும், பெய்யும் மழையால் அருவியில் நீர் மிகுந்துவரும் என்றும், அது அவன் மலையிலிருந்து வரும் அருவி ஆகையால் அவன்பிரிவால் வருந்துவோர் அந்த நீரில் குளித்தாவது துயரம் தணியலாம் என்றும் கூறினால், அதை அவன் கேட்டுத் தலைவியின் நிலையை உணர்வான் என்று கருதி, அவ்வாறே தலைவியை நோக்கிக் கூறுகிறாள்.

"கிழக்குக் கடலிலிருந்து நீரை முகந்து கூட்டமாக மிக்கு வரும் முகில்கள் இந்தப் பெரிய மலையின் உச்சியைச் சூழ்ந்திருக்கின்றன. ஆதலின், நாளையே ஒளியோடு விளங்கும் அருவி நீர் நிறைந்து பரவி, பெரிய மூங்கில்கள் முரியுமாறு மோதி, அழகிய குதிரைமரங்களை அடித்துக்கொண்டு வரும். மிகப் பெரிய பரப்பு உடைய நம் ஊரின் துறையில், குளிர்ந்த கண்கள் சிவக்க முழுகுவோமா? நள்ளிரவில் பிரிவாற்றாமையால் வெறுக்கும் துன்பம் நீங்குமாறு, அதில் முழுகுவோமா? மணிபோன்ற மேனியின் சிறந்த அழகு கெடுமாறு தீராத துயரத்தை நமக்கு ஏற்படுத்தியவனுடைய மலையில் படிந்து வருகின்ற அந்த நீரில் முழுகுவோமா?"

தோழி :

**குணகடல் முகந்த கொள்ளை வானம்...**
**பெருமலை மீமிசை முற்றின ஆயின்**
**வாள் இலங்கு அருவி தாஅய் நாளை**

இருவெதிர் அம்கழை ஒசியத் தீண்டி
வருவது மாதோ வண்பரி உந்தி ;
நனிபெரும் பரப்பின் நம்மூர் முன்துறைப்
பனிபொரு மழைக்கண் சிவப்பப் பானாள்
முனிபடர் அகல மூழ்குவங் கொல்லோ
மணிமருள் மேனி ஆய்நலம் தொலையத்
தணிவருந் துயரம் செய்தோன்
அணிகிளர் நெடுவரை ஆடிய நீரே.*

## 19. அவளோ ? தெய்வமோ ?

தலைவன் ஒருமுறை வந்தபோது தாய் கண்டு ஐயுற்றாள். மறுநாளும் அவன் வருகின்றானா என்று பார்த்தறியக் காத்திருந்தாள். தோழியை அது பற்றிக் கேட்டாள். தனக்கு ஒன்றும் தெரியாது எனத் தோழி கூறிவிட்டாள். தலைவன் மறுநாள் வேலிப்புறமாக வந்து நின்றான். தோழியின் நிலைமை நெருக்கடி ஆயிற்று. ஆயினும் திறம்பட நடந்துகொள்கிறாள். தாயிடம் அவள் ஐயுற்றதைப் பற்றிக் கூறத் தொடங்குகிறாள். அவளுடைய ஐயத்தைத் தீர்க்கும் சொற்களாகத் தோழி அப்போது கூறியவற்றைக் கேட்ட தலைவன், அவற்றைக் கொண்டு நிகழ்ந்தவை எல்லாம் அறிகிறான் ; அறிந்து ' இவ்வாறு தோழியும் தலைவியும் தாயின்

*278. கபிலர்.

குண கடல் - கிழக்குக் கடல். கொள்ளை - மிகுதி. வானம் - மழை, மேகம். மீமிசை - உயர்ந்த உச்சி. வாள் - ஒளி. தாஅய் - பரந்து. இரு வெதிர் - பெரிய மூங்கில். ஒசிய - முறிய. பரி - குதிரை மாம் ; குதிரை என்ற பெயர் உள்ள மாம். உந்தி - செலுத்தி. பனிபொரு - பனி போன்ற. பானாள் - பால்நாள் - நள்ளிரவு. படர் - துயர். அணிகிளர் - அழகு விளங்கும்.

ஐயத்திற்கும் அலைப்புக்கும் ஆளாகி வருந்துகின்றனரே ; இனியேனும் திருமண ஏற்பாட்டை விரைந்து செய்து துன்பம் தீர்ப்பதே கடமையாகும்' என்று உணர்கிறான். இவ்வாறு தாயின் ஐயத்தையும் தீர்த்து, அதே நேரத்தில் தலைவன் முயற்சியையும் தூண்டுகிறாள். இங்குத் தோழியின் சொல்வன்மையும் அறிவின் திறனும் போற்றத் தக்கவை யாகும்.

" அம்மா ! பெருமழை இடித்துப் பெய்யத் தொடங்கி, பெய்து அடங்கிய இருள் மிக்க நள்ளிரவில், மின்னல் நிமிர்ந்து ஒளி வீசியதுபோல் குழைகள் காதில் ஒளிவிட, பின்னல் நெகிழ்ந்து நெறித்து அகன்ற கூந்தல் உடையவளாய், மலையிலிருந்து இறங்கும் மயில்போல் தளர்ந்து ஒதுங்கி, பரணிலிருந்து இறங்கி வரும் நிலையில் இவளை (தலைவியைக்) கண்டேன் என்று கூறி வருத்தாதே அம்மா. அத்தகைய இருள் மிக்க இரவில் காணப்பட்டவள் இவள் அல்லள். நம் தோட்டத்தில், அஞ்சத்தக்க மலையின் ஒளியுள்ள மலர்களைச் சூடித் தாம் விரும்பிய வடிவம் கொண்டு தெய்வங்களும் வரும். நனவில் வரும் உண்மை வடிவம் போலவே உறங்குகின்றவர்களைக் கனவு வந்து மருட்டுவதும் உண்டு. ஆகவே, நீ கண்டது தெய்வமாக இருக்கலாம் ; அல்லது கனவாகவும் இருக்கலாம் : இவள் அல்லள் என்பது மட்டும் உறுதி. இவள் எப்படிப்பட்டவள் என்பது உனக்குத் தெரியும். இவளோ, விளக்கு இல்லையாயின், தனியாக இருப்பதற்கும் நடுங்குவாள். மன்றத்தில் உள்ள மராமரத்தில் கூகை ஒலி செய்தாலும் அதைக் கேட்டதும் நெஞ்சு கலங்கிக் காப்பான இடத்திற்கு வந்து சேர்வாள். அதுவும் அல்லாமல், புலிக்கூட்டம் போல் பின்தொடரும் நாய்களை

அவிழ்த்துவிட்டு, (முருகனைப் போன்ற சீற்றமும் மிக்க வலி மையும் உடைய) நம் தந்தையும் வீட்டில் இல்லாதபோது, இவள் இவ்வாறு தோட்டத்தில் பரண் வரையில் போய் வருவதற்கு அஞ்சுவாள் அல்லளோ ?''

தோழி :

*உரும்உரறு கருவிய பெருமழை தலைஇப்*
*பெயல்ஆன்று அவிந்த தூங்குஇருள் நடுநாள்*
*மின்னுநிமிர்ந் தன்ன கனங்குழை இமைப்பப்*
*பின்னுவிடு நெறியின் கிளைஇய கூந்தலள்*
*வரைஇழி மயிலின் ஒல்குவனள் ஒதுங்கி*
*மிடைஊர்பு இழியக் கண்டனென் இவள்என*
*அலையல் வாழிவேண்டு அன்னை ! நம் படப்பைச்*
*சூருடைச் சிலம்பின் சுடர்ப்பூ வேய்ந்து*
*தாம்வேண்டு உருவின் அணங்குமார் வருமே ;*
*நனவின் வாயே போலத் துஞ்சுநர்க்*
*கனவுஆண்டு மருட்டலும் உண்டே ; இவள்தான்*
*சுடர்இன்று தமியளும் பனிக்கும் ; வெருவர*
*மன்ற மராஅத்த கூகை குழறினும்*
*நெஞ்சுஅழிந்து அரணம் சேரும் ; அதன்தலைப்*
*புலிக்கணத் தன்ன நாய்தொடர் விட்டு*
*முருகன் அன்ன சீற்றத்துக் கடுந்திறல்*
*எந்தையும் இல்லன் ஆக*
*அஞ்சுவள் அல்லளோ இவள்இது செயலே.**

*158. கபிலர்.

உரும் - இடி. உரறு - முழங்கும். கருவிய - மின்னல் முதலியவற்றை உடைய. ஆன்று - நின்று. தூங்கு - செறிந்த, மிகுந்த. கிளைஇய - செழித்து வளர்ந்த, அகன்ற. ஒல்குவனள் - தளர்ந்தவளாய். மிடை - பரண். அலையல் - அலைக்காதே, வருத்தாதே. படப்பை - தோட்டம். வேய்ந்து - சூடி. அணங்கு - தெய்வம். வாய் - உண்மை. சுடர் இன்று - விளக்கு இல்லாமல். பனிக்கும் - நடுங்கும். அரணம் - காப்பு உள்ள இடம்.

## 20. கேள்வியுற்ருல்—?

தலைவன் சிலநாள் பிரிந்திருந்து தலைவியைக் காண வந்தான். அந்தச் சிலநாள் பிரிவில் தலைவி வருந்தி மெலிந் தாள். இவ்வாறு அடுத்தடுத்துப் பிரிதல் நேராதவாறு தடுக்க எண்ணினுள் தோழி. திருமணம் செய்துகொண்டு இல்லறம் நடத்துமாறு வற்புறுத்த எண்ணினுள். அவன் வேலிப்புறமாக வந்து நிற்கும்போது, அவனுல் தாம் படும் துன்பத்தைத் தமக்குள் பேசுவதுபோல் பேசி அவனுக்கு எடுத்துரைத்தால் பயன் விளையும் என்று நம்பினுள். அவ் வாறே அவன்செவியில் விழுமாறு தலைவியை நோக்கிக் கூறுகிருள்.

"தோழி ! வெறுப்பு அற்ற கொள்கையோடு அவர் நம்மிடம் மகிழ்ந்து செலுத்திய இனிய நெஞ்சம் இப்போது துன்பம் தருவதாயிற்று. ஆதலின் வெறுக்கத்தக்கவாறு துன் பம் நிலைபெறச் செய்துவிட்டார். அந்தத்துன்பம் அவருடைய உறவால்தான் தணியும் என்பது அன்னைக்குத் தெரியாது. அதனுல், வளையல் நெகிழுமாறு மெலிந்துள்ள நிலையைப் பார்த்து, சோர்ந்த நெஞ்சத்தோடு முதிய கட்டுவிச்சியரை அணுகிக் கேட்டாள். கட்டுவிச்சியரோ பொய் வல்லவர்கள். அவர்கள் பிரப்பரிசி பரப்பி வைத்து, முருகனுல் வந்த அரிய நோய் என்று கூறினர். அவர்களின் சொல்லை உண்மை என்று கருதிய அன்னை, 'ஓவியம்போல் வேலைப் பாடு அமைந்த வீட்டில் என் மகளுக்கு இயல்பான பாவை போன்ற நல்ல அழகு முன்போல் சிறப்புற அமைவதாக' என்று தெய்வத்தைப் பரவி, இனிய இசைக்கருவிகள் பல கூடி ஒலிக்க வெறி ஆடுவதற்கு (தெய்வம் ஏறி ஆடுவதற்கு) உரிய களம் அமைத்துப் பெரிய பந்தலில் பனந்தோடும் கடப்பமலரும் சூடித் தாளத்தோடு பொருந்தி

முருகக்கடவுளின் பெயரை ஏத்தி வழிபாடு நடைபெறக் கூடும். அப்போது ஆட்டுவிக்க வல்லவனுடைய பொறி அமைந்த பாவை (பொம்மை) போல் தெய்வம் ஏறி ஆட வேண்டும் என்று அன்னை விரும்பக் கூடும். அவ்வாறு ஆடவிரும்பினால், என்ன ஆகுமோ ? மயங்கிக் கூறும் பெண்களுக்குத் துன்பம் உண்டாகுமாறு ஆடலாம்; ஆடிய பிறகும், வாடிய மேனி முன்போல் சிறப்புப் பெறுவிட்டால், இந்தக் களவு பலரும் அறியும் அலர் ஆகாமலிருக்க முடியாது. அன்றி, தலைவர் உண்டாக்கிய துன்பத்தைக் கண்டு முருகன் நோய் தணித்து அருள் செய்வானானால், அச்செய்தி தலைவர் செவிக்கு எட்டுமே. இதைக் கேட்ட தலைவர் ' நம் காதலிக்கு நேர்ந்த துன்பம் காதலால் நேர்ந்தது அன்று, வேறு காரணம் பற்றியது ' என்று எண்ணுவாராயின், யான் உயிர் கொண்டு வாழ்வது அதைவிட அரிதாகும்" :

தோழி :

பனிவரை நிவந்த பயங்கெழு கவாஅன்
துனியில் கொள்கையொடு அவர்நமக்கு உவந்த
இனிய உள்ளம் இன்னா ஆக
முனிதக நிறுத்த நல்கல் எவ்வம்
சூர்உறை வெற்பன் மார்புஉறத் தணிதல்
அறிந்தனள் அல்லள் அன்னை ; வார்கோல்
செறிந்திலங்கு எல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்
கையறு நெஞ்சினள் வினவலின், முதுவாய்ப்
பொய்வல் பெண்டிர் பிரப்புஉளர்பு இரீஇ
முருகன் ஆரணங்கு என்றலின் அதுசெத்து
ஓவத் தன்ன வினைபுனை நல்லில்
பாவை அன்ன பலர்ஆய் மாண்கவின்
பண்டையின் சிறக்கஎன் மகட்குஎனப் பரைஇக்

கூடுகொள் இன்னியம் கறங்கக் களன்இழைத்து
ஆடுஅணி அயர்ந்த அகன்பெரும் பந்தர்
வெண்போழ் கடம்பொடு சூடி இன்சீர்
ஐதுஅமை பாணி இரீஇக்கை பெயராச்
செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்
வெறிஅயர் வியன்களம் பொற்ப வல்லோன்
பொறிஅமை பாவையின் தூங்கல் வேண்டின்
என்ஆங் கொல்லோ தோழி மயங்கிய
மையல் பெண்டிர்க்கு நொவ்வல் ஆக
ஆடிய பின்னும் வாடிய மேனி
பண்டையின் சிறவா தாயின் இம்மறை
அலர்ஆ காமையோ அரிதே ; அஃதான்று
அறிவர் உறுவிய அல்லல்கண் டருளி
வெறிகமழ் நெடுவேள் நல்குவன் எனினே
செறிதொடி உற்ற செல்லலும் பிறிதுஎனக்
கான்கெழு நாடன் கேட்பின்
யான்உயிர் வாழ்தல் அதனினும் அரிதே.*

காமக்கண்ணியார் என்னும் இப் புலவர் வெறியாடலை அமைத்து இவ்வளவு சுவைபடப் பாடியுள்ளமையால் 'வெறி பாடிய' என்று சிறப்பித்துக் கூறப்பட்டார்.

---

98. வெறிபாடிய காமக்கண்ணியார்.

வரை - மலை. பயம் - பயன். கவான் - பக்கமலை. துனி - வெறுப்பு. முனிதக - வெறுக்கத்தக்கவாறு. நல்கல் - அருளல். எவ்வம் - துன்பம். வார் - நீண்ட. கோல் - கோலுதலாகிய வேலைப்பாடு. பிரப்பு - பிரப்பரிசி. உளர்பு-பரப்பி. இரீஇ-இருக்கச்செய்து. செத்து - (போலக்) கருதி. ஓவம் - ஓவியம். பரைஇ - பரவி - வழிபட்டு. ஐது - அழகு. பாணி - தாளம். பொற்ப - பொலிவு பெற. தூங்கல் - அசைந்தாடுதல். மையல் - மயக்கம். நொவ்வல் - துன்பம். அஃதான்று - அது அன்றி. அறிவர் - அறிவுள்ள தலைவர். செல்லல் - துன்பம். பிறிது - வேறு காரணம் பற்றியது.

## 21. கேட்டால் என்ன?

தலைவி தோழியோடு இருந்து தினைப்புனத்தில் காவல் புரிந்துவந்தாள். மூங்கிலால் செய்த தட்டை என்னும் கருவியால் ஒலி எழுப்பிக் கிளிகளை ஓட்டிவந்தாள். அவள் காவல் புரிந்தது ஒரு பரண்மேலாகும். அந்தப் பரண் ஒரு வேங்கை மரத்தின் கிளைகளின்மேல் கட்டப்பட்டிருந்தது. இருவரும் அங்கே இருந்து காவல் புரிந்தபோது, இடை யிடையே அமைதியாய் இருந்த நேரத்தில் வேங்கைப் பூவின் பொடிகளை ஊதும் வண்டுகளின் இனிய ஓசையைக் கேட்டு மகிழ்ந்தனர். ஒருநாள் அவ்வாறு வண்டின் இசை கேட்டு அமைதியாக இருந்தபோது தலைவன் அங்கே வந்து, "மங் கையரே! என் அம்பு பாய்ந்து புண்பட்டுத் துன்பத்தோடு ஓடிவந்தது யானை ஒன்று. அது உங்கள் தினைப்புனத்தின் வழியாக வந்ததோ?" என்று கேட்டான். அவன் பக்கத்தே சினம் மிக்க வேட்டை நாய்கள் சீறிப் பதைத்துக்கொண் டிருந்தன. அவ்வாறு அவர்களைக் கேட்ட வீரன் உடனே அவ்விடத்தை விட்டு அப்பால் சென்றான்:

அமையறுத்து இயற்றிய வெவ்வாய்த் தட்டையின்...
உளைக்குரல் சிறுதினை கவர்தலின் கிளையமல்
பெருவரை அடுக்கத்துக் குரீஇ ஓப்பி
ஓங்கிருஞ் சிலம்பின் ஒள்ளிணர் நறுவீ
வேங்கையங் கவட்டிடை நிவந்த இதணத்துப்
பொன்மருள் நறுந்தாது ஊதும் தும்பி
இன்னிசை ஓரா இருந்தனம் ஆக
'மையீர் ஓதி மடநல் லீரே!
நொவ்வியல் பகழி பாய்ந்தெனப் புண்கூர்ந்து
எவ்வமொடு வந்த உயர்மருப்பு ஒருத்தல் நும்
புனத்துழிப் போகலுறுமோ மற்று'எனச்

*சினவுக்கொள் ஞமலி செயிர்த்துப்புடை யாடச்*
*சொல்லிக் கழிந்த வல்வில் காளை......*

இவ்வாறு யானையைத் தேடிவந்து தினைப்புனத்தில் இருந்த தலைவியைக் கண்டு காதல்கொண்ட தலைவன் திருமணம் செய்யாமல் காலம் தாழ்த்திவந்தான். அவன் பிரிந்து சென்ற நாட்களில் பிரிவாற்றாமல் தலைவி மெலிந்து வாடினாள். இந்தத் துன்பத்தைத் தலைவன் நெஞ்சம் கொள்ளுமாறு உணர்த்தித் திருமணம் செய்துகொள்ள அறிவுறுத்த வேண்டும் எனத் தோழி எண்ணினாள். ஒரு நாள் இரவில் அவன் வந்து வேலிப்புறமாக நின்றபோது அவனைக் காணாதவள்போல் நடித்துத் தலைவியிடம் பேசினாள். பேச்சின் இடையே பொய்ம்மொழி ஒன்று கூறித் தலைவனால் நேர்ந்த துன்பத்தை எடுத்துரைக்கிறாள். தாய் மகளுடைய வாட்டத்தைக் கண்டு, ஏதோ நோய் என்று மயங்கியதாகவும் வேலனைக் கொண்டுவந்து வெறியாடப்போவதாகவும் கூறுகிறாள். கற்புடைய பெண்கள் தெய்வத்தைத் தொழக்கூடாது என்பது பழங்காலத் தமிழர் கொள்கை. தலைவியும் தன் நெஞ்சைக் காதலனிடம் செலுத்தியவள் ஆகையால் தெய்வம் தொழக் கூடாதவள் ஆனாள். ஆகவே, தாயின் ஏற்பாட்டின்படி வேலன் வந்து வெறியாடுவதாக (தெய்வம் ஏறி ஆடுவதாக) நேர்ந்தால், தலைவி தெய்வத்தைத் தொழும் இடர்ப்பாடு நேருமே என்பதையும், இத்தகைய இடர்ப்பாட்டுக்கு ஆளாக்கித் துன்புறுத்தினான் தலைவன் என்பதையும் அவன் நெஞ்சில் பதியுமாறு எடுத்துக் கூறுகிறாள்.

"தலைவனுடைய சந்தனம் பூசிய மார்பையும் உயர்ந்த பண்பையும் மிக விரும்பிய காரணத்தால், இங்கே நாம்

துன்பப்படுகிறோம் ; இதை உணராமல், தன் நல்ல நெஞ்சம் மயங்கி, வெறியாட வேண்டும் என்று எண்ணித் தாய் வேலனை அழைத்துவருவாள். வேலன் என்ன சொல்வான் ? 'எம் கடவுளாகிய முருகன் வருத்தியதால் வந்தது இந்த நோய். இதைத் தணிக்கும் மருந்து இன்னது என்று அறிவேன்' என்று அந்த வேலன் சொல்வானானால், அவனை நோக்கி ஒன்று 'கேட்டால் என்ன ? (கொதிக்கும் சினத்தைக் கொண்ட மதம் பிடித்த யானையின் உடம்பினுள் உருவிப்போய் நிறம் ஊட்டினாற்போல் தோன்றும்) சிவந்த அம்போடு காட்டு விலங்குகளின் அடிச்சுவட்டைத் தொடர்ந்து உம் கடவுள் வேட்டைக்குச் செல்லுமோ என்று அந்த வேலனைக் கேட்டால் என்ன ?''

தோழி :

சாந்தார் அகலமும் தகையும் மிகநயந்து
சங்குநாம் உழக்கும் எவ்வம் உணராள்
நன்னர் நெஞ்சமொடு மயங்கி வெறிஎன
அன்னை தந்த முதுவாய் வேலன்
'எம்இறை அணங்கலின் வந்தன்று இந்நோய் ;
தணிமருந்து அறிவல்' என்னும் ஆயின்
வினவின் எவனோ மற்றே 'கனல்சின
மையல் வேழம் மெய்யுளம் போக
ஊட்டி அன்ன ஊன்புரள் அம்பொடு
காட்டுமான் அடிவழி ஒற்றி
வேட்டம் செல்லுமோ நும்இறை எனவே.*

*388. ஊட்டியார்.

சாந்து - சந்தனம். ஆர் - பொருந்திய. தகை - தன்மை. நயந்து - விரும்பி. உழக்கும் எவ்வம் - படும் துன்பம். நன்னர் - நன்மை. வெறி - முருகன் பூசை. தந்த - அழைத்துவந்த. முதுவாய் -

# 22. குறித்த இன்பம்

பிறர் அறியாமல் காதல் கொண்டு பழகினர் தலைவனும் தலைவியும். தலைவியின் தாய் இதை எவ்வாறோ உணர்ந்து, பகலில் வீட்டைவிட்டு வெளியே செல்லாதவாறு மகளைத் தடுத்தாள். அதனால் தினைப்புனத்திற்குச் சென்று தலைவனைக் காணும் வாய்ப்புத் தலைவிக்கு இல்லாமற் போயிற்று. இவ்வாறு அவர்களின் காதல் வாழ்விற்கு இடையூறு நேர்ந்தது.

தோழி இந்த நிலையை அவர்களின் நன்மைக்குப் பயன்படுத்த முனைந்தாள். அவளுக்கும் அவனுக்கும் இடையே நின்று அவர்களின் காதல் வளர்வதற்குத் துணையாக இருந்தவள் அவள். அந்த அளவில் அவளுடைய பொறுப்புத் தீரவில்லை. களவொழுக்கம் தொடர்ந்து நீட்டிப்பதால் இடையூறுகள் மிகும் என்பதை அவள் நன்கு அறிந்தாள். தலைவனைப் பிரிந்து தனித்திருக்கும்போது தலைவி வருந்துவதைப் பலமுறை கண்டிருக்கிறாள். தலைவியைக் காண்பதற்காகத் தலைவன் துன்பம் உழப்பதையும் கண்டிருக்கிறாள். பெற்றோர் அறிந்தால் பழிப்பர் என்பதை எண்ணினாள். இந்த நிலைமையை உள்ளவாறே எடுத்துக் கூறுவதால் தலைவனுடைய நெஞ்சில் மாறுதல் விளையாது என்பதையும் உணர்ந்தாள். களவொழுக்கத்தை மாற்றித் திருமணம் செய்துகொண்டு இல்லறம் நடத்துதல் ஒன்றே இன்னலும்

---

அனுபவம் வாய்ந்த. அணங்கலின் - வருத்தலினால். வந்தன்று - வந்தது. அறிவல் - அறிவேன். எவனோ - என்னவோ. மையல் - மயக்கம். ஊட்டி அன்ன - செந்நிறம் ஊட்டினாற்போன்ற. விலங்கின் தசையில்பட்டு இரத்தக் கறை பிடித்த அம்பு நிறம் ஊட்டியது போல் தோன்றும். இந்த அடைச் சிறப்பால் புலவர் ஊட்டியார் என்று குறிக்கப்பட்டார். ஊன் - புலால். மான் - விலங்கு. ஒற்றி - தேடித் தொடர்ந்து. வேட்டம் - வேட்டை.

இடரும் தீர்வதற்கு வழி என்பதை நன்கு உணர்ந்த அவள், அதைத் தலைவனுக்கு எவ்வாறு எடுத்துரைப்பது என்று எண்ணிப் பார்த்தாள்.

முதலில் அவனுடைய உள்ளம் சோர்வடையாதவாறு ஊக்கப்படுத்திப் புகழ்தல் வேண்டும் எனக் கருதினாள். விலங்குகளும் இன்பமாக வாழும் உலகத்தில் அறிவுடைய மனிதன் இன்ப வாழ்வுக்கு வழி வகுப்பது அருமை அன்று என்று தலைவன் தன்னம்பிக்கை கொள்ளுமாறு ஒன்றை எடுத்துரைத்தாள்.

தோழி :

"வாழைக் கனிகளும் பலாப்பழச் சுளைகளும் பாறை மீது விழுகின்றன. அங்குள்ள சுனையின் நீரில் அவைகள் கலந்து புளித்து முதிர்வதால் அந்த நீர், தேன் (கள்) போல் ஆகின்றது. அங்கு வரும் ஆண் குரங்கு அதன் தன்மை அறியாமல் நீர் என்றே கருதிக் குடிக்கிறது. குடித்தவுடன் அந்தச் சுனையை அடுத்து நிற்கும் (மிளகுக்கொடி படரும்) சந்தன மரத்தில் ஏற முயல்கிறது. ஏறி மேலே செல்ல முடியாமல் கீழே தவறி விழுகின்றது. விழும் இடமோ பூக்கள் உதிர்ந்து கிடப்பதால் மெத்தென்ற படுக்கைபோல் இருக்கின்றது. அதன்மேல் குடிமயக்கத்தால் தன்னை மறந்து உறங்குகின்றது. இத்தகைய வளம் பொருந்திய மலை உன் நாட்டு மலை. எதிர்பாராத இன்பத்தை இவ்வாறு விலங்குகளும் அடையும்போது, நீ முயல்வாயானால், அடைய முடியாத இன்பமும் உண்டோ?"

தோழி :

**கோழிலை வாழைக் கோள்மிகு பெருங்குலை**
**ஊழுறு தீங்கனி உண்ணுநர்த் தடுத்த**

*சாரல் பலவின் சுளையொடு ஊழ்படு*
*பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்*
*அறியாது உண்ட கடுவன் அயலது*
*கறிவளர் சந்தம் ஏறல்செல் லாது*
*நறுவீ அடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்கும்*
*குறியா இன்பம் எளிதின் நின்மலைப்*
*பல்வேறு விலங்கும் எய்தும் நாட !*
*குறித்த இன்பம் நினக்குஎவன் அரிய ?*

இவ்வளவு கூறியதனால் தலைவனுக்கு ஊக்கம் பிறக்குமே தவிர, வழி தோன்றாது ; உண்மைக் காரணமும் விளங்காது. ஆகவே அவனுடைய உள்ளத்தில் ஊக்கம் வளரச் செய்த பின், அடுத்த முயற்சியில் ஈடுபட்டாள். " நீ மட்டும் ஏக்கம் கொண்டு வருந்துவதாக எண்ண வேண்டா. நீ அவள் பொருட்டு வருந்துவது போலவே அவளும் உன்னிடம் காதல் மீதூர்ந்து வருந்துகிறாள். உன்னைப் போலவே அவளும் தன் நெஞ்சத்தைத் தன்வயமாக நிறுத்த முடியாமல் வருந்துகிறாள் " என்றாள்.

தோழி :

*நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு*
*இவளும் இனையள் ஆயின்—.*

இதனால், வெளியே செல்லாதவாறு தடுக்கப்பட்டு வீட்டளவில் அடங்கியிருக்கும் தலைவியின் நிலைமை அவனுக்கு விளங்குமாறு செய்தாள்.

இதனைக் கேட்டதும் தலைவனுக்கு வேறொரு வழி தோன்றுதல் இயற்கை. பகலில் வந்து காண முடியாமற் போயின், இரவில் வந்து காணல் கூடும் என்று அவன் எண்ணுவான் என்பதை அறிந்தாள் தோழி. அதையும்

தானே குறிப்பிடுதல் நலம் எனக் கருதி எடுத்துரைத்தாள் அவ்வாறு உரைக்கும்போது, இரவில் வந்து காண்பதில் உள்ள இடர்ப்பாடுகளையும் சுருங்கக் கூறினாள். "தந்தையின் ஏவலாளர் பலர் இரவில் காவல் புரிகிறார்கள். அவர்கள் காவல்தொழிலில் வல்லவர்கள். அவர்கள் சோர்ந்திருப்பதே அருமை. அவ்வாறு காவலர் சோர்ந்து உறங்கும் சமயம் வாய்த்தால் நீ வந்து காணுதல் கூடும். அவ்வாறு வந்து காண்பதற்கும் உனக்கு உரிமை உண்டு" என்றாள்:

தோழி:

தந்தை
**அருங்கடிக் காவலர் சோர்பதன் ஒற்றிக்**
**கங்குல் வருதலும் உரியை.**

இவ்வாறு கூறியபோதும், "கங்குலில் வருக" என்று அழைக்கும் முறையில் கூறாமல், "கங்குலில் வருவதற்கும் உரிமை உள்ளது" என்று உரைத்தாள். இந்தக் குறிப்பாலேயே "இரவில் வருதல் நன்று அன்று" என்னும் தன் கருத்தைப் புலப்படுத்தினாள். இரவில் வர வேண்டா என மறுத்து உரைத்தால், ஊக்கம் பெற்ற அவனுடைய உள்ளம் சோர்வுறுமே என்று அஞ்சியே இத்தகைய முறையில் தன் கருத்தைப் புலப்படுத்தினாள்.

இனி என்ன செய்வது என்று தயங்கும் உள்ளத்திற்கு வழிகாட்டும் முறையில் தன் பேச்சை முடிக்க முயன்றாள். "திருமணம் செய்துகொள்" என்று நேரடியாக எடுத்துக் கூறி வற்புறுத்தினால் அவன்மனம் விரைந்து ஏற்காது என்று மனத்தின் இயல்பை உணர்ந்தவளாய், திருமணம் செய்துகொள்வதற்குரிய காலம் இது என்று காலத்தின் வாய்ப்பை மட்டும் சுட்டிக் கூறினாள். பழங்காலத்தில்

வேங்கைமரம் மலரும் காலம், வானத்தில் திங்கள் நிரம்புத லுறுகின்ற காலம் (திங்கள் மண்டலமிட்டு ஒளி பரப்புகின்ற காலம்) ஆகியவை திருமணம் செய்தற்கு உரிய காலமாகக் கருதப்பட்டன. அவை வந்துள்ளன என்று தோழி குறிப்பிட்டு, திருமணம் செய்துகொள்ள வேண்டிய கடமை அவன்நெஞ்சில் பதியுமாறு செய்தாள் :

தோழி :

**வேங்கையும் ஒள்ளிணர் விரிந்தன**
**நெடுவெண் திங்களும் ஊர்கொண் டன்றே.***

அவர்களின் களவொழுக்கத்திற்குக் காரணமாக இருந்த தோழி, தன் பொறுப்பை உணர்ந்து, அவர்கள் எதிர்காலத்தில் இடையூறு இன்றி இனிது வாழ்வதற்கு வழிகோலும் முறையில், தலைவனுடைய நெஞ்சை நன்னெறிப் படுத்திய திறன் போற்றத் தக்கது.

---

* 2. கபிலர்.

கோழ் இலை - வள்மான இலை. கோள் - காய் கொள்ளுதல், காய்த்தல். ஊழ் உறு, ஊழ்படு- முதிர்ந்த, முற்றிய. தேறல் - தேன், கள். கடுவன் - ஆண் குரங்கு. கறி - மிளகுக்கொடி. நறுவீ - நறுமணம் உள்ள பூ. கண்படுக்கும் - உறங்கும். மகிழ்ந்து - குடியால் மயங்கி. எவன் அரிய - எவ்வாறு அருமையாகும். வெறுத்த ஏர் - மிக்க அழகு. இனையள் - இத்தன்மையள். கடி - காவல். பதன் - பதம் - சமயம். ஒள் இணர் - ஒளி பொருந்திய பூங்கொத்து. ஊர் கொண்டன்று - ஊர் கொண்டது, நிரம்பியது, மண்டலமிட்டது.

## 23. பொல்லாத வழி

தலைவன் இரவில் வந்து தலைவியைக் கண்டு செல்லத் தொடங்கினான். சில நாள் அவ்வாறு வந்து வந்து மீண்ட பிறகு தலைவி அந்த நள்ளிரவில் கொடிய மலைவழியில் வருவதில் உள்ள இடர்களை நினைந்து நினைந்து வருந்தினாள். மறு நாள் அவன் வருவதாகக் கூறியபோதெல்லாம் அவள் அந்த இடர்களை நினைந்து உருகினாள். அவன்வருகையை எதிர் பார்த்து விழித்திருக்கும் நேரமெல்லாம், வரும் வழியில் என்ன இடையூறு நேர்ந்ததோ என்று எண்ணி எண்ணிக் கலங்கினாள். வரவேண்டா என்று தடுக்கும் உரமும் இல்லை ; வருகையை எதிர்பார்த்துக் கவலையின்றி இருக்கும் நிலையும் இல்லை. வராவிட்டாலும் ஏக்கம், வருவதாயினும் கவலை என்று துயருழந்தாள். இதை அறிந்த தோழி தன் கடமை யாது என்று எண்ணித் தலைவனிடம் தக்கவாறு எடுத்துரைத்தாள்.

" எவ்வளவு கொடிய வழி ? இராக்காலத்தில் இத்தகைய மலைவழியில் மக்கள் வரலாமோ ? கானாறு குறுக்கே ஓடுகிறது. அதன் நீர் கண்ணுக்குத் தெரியாதவாறு மலர்கள் உதிர்ந்து நீரை மறைத்துள்ளன. ஆதலின் நீர் என்று அறியாமலே கானாற்றில் கால் வைத்துத் துன்புற நேருமே ! தவிர, அந்தக் கானாற்றில் முதலைகள் வாழ்கின்றன. நீர்ச் சுழிகள் பல உள்ளன. பெரிய கற்களில் நீர் மோதித் திரும்பும் சுழிகளின் அருகே அந்த முதலைகள் தங்கியிருக்கின்றன. கானாற்றில் வரும் வெள்ளமோ வேகம் மிகுந்தது. தனித்து வரும் ஆண்யானைகளின்மேல் மோதி அவற்றின் மதத்தைத் தணித்து இழுத்துக்கொள்ளும் ஆற்றலுடைய அச்சம் தரும் வெள்ளம் அன்றோ அது ? அத்தகைய வெள்ளத்தை எப்படித்தான் கடந்துவர முடியும் ? எதற்கும்

அஞ்சாத இயல்பை உடைய காட்டுப்பன்றி போல் நடுங்காமல் கானுற்றைக் கடந்து, அஞ்சத்தக்க துறைகளின் வழியாக நள்ளிரவில் இவ்வாறு யார்தான் வருவார்கள் ?'' என்ருள்.

இவ்வாறு தலைவன் வரும் வழியில் ஏதேனும் துன்பம் நேர்ந்தால் தலைவி எவ்வளவு வருந்த நேரும் என்பதையும் அவன் உணருமாறு எடுத்துரைத்தாள். மலைவழியில் நள்ளிரவில் உற்ற துன்பத்தைத் தீர்க்க வழியும் இல்லை. எங்கோ உற்ற துன்பம் பற்றிய செய்தி தலைவியின் செவிக்கு உடனே எட்டுவதற்கும் வழி இல்லை. மறுநாள் பகலில் கண்டோர் கூறிய செய்தி பாவிய பின்னரே தலைவி அதை உணர முடியும். அவ்வாறு கொடிய செய்தி ஒன்று எட்டுமாயின், அதைக் கேட்ட பின் தலைவி உயிர் வாழமாட்டாள் என்று அவனுக்காக அவள் படும் கவலையைக் கூறினுள்.

அந்த வழியைப் பற்றித் தோழியும் தலைவியும் அஞ்சும் அச்சத்திற்குக் காரணம் இல்லை என்று தலைவன் எண்ணுவான்; வீரமுள்ள இளைஞன் ஆகையால் அவனுடைய மனத்தில் அச்சம் தோன்ருது. அதனுல் அவனும் உணரும் வகையில் சொல்ல முயன்ருள். "இடையூறு இல்லாத நல்ல வழிகளாகவே இருந்தபோதிலும் பலமுறை சென்று வருகின்றவர்களும் தவறித் துன்புறுவார்கள். ஆகையால் கொடிய வழியில் நீ வருதலைப் பற்றி நாங்கள் எவ்வாறு ஆறுதல் அடைய முடியும் ?'' என்ருள்.

இவ்வாறு கூறும் தோழியின் நோக்கம், தலைவன் இரவில் வாாமல் தடுக்க வேண்டும் என்பது மட்டும் அன்று ; திருமணம் செய்துகொண்டு தலைவியுடன் இல்லறம் நடத்த வேண்டும் என்பதாகும். ஆயின் அதை வெளிப்படையாகக் கூறின் பயன் விளையாது என்பதை உணர்ந்தாள். தலைவ

னிடம் அன்புகொண்டு அவன்சார்பாகவே பேசுவதாக உணரச் செய்து, அவன்போக்கை மாற்ற விரும்பினாள். " நீ இரவில் வரவேண்டா " என்று தடுக்கும் வாய்பாட்டால் கூறவில்லை. " பகலிலும் வரலாம் " என்று உடன்படுவது போல் கூறிக் குறிப்பாக அதையும் வேண்டா என்றே மறுத்தாள். அவ்வாறு மறுத்த குறிப்புமொழியில் அவளுடைய பேச்சுத் திறன் விளங்குகிறது.

" எங்கள் தோட்டத்தை அடுத்துள்ள மலையில் வட்டமான தேன்கூடு கட்டப்பெற்றுள்ளது. அது மிக உயர்ந்த மலை. அங்கே உள்ள மரச்செறிவில் பழங்கள் மிகுதியாக உள்ளன. காந்தள் மலர்ந்த புதரும் உள்ளது. அந்த இடத்தில் பகலில் வந்தாலும் காணலாம் " என்றாள். இவ்வாறு தலைவனுக்கு உதவுவதுபோல் ஓர் இடம் சுட்டிப் பேசினும், அங்கும் வர வேண்டா என்ற குறிப்பு உள்ளது. தேன்கூடு இருப்பதால் அதை அழிக்கவும், பழங்கள் கிடைத்தலால் அவற்றை எடுக்கவும், காந்தள் மலர்ந்திருத்தலால் மலர்களைப் பறிக்கவும் மக்கள் பலர் அங்கே வரக்கூடும் என்று தலைவன் உணர்ந்து, ஏற்ற இடம் அன்று என்று தெளிந்து, பகலிலும் வாராமல் நின்று, திருமணத்திற்கு ஏற்பாடு செய்வான் என்று எண்ணியே இவ்வாறு உரைத்தாள்.

தோழி :

*நீர்நிறம் கரப்ப ஊழ்உறுபு உதிர்ந்து*
*பூமலர் கஞலிய கடுவரல் கான்யாற்றுக்*
*கராஅம் துஞ்சும் கல்லுயர் மறிசுழி*
*மராஅ யானை மதம்தப ஒற்றி*
*உராஅ ஈர்க்கும் உட்குவரு நீத்தம்*
*கடுங்கண் பன்றியின் நடுங்காது துறந்து*
*நாம அருந்துறைப் பேர்தந்து யாமத்து*

ஈங்கும் வருபவோ ஓங்கல் வெற்ப !
ஒருநாள் விழுமம் உறினும் வழிநாள்
வாழ்குவள் அல்லள்என் தோழி ; யாவதும்
ஊறுஇல் வழிகளும் பயில வழங்குநர்
நீடின்று ஆக இழுக்குவர் ; அதனால்
உலமரல் வருத்தம் உறுதும்;எம் படப்பைக்
கொடுந்தேன் இழைத்த கோடுஉயர் நெடுவரைப்
பழம்தூங்கு நளிப்பில் காந்தளம் பொதும்பில்
பகல்நீ வரினும் புணர்குவை அகல்மலை
வாங்குஅமைக் கண்இடை கடுப்பயாய்
ஓம்பினள் எடுத்த தடமென் தோளே.*

## 24. பகலில் வருக

தலைவன் இராக் காலத்தில் வந்து தலைவியைக் கண்டு மகிழ்ந்து செல்வதை வழக்கமாகக் கொண்டான். பல நாளும் இவ்வாறு அவன் வந்து செல்வதைக் கண்ட தோழி, அவன்உள்ளத்தில் திருமணம் பற்றியும் இல்வாழ்க்கை பற்றியும் எண்ணங்கள் ஏற்படவில்லையே என வருந்தினாள்.

*அகநானூறு 18. கபிலர்

கரப்ப - மறைய. கலுழிய - நெருங்கிய. கராஅம் - முதலை. மாஅ - (சுற்றத்தோடு) பொருந்தாத. மதம் தப - மதம் கெடுமாறு. ஒற்றி - மோதி. உராஅ - வலிமைசெலுத்தி. ஈர்க்கும் - இழுக்கும். உட்குவரு - அஞ்சத்தக்க. நீத்தம் - வெள்ளம். கடுங்கண் - அஞ் சாமை. நாமம் - அச்சம். பேர்தந்து - பெயர்தந்து, விட்டுநீங்கி. வெற்ப - மலைநாட்டுத் தலைவ. விழுமம் - துன்பம். உலமரல் - கலங்குதல். படப்பை - தோட்டம். தூங்கு - தொங்கு. நளிப்பு - மரச் செறிவு. பொதும்பு - புதர். வாங்குஅமை தோள் - வளைந்த மூங்கிலின் கணுக்களுக்கு இடைப்பட்ட பகுதி போன்ற தோள். யாய் - தாய்.

அவ்வாறு அவனை எண்ணச் செய்ய வேண்டுமானால், திருமணம் செய்துகொள்ளுமாறு நேரே சொல்வது அவ்வளவாகப் பயன்படாது என உணர்ந்தாள். இரவில் வந்து காணும் வாய்ப்பை மாற்றிப் பகலில் வருமாறு சொல்ல எண்ணினாள். இரவில் வந்து பிறர் காணாமல் சென்று கொண்டிருந்தவன், பகலில் வருவானானால், வேறுவகையான இடர்ப்பாடுகளுக்கு ஆளாவான் என்றும், அப்போதாவது தன் கடமைகளைப் பற்றி எண்ணத் தொடங்குவான் என்றும் நம்பினாள். பழகிப்போன இடையூறுகளைப் பற்றிக் கவலைப் படாமல் இருப்பதும், புதிய இடையூறுகளைப் பற்றியே கவலை கொண்டு துன்புறுவதும் மனத்தின் இயற்கை. இந்த உண்மையை உணர்ந்த தோழி, ஒருநாள் இரவில் தலைவன் வந்து மீளும்போது அவனை எதிர்ப்பட்டுப் பின் வருமாறு கூறினாள் :

"ஐய ! நீ தலைவியைக் காண இரவில் வருவது ஏன் ? பகலில் வந்தாலும் கண்டு மகிழலாமே. ஆண்யானை நிமிர்ந்து பற்ற முடியாத உயரத்தில் மலைக்குகைமேல் உள்ள பரணில் எம்மோடு நீயும் இருந்து, தினை உண்ண வரும் கிளிகளை ஓட்டலாம் ; வளமான பாறையின் சுனைகளில் உள்ள குவளைமலர்களைச் சூடிய கூந்தலாகிய மென்மையான அணையில் துயிலலாம் ; பொழுது சாய்ந்தவுடன், காவலாட்களுக்கு மறைந்து புனத்தைத் துழாவி உண்ட பெரிய ஆண் யானை போல் (குறிஞ்சி மரங்களை உடைய, வாழ்வதற்கு இனிய உங்கள்) ஊர்க்குத் திருப்பிச் செல்லலாம்."

தோழி :

**இரவின் வருதல் எவனோ ? பகல்வரின்...**
**களிறுஅணந்து எய்தாக் கல்முகை இதணத்துச்**

சிறுதினைப் படுகிளி எம்மொடு ஓப்பி
மல்லல் அறைய மலர்சுனைக் குவளைத்
தேம்பாய் ஒண்பூ நறும்பல அடைச்சிய
கூந்தல் மெல்லணைத் துஞ்சிப் பொழுதுபடக்
காவலர்க் கரந்து கடிபுனம் துழைஇய
பெருங்களிற் றொருத்தலின் பெயர்குவை
கருங்கோற் குறிஞ்சிநும் உறைவின் ஊர்க்கே.*

## 25. விருந்தாய் வருக

பகலில் வந்து தலைவியைக் கண்டு பிரியும் தலைமகனை அணுகினாள் தோழி. இதுவே வாழ்க்கை அன்று, இல்லறம் நடத்த வழிகோலுதலே வாழ்க்கைநெறி என்று அவனுக்கு அறிவுறுத்த விரும்பினாள். தலைவி பிரிவாற்றாமல் மிக மிக வருந்துகிறாள் என்பதை எடுத்துரைத்தால் போதும் என்று அமையவில்லை. "நீ பிரிதல் கூடாது. எம்மோடு வந்து எம் இல்லத்தில் விருந்தினனாகத் தங்கிச் செல்லுதல் வேண்டும்" என்று வேண்டுகோள்போல் கூறின், அது அவனைத் திருத்தப் பயன்படும் என்று கருதினாள். அவ்வாறே தலைவனிடம் எடுத்துரைத்தாள்.

---

*308. பிசிராந்தையார்.

அணந்து - நிமிர்ந்து. கல்முகை - மலைக்குகை. இதணம் - பரண். மல்லல் - வளம். அறைய - பாறைகளில் உள்ள. மலிர் - நீர். நறும் பல - நறுமணம் வாய்ந்த பல (மலர்கள்). அடைச்சிய - சேர்த்த - சூடிய. ஒருத்தல் - ஆண்யானை. பெயர்குவை - திரும்புவாய். உறைவு இன் - வாழ்வதற்கு இனிய.

"அவளுடைய நெருங்கிய வளையல்களைத் திருத்தி, கலைந்த கூந்தலை ஒழுங்குபடுத்தி, 'மடந்தையே! இனி உன் தோழியோடு வீட்டுக்குச் செல்க' என்று ஒருநாள் நீ சொன்னாய் அல்லையோ? சொல்லியவுடன் அவள் மிக அழுது துன்பமுற்றாள். அதற்கே அவ்வாறு துன்பமுற்றாள் என்றால், அதைப் பொருட்படுத்தாமல் நீ அயலார் போல் பிரிந்து சென்றால், உடனே வேறு ஏதாவது பெருந் துன்பம் ஒன்று நேர்ந்தாலும் நேரும் என்று அஞ்சுகின்றேன். அதனால், தொலைநாட்டிலிருந்து வருபவர்போல் வந்தால் - எம்மோடு உனக்கு உள்ள தொடர்பைப் போற்றாமல் பெரிய ஆரவாரம் செய்யும் எம் ஊர்க்கு வந்தால் - விரைந்து எதிர்கொண்டு அழைப்போம். மெல்ல வினவுவோம். பொழுது மயங்கியதாயிற்று என்றும், அலைநீர் பெருகுவதால் சுறுமீன்களும் பகையாயின என்றும், இருட்டிவிட்டது ஆகையால் இனித் திரும்பிப் போக வேண்டா என்றும் எம்மைச் சார்ந்த குடும்பத்தார் தம் குறையைச் சொல்வர். அதைக் கேட்டு நீ இன்பமுறத் தங்க வேண்டும். ஏவலாளரும் குதிரைகளும் தங்கி இன்பமுற வேண்டும். எம் வீட்டில் நல்ல விருந்தினனாக ஏற்றுக் கொண்டு விருந்தோம்புவோம். நீ அருள்புரிவாயானால் யாம் அவ்வாறு விருந்தோம்ப முடியும்."

தோழி :

*செறிதொடி திருத்திப் பாறுமயிர் நீவிச்*
*செல்இனி மடந்தைநின் தோழியொடு மனைஎனச்*
*சொல்லிய அளவை தான்பெரிது கலுழ்ந்து*
*தீங்குஆ யினள்இவள் ஆயின் தாங்காது*
*நொதுமலர் போலப் பிரியின் கதுமெனப்*
*பிறிதொன்று ஆகலும் அஞ்சுவல் ; அதனால்*

சேணின் வருநர் போலப் பேணுய்
இருங்கலி யாணர்எம் சிறுகுடித் தோன்றின்
வல்லெதிர் கொண்டு மெல்லிதின் விளைஇத்
துறையும் மான்றின்று பொழுதே சுறவும்
ஓதம் மல்கலின் மாறு யினவே
எல்இன்று தோன்றல் செல்லா தீம்என
எமர்குறை கூறத் தங்கி ஏமுற
இளையரும் புரவியும் இன்புற நீயும்
இல்உறை நல்விருந்து அயர்தல்
ஒல்லுதும் பெரும நீ நல்குதல் பெறினே.

## 26. கொம்பு ஊதுக

இரவில் வந்து செல்லும் தலைவனைத் தோழி வர வேண்டா எனத் தடுக்க முயன்றாள். அவன் வரும் வழியில் உள்ள தீங்குகளை எடுத்துச்சொன்னாள். ஆனால், அவற்றை எண்ணித் தயங்கும் அச்சம் அவன்உள்ளத்தில் இல்லை என்பதை உணர்ந்தாள். அதனால் வெறுத்து நீக்கும் முறையில் கூறுவதாகத் தலைவன் உணர்வானோ என்று அஞ்சினாள்; வெறுப்பு எள்ளளவும் இல்லை என்பதைத் தெளிவாக்க விரும்பி, திருமணம் வேண்டுமானால் பெற்றோர் இணங்குவார்கள் என்ற கருத்தை எடுத்துரைத்தாள். அவ்வாறு கூறக் கேட்ட பிறகும், திருமணத்தின் ஏற்பாடுகள் செய்யப்படும்

*300. உலோச்சனார்.

செறி தொடி - நெருங்கிய வளையல். பாறு - சிதறிய. சொல்லிய அளவை - சொல்லிய அளவில். நொதுமலர் - அயலார். கதுமென - விரைந்து. துறை - கடற்கரை. மான்றின்று - மயங்கியது. மல்கலின் - மிகுவதால். குறை - இன்றியமையாதது. எம் உற - இன்பம் உற.

வரையில் இரவில் வந்து போகலாம் எனத் தலைவன் எண்ணக் கூடும் ; அவ்வாறே இரவில் வந்து வந்து பழகினால் திருமண முயற்சி குறைந்து, காலம் நீட்டிக்கக் கூடுமே" என்று எண்ணினாள். அதற்கும் இடம் தரலாகாது என்று தன் கருத்தைத் தெளிவாக்கினாள். இனி வர வேண்டா என்றே கூறிவிட்டாள். அவ்வாறு கூறிய உடனே அவனுடைய நெஞ்சம் வருந்துமோ, தவறாக உணர்ந்து கொள்வானோ என்று அதையும் மாற்றிச் சொல்லத் தலைப் பட்டாள். ஒருகால் இரவில் வர விரும்பினாலும் வரலாம் என்றும், ஆனால் வந்து திரும்பும்போது தன் ஊர்க்கு அருகே சென்று சேர்ந்ததற்கு அடையாளமாகக் கொம்பு என்னும் கருவியை ஒலிக்க வேண்டும் என்றும், அந்த ஒலியைக் கேட்ட பிறகே தலைவியும் தானும் வருந்தும் துயரம் தீரும் என்றும் தெரிவித்தாள். இதனால், தலைவன் தவறு பட உணர இடம் இல்லை ; தான் நலமாகச் சென்று ஊர் திரும்புவது பற்றித் தோழியும் தலைவியும் கவலைப்படுகிறார் களே என்று உணர்ந்து அவர்களின் அன்பை நினைந்து உருகுவான் ; இவ்வாறு அவனுடைய உள்ளம் திருந்தித் திருமணம் செய்து கொள்ளும் வகையில் ஆராய்ந்து எடுத் துரைக்கின்றாள்.

" காட்டில் விலங்குகள் செல்லும் வழியில் யானைகள் திரியும். வானத்தில் உயரத்தில் இடியும் மிக முழங்கும். வழி களில் பாம்பும் புலியும் அஞ்சத் தக்கவைகளாக உள்ளன. இத்தகைய இராக்காலத்தில் குறுகிய வழியில் தனியாக வரு கிறாய். நீ திருமணம் செய்துகொள்ள விரும்பினாலும் விரும்பியதைப் பெறுவாய் (எங்கள் பெற்றோர் இணங்கு வார்கள்). இன்று முதல் இவ்வாறு வராதே. அல்லது

வந்தால், யாங்கள் இவ்விடத்தில் மயங்கி வருந்தும் துயரம் நேராதிருக்குமாறு செய்ய வேண்டும் ; அதற்காக, என்னைக் கண்டு விடை பெற்றுத் திரும்புங்காலத்தில், உன் சிற்றூரை அடைந்த பிறகு கொம்பு ஊத வேண்டும் ; காட்டில் வேட்டை ஆடும்போது பிரிந்த உன் நாய்களைத் திரும்ப அழைக்கும் குறிப்பைக் கொண்ட ஊதுகொம்பைச் சிறிது ஊத வேண்டும்.''

தோழி :

*கான மான்அதர் யானையும் வழங்கும் ;*
*வான மீமிசை உருமு நனி உரறும் ;*
*அரவும் புலியும் அஞ்சுதகவு உடைய ;*
*இரவுச் சிறுநெறி தமியை வருதி ;...*
*மன்றல் வேண்டினும் பெறுகுவை ; ஒன்றோ*
*இன்றுதலை யாக வாரல் ; வரினே*
*ஏமுறு துயரம் யாம்இவண் ஒழிய*
*எற்கண்டு பெயருங் காலை யாழநின்*
*கல்கெழு சிறுகுடி எய்திய பின்றை*
*ஊதல் வேண்டுமால் சிறிதே ; வேட்டொடு*
*வேய்பயில் அழுவத்துப் பிரிந்தநின்*
*நாய்பயிர் குறிநிலை கொண்ட கோடே.*

---

*318. கபிலர்.

மான் - விலங்கு. அதர் - வழி. உருமு - இடி. நனி - மிக. உரறும் - முழங்கும். தமியை - தனியாக. மன்றல் - திருமணம். ஏம் உறு - மயக்கம் உறுகின்ற. இவண் - இங்கு. எற்கண்டு - என்னைக் கண்டபிறகு. யாழ - அசை. கல்கெழு - மலையில் பொருந்திய. பின்றை - பிறகு. வேய்பயில் அழுவம் - மூங்கில் நெருங்கிய காடு. பயிர் - அழைக்கும். கோடு - கொம்பு என்னும் கருவி.

# 27. பழியான இன்பம்

தலைவன் தலைவியை நாடி இரவில் வந்துகொண்டிருந்த போது, ஒருநாள் தோழி அவனுக்கு அவ்வாறு வருதலின் தீமையை எடுத்துரைத்து, திருமணம் செய்துகொள்வதே கடமை என்பதை அறிவுறுத்தினாள். அவன் உள்ளம் உணர்ந்து கடமையைத் தூண்டும் வகையில், தக்க சொற்களால் நயமுற எடுத்துரைத்தாள்.

முதலில் தலைவன் வரும் வழி இராக்காலத்தில் எவ்வளவு கொடுமை நிறைந்ததாக, அஞ்சத்தக்கதாக உள்ளது என்பதை எடுத்துக்காட்டினாள்.

" கரடிகள் கூட்டமாகச் சென்று, சிதல் (செல்) எழுப்பிய செந்நிறப் புற்றின் உச்சி உடையுமாறு சிதைத்து, அந்தப் புற்றினுள் கிடைக்கும் புற்றுஞ்சோற்றை விரும்பிச் சூழ்ந்துகொண்டிருக்கும் ; அத்தகைய நள்ளிரவு நீ வரும் நேரம். குட்டி ஈன்ற பெண்புலி பசித்து வாடுவதைக் கண்ட ஆண்புலி யானையைக் கொன்று முழங்கும் பொல்லாத மலைவழி நீ வரும் வழி. அத்தகைய மரச் செறிவின் வழியாகத் தனியாக வருகின்றோமே என்று எண்ணித் தயங்காமல், துணிந்து இங்கே வந்துவிட்டாயே ; இதனால் நீ தீங்கே செய்கின்றாய் " என்றாள் :

தோழி :

கூனல் எண்கின் குறுநடைத் தொழுதி
சிதலை செய்த செந்நிலைப் புற்றின்
மண்புனை நெடுங்கோடு உடைய வாங்கி
இரைநசைஇப் பரிக்கும் அரைநாட் கங்குல்
ஈன்றணி வயவுப்பிணப் பசித்தென மறப்புலி
ஒளிறேந்து மருப்பின் களிறட்டுக் குழுமும்

*பனியிருஞ் சோலை எமியம் என்னுய்*
*தீங்குசெய் தனையே ஈங்குவந் தோயே...*

வரும் வழியில் பொல்லாங்கும் இடையூறும் ஓயாது கவலை விளைப்பதால் அவன்வருகை தீங்கும் ஆகும் என்று கூறினுள். பிறகு, திருமணம் பற்றி அறிவுறுத்தினுள்.

"நீ இடையில் ஒருநாள் வராமல் நின்றுலும் உன் காதலி - என் தோழி - உயிர்வாழ மாட்டாள். நீயும் அவளுடைய தோள்முயக்கத்தை விரும்புகிருய். ஆனுல் அந்த இன்பத்தைப் பழியற்ற வழியில் தேடிக்கொள்வது நல்லது. சான்றோர் மிக்க விருப்பம் கொண்டபோதிலும் பழியோடு வரும் இன்பத்தை விரும்ப மாட்டார்கள். ஆதலின் பழியற்ற வகையில் இல்லறம் நடத்தி இன்புறுவதற்குரிய திருமணம் செய்துகொண்டால் என்ன? நீங்கள் களவொழுக்கத்தில் காதலுறவுகொண்டதை அறியாமல் சுற்றத்தார் உங்களுக்குத் தொன்றுதொட்டு வரும் மரபின்படி திருமணம் நிகழ்த்தட்டும். அப்போது நீ இவளைத் துணைவியாகக் கொள்ளும் நிகழ்ச்சியை எம் கண்ணுரப் பார்ப்போம். இவளும் அப்போது புதிதாக நாணம் கொண்டு ஒடுங்கியிருப்பாள். அந்தக் காட்சியை அயலார் புதுமையாகப் பார்த்தல் போல் யாமும் பார்ப்போம்" என்கிருள்.

தோழி :

*நாளிடைப் படின்என் தோழி வாழாள் ;*
*தோளிடை முயக்கம் நீயும் வெய்யை ;*
*கழியக் காதலர் ஆயினும் சான்றோர்*
*பழியொடு வருஉம் இன்பம் வெஃகார் ;*
*வரையின் எவனே? வான்தோய் வெற்ப!...*
*மணப்பருங் காமம் புணர்ந்தமை அறியார்*

தொன்றியல் மரபின் மன்றல் அயரப்
பெண்கோள் ஒழுக்கம் கண்கொள நோக்கி
நொதுமல் விருந்தினம் போலஇவள்
புதுநாண் ஒடுக்கமும் காண்குவம் யாமே.*

## 28. வெள்ளமே ! நில்

தலைவன் திருமணத்திற்கு ஏற்பாடுகள் செய்வதாகக் கூறிப் பிரிந்தான் ; பல நாட்களாகியும் திரும்பிவரவில்லை. அவனைப் பற்றிய செய்தியும் ஒன்றும் தலைவிக்கு எட்டவில்லை. தலைவியின் துயரம் படிப்படியே வளர்ந்து பெருகியது. பல வாறு நினைந்து நினைந்து கலங்கினாள். தான் மெலிந்து வாடி வருந்தும் நிலையைத் தானே உணர்ந்தாள். துயரம் தாங்க முடியாமல் வாய்விட்டுக் கூறவும் தொடங்கினாள். தலைவன் தன்னை மறந்தான் என்றும், தன்னிடம் அன்பு இல்லாமல் மாறினான் என்றும், அவன் செய்தது கொடுமை என்றும் எண்ணி எண்ணி வருந்தினாள். அவனுடைய மலை தலைவியின் கண்ணுக்குத் தெரிந்ததாக இருந்தது. அங்கிருந்து சிற்றாறு ஒன்று தலைவியின் ஊர்ப்பக்கமாக ஓடியது. ஒருநாள் அதில் வெள்ளத்தைக் கண்டதும்

---

112. நெய்தற் சாய்த்துய்த்த ஆலூர்கிழார்.

கூனல் - கூனிய, வளைந்த. தொழுதி - கூட்டம். கோடு - உச்சி. நசைஇ - விரும்பி. பரிக்கும்-சூழும். ஈன்றணி - குட்டி ஈன்று பலநாள் ஆகாத. எமியம் - தமியம் - தனியாக உள்ளோம். வெய்யை-விரும்புகிறாய். கழிய - மிக. வெஃகார் - விரும்பார். மணப்பு அரு - மணப்பதற்கு அரிய. நொதுமல் - அயல்.

தலைவிக்கு அது புறப்படும் மலை நினைவுக்கு வந்தது ; அந்த மலையைச் சார்ந்தவன் தன் காதலன் என்பதும் நினைவுக்கு வந்தது. உடனே அதை நோக்கித் தன் துயரத்தைக் கூறினாள். தலைவனால் விளைந்த துன்பத்தை எடுத்துரைத்து, தன் நிலையை அவனுக்கு எடுத்துச் சொல்லுமாறு வேண்டினாள் ; தலைவனை அறம் இல்லாதவன் எனப் பழித்தாள் ; தன் தந்தையின் காட்டில் தங்கியிருந்து அமைதியாகச் செல்லுமாறு அதனை வேண்டினாள்.

" அணிகள் நெகிழ்வதற்குக் காரணமான துன்பம் மிக, நினைந்து வருந்தும் வருத்தத்தோடு பலவற்றையும் வெறுத்துச் சோர்ந்து, மெல்லிய தோள் நெகிழுமாறு வருந்தி, கொன்றைமலர்போல் (அழகு பாழ்பட நிறைந்து படர்ந்த) பசலையுற்ற மேனியை நோக்கி, நெற்றியும் பசலையுற்று இத்தகைய நிலை அடைந்த எமக்கு இங்கே அருள் செய்யாமல் உம்மவன் (உன் மலையின் தலைவன்) கொடுமை செய்தான். அந்தக் கொடுமையை எண்ணிக் கலங்கிக் கண்களில் கண்ணீர் விரைந்து நிரம்பிச் சொரியுமாறு செய்தான். அறத்தைக் கைவிட்டு நீங்குதல் உன் மலைநாட்டுத் தலைவனுக்கு என்ன என்று கருதப்படுமோ (மிகவும் எளிய செயல் போலும்). கரையை மோதி வரும் வெள்ளமே ! நீ போய்ச் சொல். இவ்வாறு சொல்லிக் கடிந்துரைத்து உன்னோடு வெறுப்புக் கொள்வேன் என்று அஞ்சி, அவர் மலையிலிருந்து கொணர்ந்த பல மலர்களையும் போர்த்து நாணத்தால் மிக ஒடுங்கி மறைந்து செல்கிறாய். மறைந்து செல்லும் உன்னையும் மலையிலிருந்து வந்து போகச் செய்து பிறகு அறம் இல்லாத வகையில் துறக்கவல்லவர் அவர். உண்மையான உறவு இல்லாதவர் அவர். அதையும் நோக்கா

மல் நெருப்புப் போன்ற மலர் நிறைந்த கிளைகளை உடைய வேங்கைமரங்களின் நிழலில் நின்று தங்கி, மழைபெய்து காப்பாற்றப் பெருகி, ஆரியரின் பொன் பொருந்திய இமய மலை போன்ற எங்கள் தந்தையின் பலவகை மலர் நிறைந்த காட்டில் நுழைந்து, இன்று இங்கே தங்கிச் செல்வாயாக. அவ்வாறு தங்கிச் சென்றால் உன் கடமை ஏதேனும் கெடுவது உண்டோ ? அவருடைய உயர்ந்த மலைநாட்டிலிருந்து வருகிறாயே. அதனால் தங்கிப் போகலாமே :"

தலைவி :

இழை நிலை நெகிழ்ந்த எவ்வம் கூரப்
படர்மலி வருத்தமொடு பலபுலந்து அசைஇ
மென்தோள் நெகிழச் சாஅய்க் கொன்றை
ஊழுறு மலரின் பாழ்பட முற்றிய
பசலை மேனி நோக்கி நுதல்பசந்து
இன்னேம் ஆகிய எம்இவண் அருளான்
நும்மோன் செய்த கொடுமைக்கு இம்மென்று
அலமரல் மழைக்கண் தெண்பனி மல்க
நன்றுபுற மாறி அகறல் யாழநின்
குன்றுகெழு நாடற்கு என்எனப் படுமோ ?
கரைபொரு நீத்தம் ! உரைஎனக் கழறி
நின்னொடு புலத்தல் அஞ்சி அவர்மலைப்
பன்மலர் போர்த்து நாணுமிக ஒடுங்கி
மறைந்தனை கழியும் நின்தந்து செலுத்தி
நயன்அறத் துறத்தல் வல்லி யோரே
நொதுமலாளர் ; அதுகண் ணோடாது
அழல்சினை வேங்கை நிழல்தவிர்ந்து அசைஇ
மாரி புறந்தர நந்தி ஆரியர்
பொன்படு நெடுவரை புரையும் எந்தை

*பல்பூங் கானத்து அல்கி இன்றுஇவண்*
*சேர்ந்தனே செலினே சிதைகுவது உண்டோ ?...*
*அவர், ஓங்குமலை நாட்டின் வருஉ வோயே.**

## 29. நின்ருன்

தலைவி நாளுக்குநாள் மெலிந்து போவதைக் குறித்து ஐயுற்ருள் செவிலி (வளர்ப்புத் தாய்). ஒருநாள் அவள் தலைவனையும் கண்டாள் ; அது ஐயத்தை வளர்த்தது. ஊரார் அலர் தூற்றுவதையும் ஒருவாறு கேட்டு உணர்ந் தாள். இந்த நிலைமையைத் தோழி அறிந்து இனி உண்

*398. இம்மென் கீரனர்.

இழை - அணிகலன். எவ்வம் - துன்பம். கூர - மிக. படர் - நினைந்து வருந்தல். மலி - மிக்க. புலந்து - வெறுத்து. பல - உணவு முதலியன. சாஅய் - வருந்தி. ஊழுறு - முறையாக மலர்கின்ற. இன்னேம் - இந்தத் தன்மை உற்றேம். இம்மென்று - விரைந்து ; இந்த அடைச் சிறப்பால். புலவர் கீரனர் ' இம்மென் கீரனர் ' எனக் குறிக்கப் பெற்ருர். அலமரல் - கலங்கிச் சுழலல். மழை - குளிர்ந்த. தெண்பனி - தெளிந்த கண்ணீர். மல்க - நிறைய. நன்று - அறம். புறமாறி - மாறி, விட்டு. அகறல் - அகல்தல் - நீங்கல். யாழ - அசை. கெழு - பொருந்திய. நீத் தம் - வெள்ளம். கழறி - கடிந்துகூறி. நயன் - நீதி, அறம். வல்லியோர் - வல்லவர். கொடுமலாளர் - அயலார். கண்ணோ டாது - பார்க்காமல். தவிர்ந்து - செல்லுதலை விட்டு. அசைஇ - தங்கி. புறந்தர - காக்க. நந்தி - பெருகி. நெடுவரை - பெரிய மலை, இமயம். புரையும் - போன்ற. அல்கி - தங்கி. சேர்ந்தனே - சேர்ந்து. சிதைகுவது - கெடுவது. வருஉவோய் - வருவோய்.

மையை ஒளிக்காமல் சொல்வதே நல்லது எனத் துணிந்தாள். தலைவியின் உடன்பாடும் பெற்ருள். செவிலிக்குச் சொல்ல முயன்ருள்.

செவிலியாகவே ஒருநாள் தலைவியின் வருத்தத்தையும் மாறுதலையும் குறித்துப் பேச்செடுத்தாள். அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு தோழி உண்மையை—தலைவனோடு காதல்கொண்டு வாழ்தலை—எடுத்துரைத்தாள்.

"நான் சொல்லப் போவது அன்னைக்குத் தெரிந்தாலும் தெரியட்டும். அலர் தூற்றுவதற்காகவே வாய் பெற்றுள்ள தெருப்பெண்டிர்க்குச் செய்தி எட்டினும் எட்டட்டும். வேருெரு காரணம் இல்லை என்பதை நீ அறியுமாறு சொல்லிக் கடல்தெய்வத்தை நோக்கிச் சூள் (உறுதிமொழி) தருவேன்."

(இவர்கள் கடலைச் சார்ந்த நெய்தல்நிலத்தில் வாழ்பவர்கள் ஆகையால், கடல்தெய்வத்தை நோக்கிச் சூள் உரைக்கும் வழக்கம் இருந்தது. இதற்கு ஏற்பவே, தினைப் புனம் வேட்டை முதலியன கூறப்படாமல், கடற்கரை விளையாட்டும் மீன் உணவும் இங்குக் கூறப்படுகின்றன.)

தோழி :

**அன்னை அறியினும் அறிக ; அலர்வாய்**
**அம்மென் சேரி கேட்பினும் கேட்க ;**
**பிறிதொன்று இன்மை அறியக் கூறிக்**
**கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கிக்**
**கடுஞ்சூள் தருகுவல் நினக்கே......**

இவ்வாறு சூளுரைத்து, தலைவன் காதல்கொண்ட முதல்நாள் நிகழ்ச்சியை – கடற்கரையில் ஒருநாள் நிகழ்ந்ததை - எடுத்துரைத்தாள்.

" அம்மா! கடற்கரைச் சோலைக்குச் சென்று விளையாடும் கூட்டத்தோடு கடலில் நீராடியும், சிறுவீடு கட்டியும், சிறுசோறு சமைத்துக் குவித்தும் களைத்த நிலை அடைந்தோம். களைப்புத் தீரச் சிறிது நேரம் அங்கே இருந்தோம். அப்போது ஒருவன் எங்களை அணுகிவந்து, ' பெண்களே! பகலும் போயிற்று ; எனக்குச் சோர்வும் மிகுதியாக உள்ளது. மெல்லிய இலையில் வைக்கப்படும் விருந்தாகிய உணவை உண்டு, இந்தச் சிற்றூரிலே யான் தங்கினால் என்னவோ' எனக் கேட்டான்" என்றாள் :

தோழி :

தொடலை ஆயமொடு கடலுடன் ஆடியும்
சிற்றில் இழைத்தும் சிறுசோறு குவைஇயும்
வருந்திய வருத்தம் தீர யாம்சிறிது
இருந்தனம் ஆக எய்த வந்து
" தடமென் பணைத்தோள் மடநல் லீரே!
எல்லும் எல்லின்று ; அசைவுமிக உடையேன் ;
மெல்லிலைப் பரப்பின் விருந்துஉண்டு யானும்இக்
கல்லென் சிறுகுடித் தங்கின்மற்று எவனோ?"
எனமொழிந் தனனே ஒருவன்...

செவிலி தன் ஐயம் உண்மையாவதை அறிந்து தொடர்ந்து கேட்டுக்கொண்டிருந்தாள். தோழி மேல் நிகழ்ந்ததை எடுத்துரைத்தாள் : அவனைக் கண்டு கவிழ்ந்த முகத்தோடு, அப்பால் சென்று நின்று, ' இங்குக் கிடைக்கும் எங்கள் உணவுகள் உமக்குத் தக்கவை அல்ல ; இழிந்த மீன் உணவுகள் ' என்று கூறினோம். உடனே, அவனைப் பற்றிக் கவலைப்படாதவர்கள் போல் நடித்து, ' நீண்ட கொடி அசையும் கப்பல்கள் தோன்றுகின்றன, தெரியவில்லையா ?' என்று சொல்லி, எம் சிறு வீடுகளைக் காலால் அழித்து

விட்டு, அங்கே நிற்காமல் பலரும் திரும்பிவந்தோம். அவ்வாறு திரும்பிவந்த பலருள்ளும் (இவளுக்கு உயிர்த்தோழி யான் என்று அறிந்து) என்னையே குறித்த பார்வையோடு 'மாதே! யான் போகட்டுமா?' என்று கலங்கிய நெஞ்சத்தோடு கூறினன். 'போகலாமே' என்றேன் யான். அவனே போகவில்லை. முன்போல் பார்த்தவாறே, தன் பெரிய தேரின் கொடிஞ்சியைப் பற்றிக்கொண்டு அங்கேயே நின்றான்; இன்றும் என் கண்ணுக்கு அவ்வாறு நிற்பது போலவே தோன்றுகின்றான்'' என்றாள்.

தோழி :

அவன்கண்டு
இறைஞ்சிய முகத்தெம் புறம்சேர்பு பொருந்தி
'இவை நுமக்கு உரிய அல்ல; இழிந்த
கொழுமீன் வல்சி' என்றனம்; இழுமென
'நெடுங்கொடி நுடங்கும் நாவாய் தோன்றுவ
காணுமோ' எனக் காலின் சிதையா
நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும்
என்னே குறித்த நோக்கமொடு 'நன்னுதால்
ஒழிகோ யான்' என அழிதகக் கூறி
யான்'பெயர்க' என்ன நோக்கித் தான்தன்
நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி
நின்றோன் போலும் இன்றும்என் கட்கே.*

---

*110. போந்தைப் பசலையார்.

சேரி - ஊரின் பகுதி. புகார் - ஆறு கடலில் புகுமிடம். கொடுஞ்சுழி - வளைந்த நீர்ச்சுழிகள். தொடலை - மாலை - மாலை போன்ற. ஆயம் - தோழியர் கூட்டம். எல் - பகல். எல்லின்று - ஒளி இழந்தது. அசைவு - சோர்வு. முகத்தெம் - முகத்தினேம் - முகம் உடையேம் ஆயினேம். வல்சி - உணவு. நாவாய் - கப்பல். சிதையா - சிதைத்து. ஒழிகோ - நீங்கட்டுமா. கொடிஞ்சி - தேரின் முன்னுறுப்பு. கட்கு - கண்ணுக்கு.

# 30. மகளே தோழி !

பெற்றோர் அறியாமல் காதல்வாழ்க்கை வாழ்ந்த காலத்தில், தலைவனை அடிக்கடி காண முடியாமையால் தலைவி பலகாலும் நினைந்து நினைந்து வருந்திக்கொண்டிருந்தாள். அவள் உண்பதில் விருப்பம் இல்லாதவளாய் உணவையும் மறுத்துவந்தாள். வழக்கமாக விரும்பிக் குடித்துவந்த பாலையும் வெறுக்கத் தொடங்கினாள். உடலின் அழகுநிறம் மாறி வாடி, மெலிந்த நிலைக்கு உரிய பசலை உற்றாள். இந்த நிலையைக் கண்ட தாய் காரணம் இன்னது என்று அறியாமல் கலங்கினாள். அவளோடு நெருங்கிப் பழகும் தோழிக்கு ஒருகால் உண்மைக் காரணம் தெரிந்திருக்கலாம் என்று கருதி, தோழியை அணுகிக் கேட்டாள். " அதுபற்றி எனக்கும் தெளிவாகத் தெரியாது அம்மா. ஆனால் ஒருகால் இந்தக் காரணம் இருத்தல் கூடும் " என்று ஒரு நிகழ்ச்சியைச் சொல்லத் தொடங்கினாள்.

தோழி :

> *அன்னாய் வாழிவேண்டு அன்னை ! நின்மகள்*
> *பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு*
> *நனிபசந் தனள்என வினவுதி ; அதன்திறம்*
> *யானும் தெற்றென உணரேன் மேல்நாள்...*

உண்மைக் காரணம் தோழிக்கு நன்கு தெரிந்ததே. ஆயினும் அவள் உண்மை அறியாதவள்போல் நடித்தாள். உண்மையை உள்ளவாறு கூறின், இத்தனை நாளும் தமக்குக் கூறாமல் மறைத்ததைக் குறித்துத் தாயும் தந்தையும் மற்றவர்களும் வருந்துவர். தோழியும் இதற்கு உடந்தையாக இருந்ததை எண்ணி வெறுப்பும் கொள்வர். இவ்வாறு வெறுப்புக்கும் சினத்துக்கும் இடம் தருமாறு உண்மையைக்

கூறின், தோழியின் நோக்கம் நிறைவேறாது. ஆகவேதான் உண்மை அறியாதவள்போல் நடித்து, தாய் தானாகவே எண்ணி உணர்ந்துகொள்ளுமாறு ஒன்றை உரைத்தாள். நடந்தது நடந்தவாறே கூறுவதைவிட, தாயின் நெஞ்சில் இரக்கம் தோன்றித் திருமணத்துக்கு உடன்படும் வகையில் தக்க சொற்களால் ஓரளவு புனைந்துரையும் சேர்த்துக் கூறினாள்.

" அம்மா! முன் ஒருநாள் பூக்கள் மலிந்த மலைச் சாரலில் தோழிமாரோடு வேங்கைமலர் கொய்வதற்காகச் சென்றோம். அப்போது நாங்கள் வேங்கை மரத்தின் கீழே நின்று புலிபுலி* என்று ஆரவாரம் எழுப்பினோம். இந்த ஆரவாரம் எழுந்ததை எங்கிருந்தோ கேட்டான் ஒருவன். அவன் செங்கழுநீர்ப் பூக்களால் கட்டிய மாலை அணிந்திருந்தான். தலையின் ஒருபக்கத்தில் வெட்சிப் பூவால் கட்டிய கண்ணி சூடியிருந்தான். மார்பில் செந்நிற மான சந்தனம் பூசியிருந்தான். வில்லைத் தாங்கிக்கொண்டு கையில் அம்பு எடுத்துக்கொண்டு எங்களை நோக்கி ஓடி வந்தான். எங்கள் ஆரவாரத்தைக் கேட்டு மெய்யாகவே புலி வந்தது என்று எண்ணி விரைந்து ஓடிவந்தான். வந்ததும் புலி இல்லாததைக் கண்டு, அந்தப் புலி எவ்வழியாகச் சென்றது எனக் கேட்டு நின்றான். அவனைக் கண்டதும் நாங்கள் ஒருவர் முதுகில் ஒருவராக மறைந்து ஒடுங்கி நாணி

*புலி புலி என்னும் பூசல் - வேங்கை மரத்தின் கீழே நின்று புலி புலி என்று ஆரவாரம் செய்தால், அந்த மரத்தின் கிளைகள் வளைந்து மலர் தரும் என்பது பழங்காலத்து மக்களின் நம்பிக்கை. அதனால் மலர் கொய்யும் சிறுமியர் அவ்வாறு ஒலித்து மலர் பறிப்பது வழக்கமாக இருந்தது.

னின்றோம். அப்போது அவன் "மங்கையரே! உம் வாயில் பொய்ச் சொற்களும் உண்டோ?" என்று கூறித் திரும்பிச் செல்லப் புறப்பட்டான். குதிரைகளை மெல்லச் செலுத்தித் தேரோட்டத் தொடங்கினான். அதற்குமுன் உன் மகளின் கண்களைப் பலமுறை நோக்கிவிட்டுச் சென்றான். பிறகு நாங்கள் மலர் பறித்து விளையாடிக்கொண் டிருந்தோம். பகற்பொழுது நீங்கும் நேரத்தில் கதிரவன் சாயும் வேளையில், உன் மகள் அவன் மறைந்த திசையை நோக்கினாள்; 'தோழி! இவன் ஓர் ஆண்மகனே' என்று என்னிடம் கூறினாள். ஆராய்ந்து அறிய வல்லவர்களுக்கு அந்த நிகழ்ச்சியில் கொள்ளத்தக்க காரணம் ஏதாவது இருக்கலாம்."

தோழி:

மேனாள்,
மலிபூஞ் சாரல்என் தோழி மாரோடு
ஒலிசினை வேங்கை கொய்குவம் சென்றுழிப்
புலிபுலி என்னும் பூசல் தோன்ற
ஒண்செங் கழுநீர்க் கண்போல் ஆயிதழ்
ஊசி போகிய சூழ்செய் மாலையன்
பக்கம் சேர்த்திய செச்சைக் கண்ணியன்
குயம்மண்டு ஆகம் செஞ்சாந்து நீவி
வரிபுனை வில்லன் ஒருகணை தெரிந்துகொண்டு
'யாதோ மற்றுஅம் மாதிறம் படர்' என
வினவி நிற்றந் தோனே; அவற்கண்டு
எம்முள் எம்முள் மெய்ம்மறைபு ஒடுங்கி
நாணி நின்றனெம் ஆகப் பேணி
... ... 'மடவீர் நும்வாய்ப்
பொய்யும் உளவோ' என்றனன் பையெனப்
பரிமுடுகு தவிர்த்த தேரன் எதிர்மறுத்து
நின்மகள் உண்கண் பன்மாண் நோக்கிச்
சென்றோன் மன்றஅக் குன்றுகிழ வோனே

*பகல்மாய் அந்திப் படுசுடர் அமையத்து*
*அவன்மறை தேஎம் நோக்கி மற்றுஅவன்*
*மகனே தோழி என்றனள் ;*
*அதன்அளவு உண்டுகோள் மதிவல் லோர்க்கே.**

## 31. துணிந்து செல்க

தலைவனுடன் வெளியூர்க்குச் செல்வது தவிர வேறு வழி இல்லை என்ற நிலைமை ஏற்பட்டது. தலைவி அதற்கு உடன்படும் வகையில் தோழி தக்க அறிவுரைகள் கூறினாள். தலைவியும் உடன்பட்டாள். பயணத்திற்கு உரிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. உரிய நேரத்தில் தலைவன் வந்து சேர்ந்தான். தோழி தலைவியிடம் சென்று அவன் வந்துள்ள செய்தியைத் தெரிவித்துச் சில உரைகள் கூறி விடை கொடுத்து அனுப்பினாள்.

" தலைவன் பயணத்திற்கு உரியவனாக இருக்கின்றான். அவனுடைய வேல்களும் நெய் (எண்ணெய்) பூசப்பட்டு விளக்கமாகத் தோன்றுகின்றன. ஏவலாளரும் புறப்பட அமைந்துள்ளனர். உன் பயணத்திற்கு உரியனவும் அமைந்துவிட்டன. உனக்கு உரிய மாலைகளும் கட்டப் பட்டன ; தழையுடைகளும் தொடுக்கப்பட்டன. நீங்கள்

*அகநானூறு, 48. தங்கால் முடக்கொற்றனார்.

பழங்கண் - துன்பம். பசந்தனள் - பசலை உற்றாள். தெற்றென - தெளிவாக. செச்சை - வெட்சி. குயம் - கொங்கை. மண்டுதல் - நெருங்குதல். மா - விலங்கு - புலி. நிற்றந்தோன் - நின்றான். பரி முடுகு - குதிரையின் வேகம். பன்மாண் - பலமுறை. தேஎம் - திசை. கோள் - கொள்ளுதல்.

செல்லும் வழியில் வேனில்வெப்பம் மிகுதியாக இராது. நீர் இல்லாமல் வறண்டிருந்த வெப்பம் நீங்குமாறு நிலம் மழையைப் பெற்றுள்ளது ; மரங்கள், முதிர்ந்த இலைகளை உதிர்த்துவிட்டுச் சிறு சிறு தளிர்கள் தளிர்த்துள்ளன. சோலைகளும் நறுமலர்களைச் சூடிக்கொண்டவைபோல் தோன்றிப் பலவும் ஒரு சேரத் தேன் பொருந்தி நிறைந் துள்ளன. வழியில் உள்ள காடுகளும் மிக நல்லனவாக மாறியுள்ளன. பின்பனிக்காலம் கழிந்தபின் வந்த இள வேனில்காலத்தில் பால் போல் பரந்த நிலாவினை உடைய மாலைப் பொழுது தூதாக வந்தது" என்று பயணத்திற்கு ஏற்ற ஏற்பாடுகள் முடிந்து, இடமும் காலமும் நன்மையாக வாய்த்திருப்பதை எடுத்துரைத்தாள்.

தோழி :

**வேலும் விளங்கின ; வினைஞரும் இயன்றனர் ;**
**தாரும் தையின ; தழையும் தொடுத்தன ;**
**நிலம்நீர் அற்ற வெம்மை நீங்கப்**
**பெயல்நீர் தலைஇ உலவைஇலை நீத்துக்**
**குறுமுறி ஈன்றன மரனே ; நறுமலர்**
**வேய்ந்தன போலத் தோன்றிப் பலவுடன்**
**தேம்படப் பொதுளின பொழிலே ; கானமும்**
**நனிநன்று ஆகிய ; பனிநீங்கு வழிநாள்**
**பால்எனப் பரத்தரு நிலவின் மாலைப்**
**போதுவந் தன்று தூதே...**

எல்லாம் வாய்த்தபிறகு, தலைவியின் உள்ளத்தில் துணிவு வாய்க்க வேண்டுமே என்று தோழி உணர்ந்து அதற்கு ஏற்றவை கூறத் தொடங்கினாள் : பெற்ற தாய்தந்தை யரையும் பழகிய தோழியரையும், ஆடிய இடங்களையும், வளர்த்த செடிகொடிகளையும் விட்டுப் பிரிய முடியாமல்

அவள் மனம் கலங்கக் கூடும் என்று உணர்ந்தாள். "நீயும் துணிவுகொண்டு புறப்பட வேண்டும். கலங்காத மனத்தோடு, என் சொல்லை விரும்பிக் கேட்டுக்கொள். என் நெஞ்சம் விரும்பும் நங்காய்! மேடையில் வளர்ந்துள்ள செடிகள் உலந்துபோனாலும், வயலைக்கொடி வாடிப்போனாலும், நொச்சியின் மெல்லிய கிளைகளின் வளைந்த கதிர்கள் வாடிச் சாய்ந்தாலும் அவற்றைப் பற்றிக் கவலைகொண்டு கலங்காதே. உன்னைவிட மடப்பம் உடைய, உன்னை மிக விரும்பிய உன் அன்னை அடையும் துன்பத்தையும் உன் தமையன்மாரின் புலி போன்ற தலைமையின் அச்சத்தையும் கருதி மனம் கலங்காதே. மனத்தில் வன்மை கொள்; துணிவு கொள். பிரியுமுன் என்னை இன்னும் நன்றாக மார்புறத் தழுவிக்கொள்" என்றாள்:

தோழி :

நீயும்
கலங்கா மனத்தை ஆகி என்சொல்
நயந்தனை கொண்மோ நெஞ்சு அமர் தகுவி!
தெற்றி உலறினும் வயலை வாடினும்
நொச்சி மென்சினை வணர்குரல் சாயினும்
நின்னினும் மடவள் நனிநின் நயந்த
அன்னை அல்லல் தாங்கிநின் ஐயர்
புலிமருள் செம்மல் நோக்கி
வலியாய்; இன்னும் தோய்கநின் முலையே.*

*259. கயமனார்.

வினைஞர் - வேலையாட்கள். உலவை இலை - முதிர்ந்த இலை. முறி - தளிர். வேய்ந்தன - அணிந்தன. தேம்பட - மலர்களில் தேன் சொரியுமாறு. பொதுளின - செறிந்தன. வழிநாள் - பின் நாள். பாத்தரு - பரவும். வந்தன்று - வந்தது. அமர் - விரும்பும்.

## 32. மெய்ந்நிழல்

குடும்பத்தில் செல்வ மகளாக வளர்ந்தவள் தலைவி. அவளிடம் தாயும் தந்தையும் மிக்க அன்பு செலுத்தினர். அவளும் அவர்களிடத்தில் பேரன்பு கொண்டிருந்தாள். அவள்வாழ்க்கையில் காதல் இடம் பெற்று வளர்ந்தது; காதலனோடு வெளியூர்க்குச் சென்று மணந்துகொள்ளுதலே வழி என்னும் நிலைமையும் ஏற்பட்டது. ஆயினும் தாயை யும் வீட்டையும் விட்டுப் பிரிய முடியாமல் மிக மிக வருந் தினாள். சில நாட்களுக்கு முன்பாகவே அதை நினைந்து நினைந்து கலங்கினாள்.

அவள் வீட்டை விட்டு வெளியேறுவதற்கு முந்திய நாள் ஒன்று நிகழ்ந்தது. தாய் அவளுடைய போக்கில் நேர்ந்துள்ள மாறுபாட்டை உணர்ந்தவளாய், " கிளி பந்து கழங்கு இவற்றைக் கொண்டு விளையாடுவதையே எப்போ தும் விரும்பும் என் மகள் ஏன் இப்படி மாறினாளோ! அவ ளுடைய அருளும் அன்பும் மென்மையும் பெண்தன்மையும் முன்போல் இல்லையே! ஏன் இப்படி மாற வேண்டும்? மகளுக்கு என்ன துன்பமோ? என் உயிர் போகக்கூடாதா?" என்றாள். கன்றோடு கட்டப்பட்ட பசுவைப் போல் விரைந்து அணுகி மகளுடைய நெற்றியைத் தடவி அவளைத் தழுவிக் கொண்டாள். அப்போது தலைவி, மார்பில் வியர்வை தோன்று மாறு தாயைப் பலமுறை தழுவினாள். அவ்வாறு மிக்க அன்பு கொண்டு மகள் தன்னைத் தழுவுவதற்குக் காரணம் ஒன்று இருக்க வேண்டும் என்பதைத் தாய் உணரவில்லை. ஆயின், யாரும் அறியாமல் தலைவி தலைவனோடு வெளியூர்க்குச்

---

தகுவி - தகுதி உடையவளே. வணர் - வளைந்த. குரல் - கதிர் - மருள் - போன்ற. செம்மல் - தலைமை. வலியாய் - துணியாய் - துணிவாய்.

சென்றுவிட்டபிறகு, அவளை நினைந்து நினைந்து ஏங்கிய தாயின் நெஞ்சம், முந்தியநாள் நிகழ்ந்த இந்த நிகழ்ச்சியை நினைந்தது. நினைந்ததும், "இவ்வாறு பலமுறை என்னைத் தழுவினளே! காரணம் அறியாமல் இருந்துவிட்டேனே! அந்தோ" என்று கலங்கினள் தாய்.

தாய் :

கிளியும் பந்தும் கழங்கும் வெய்யோள்
அளியும் அன்பும் சாயலும் இயல்பும்
முன்னாள் போலாள் இறீஇயர்என் உயிர்எனக்
கொடுந்தொடைக் குழவியொடு வயின்மரத்து யாத்த
கடுங்கண் கறவையின் சிறுபுறம் நோக்கிக்
குறுக வந்து குவவுநுதல் நீவி
மெல்லெனத் தழீஇயினேன் ஆக, என்மகள்
நன்னர் ஆகத்து இடைமுலை வியர்ப்பப்
பல்கால் முயங்கினள் மன்னே! அன்னோ!

இவ்வாறு பலவாறு எண்ணி எண்ணி ஏங்கினள். மகள் தன்னிடம் வெறுப்புக் கொள்வதற்குக் காரணமே இல்லை என்றும், தன்னிடம் அன்பு இருந்த காரணத்தால் பிரிய மனம் இல்லாமல் தன்னைப் பலமுறை தழுவினள் என்றும் எண்ணி உருகினள். அவளுடைய காதலன் அவளைப் பலவாறு பாராட்டி அவளுடைய உள்ளத்தைக் கவர்ந்திருக்க வேண்டும் என்றும், அதனால்தான் அவள் அவனை நம்பிக் காட்டுவழியே சென்றாள் என்றும் உணர்ந்தாள். உடனே அவனும் அவளும் சென்ற காட்டு வழி வெயிலின் கொடுமையால் பாலையாய் மாறி நிழல் இல்லாமல் இருக்கும் என்றும், மான்களும் நீர்வேட்கையால் வருந்தி வாடிய மரலைத் தின்று சுவைக்கும் கொடுமை உள்ள பாலை அது என்றும் எண்ணி வருந்தினள். "இத்தகைய காட்டு

வழியில் அவனுடன் செல்லத் துணிந்திருந்தாள் என்பது எனக்குத் தெரியாமல் போய்விட்டது. தெரிந்திருந்தால், இந்த வீட்டில் அவள் எங்கும் தனியே செல்ல விட்டிருக்க மாட்டேனே ! அவள் செல்லும் இடம் எல்லாம், உடம்பின் நிழல்போல் யானும் பின்தொடர்ந்து சென்றிருப்பேன். தோழிமாரோடு சேர்ந்து, கால் சிலம்பு ஒலிக்க அவள் விளையாடும் இடமெல்லாம் நான் அவளை விட்டு நீங்காமலிருந்திருப்பேன் " என்று தன்னை நொந்துகொண்டாள் :

தாய் :

*விறல்மிகு நெடுந்தகை பலபா ராட்டி*
*வறன்நிழல் அசைஇ வான்புலந்து வருந்திய*
*மடமான் அசாஇனம் திரங்குமரல் சுவைக்கும்*
*காடுஉடன் கழிதல் அறியின் தந்தை*
*அல்குபதம் மிகுத்த கடியுடை வியன்நகர்ச்*
*செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழல் போலக்*
*கோதை ஆயமொடு ஓரை தழீஇத்*
*தோடுஅமை அரிச்சிலம்பு ஒலிப்பஅவள்*
*ஆடுவழி ஆடுவழி அகலேன் மன்னே.**

---

*49. வண்ணப்புறக் கந்தரத்தனார்.

வெய்யோள் - விரும்பியவள். அளி - அருள். சாயல் - மென்மை. இறீஇயர் - அழிக. கொடுந்தொடை - வளைந்த தொடை. குழவி - கன்று. வயின்மரத்து - மரத்துவயின் - மரத்தில். யாத்த - கட்டிய. கறவை - பசு. சிறுபுறம் - முதுகு. குவவு - வளைந்த. நுதல் - நெற்றி. நன்னர் - நன்மை. ஆகம் - மார்பு. விறல் - வெற்றி. அசைஇ - தங்கி. வான் - மழை. புலந்து - வெறுத்து. அசா - தளர்ச்சியுற்ற. திரங்கு - வாடி வதங்கிய. அல்குபதம் - சேமிப்பான உணவுப்பொருள். கடி - காவல். வியன் நகர் - பெரிய வீடு. ஆயம் - தோழியர் கூட்டம். ஓரை - சிறுமியர் விளையாட்டுள் ஒருவகை. தோடு - தொகுதி. அரி - பரல்.

பாலைவனத்தில் மான்களும் உணவு இல்லாமல் வாடிய மரலைத் தின்று வருந்தும் கொடுமையை நினைந்த தாயின் நெஞ்சம், வீட்டில் உணவுப் பொருள் மிகுந்திருப்பதை நினைந்து, அதைப் பொருட்படுத்தாமல் பிரிந்தாளே என்று ஏங்கியது. நல்ல காவல் வீட்டிற்கு அமைந்திருந்தும், வீட்டாரின் அன்பைப் புறக்கணித்து, யாரும் அறியாமல் வெளியேறிவிட்டாளே என்றும் தாயின் நெஞ்சம் எண்ணிக் கலங்கியது.

## 33. அவள் நடப்பாளோ ?

தலைவி வீட்டை விட்டுத் தலைவனுடன் வெளியூருக்குச் சென்றுவிட்டாள். தாய் இங்கும் அங்கும் தேடிப் பார்த்துக் கலங்கினாள். பிறகு உண்மை அறிந்ததும், பாலைவழியில் தன் மகள் சென்று என்ன துன்பம் உறுவாளோ என்று வருந்தி அவளுடைய மென்மைத் தன்மையை நினைந்து உருகினாள்.

" யான் நோகின்றேன். என் உள்ளமும் நோகின்றது. இனிய சொல் பயின்ற ஆயத்தாரோடு (தோழியர் கூட்டத்தோடு) சேர்ந்து பந்தாடும்போது, பந்து சென்ற வழியில் சிறிது ஓடிச் சென்றாலும் மிகவும் நொந்து வருந்துவாள். அய்யோ ! அத்தகைய மென்மை உடையவள் என் மகள் " என்று அவள் வீட்டிலிருந்த காலத்தில் தோழிமாரோடு பந்து விளையாடிக் களைத்த மென்மையை நினைந்து உருகினாள்.

தாய் :

**நோகோ யானே ; நோதகும் உள்ளம் ;**
**அந்தீங் கிளவி ஆயமொடு கெழீஇப்**

*பந்துவழிப் படர்குவள் ஆயினும் நொந்துநனி*
*வெம்புமன் அளியள் தானே...*

இவ்வளவு மென்மை உடைய பெண் இப்போது வறண்ட பாலைவழியில் உள்ள கொடிய துன்பங்களைத் தாங்கிக்கொண்டு செல்ல முடியுமோ என்றும், அவள் நம்பிச் சென்ற காதலன் உண்மையாகவே துணையாக இருந்து உதவுவானு என்றும் எண்ணி வருந்தினுள்.

"அத்தகைய மெல்லியல் இப்போது கொடியவன் ஒருவன் பின் சென்றிருக்கின்றுள். அஞ்சாமை உடைய அவன் மார்புறத்தழுவி இன்சொல்கூறிக் கவா, அச்சொல்லை விரும்பி, அதனுல் நமக்கு வரும் துன்பத்தை நினைத்துப் பார்க்காமல் சென்றுவிட்டாள். பசுமையே அற்றுப்போன வழிகள் - பயனற்ற அரிய வழிகள் - அவளுடைய நல்ல அடிகளுக்குப் பொருந்தியவை அல்ல. மெல்லியல் அந்த வழிகளைக் கடந்து செல்ல முடியுமோ ?" என்று தனக்குள் கூறி வருந்தினுள்.

தாய் :

*இனியே,வன்க ணுளன் மார்புற வளைஇ*
*இன்சொல் பிணிப்ப நம்பி நங்கண்*
*உறுதரு விழுமம் உள்ளாள்...*
*பைதரு சிமையப் பயம்நீங்கு ஆரிடை*
*நல்லடிக்கு அமைந்த அல்ல ! மெல்லியல்*
*வல்லுநள் கொல்லோ தானே...*
*மைபடு மாமலை விலங்கிய சுரனே.**

*153. சேரமான் இளங்குட்டுவன்.

நோகு - வருந்துகிறேன். படர்குவள் - செல்வாள். வன்கணுளன் - இரக்கமற்ற கொடியவன். நம்பி - விரும்பி. விழுமம் - துன்பம். பைது அறு - பசுமை அற்ற. ஆரிடை - அருவழி. மை - மேகம். விலங்கிய - குறுக்கிட்ட.

## 34. அறம் இல்லாதவன்

தன் காதலனோடு மகள் வெளியூருக்குச் சென்று விட்டாள் என்று அறிந்த தாய் பலவாறு எண்ணி எண்ணி வருந்தினாள். அவளுடைய மென்மையை நினைந்தாள்; தான் அவளைச் சீரும் சிறப்புமாக, செல்வமாக வளர்த்த நாட்களை நினைந்தாள்; அத்தகைய மெல்லியல் இப்போது பொல்லாத பாலைவழியில் நடந்து செல்லவும் முடியுமோ என எண்ணிக் கலங்கினாள். தலைவன் அவளை நம்பிக்கை யூட்டி அழைத்துச் சென்று துன்பப்படுத்துகிறான் என எண்ணி 'அறம் இல்லாதவன்' என்று பழித்தாள்.

"சீர்பொருந்திய இந்தப் பெரிய வீட்டில் மகள் விளையாடிக் களைத்துப் போவதையும் காணப் பொறுக்காமல் வளர்த்தேனே. அவள் கால் சிலம்பு ஒலித்து விளங்க நடந்து, விளையாட்டுக் கூட்டத்தோடு சேர்ந்து சிறிது நேரம் பந்து ஆடினாலும் களைத்துப் போவாள். அதை உணர்ந்து, 'வா அம்மா' என்று அழைத்துப் பாராட்டுவேன். உடனே, அவளுடைய களைப்புத் தீர, நிறையப் பால்வார்த்த கிண்ணத்தை எடுத்துக் கொண்டு போய் உண்ணச் செய்வேன். 'என் பங்குக்கு உண்டாய்; இனி உன் தந்தையின் பங்குக்கும் ஒருமுறை உண்ண வேண்டும்' என்று உண்ணச்செய்வேன். இவ்வாறு பிறந்தநாள் முதல் சிறப்புச் செய்து வளர்த்தேன். அழகு புனைந்து வளர்த்தேன்; அத்தகைய என் மகள் இப்போது அறம் இல்லாத ஒருவனோடு (இரக்கம் இல்லாதவனோடு) பாலை வழியில் சென்றாள். இதை மறந்து அமைதி யுறாத நெஞ்சமாக உள்ளது என் நெஞ்சம். ஆனால் அந்த நெஞ்சத்தை யான் நோகவில்லை. நீர் இல்லாத நெடுவழியில் தன் இளமை யழகு கெடுமாறு மெலிந்து வருந்தி நடந்து செல்வாளோ என்றுதான் வருந்துகிறேன்":

தாய் :

*சீர்கெழு வியன்நகர் சிலம்புநக இயலி*
*ஓரை ஆயமொடு பந்துசிறிது எறியினும்*
*வாரா யோஎன்று ஏத்தி...*
*பால்பெய் வள்ளம் சால்கை பற்றி*
*என்பாடு உண்டனை ஆயின் ஒருகால்*
*தந்தை பாடும் உண்என்று ஊட்டிப்*
*பிறந்ததற் கொண்டும் சிறந்தவை செய்துயான்*
*நலம்புனைந் தெடுத்தஎன் பொலந்தொடிக் குறுமகள்*
*அறனி லாளனொடு இறந்தனள் இனிஎன*
*மறந்தமைந் திராஅ நெஞ்சம் நோவேன்*
*...நீர்இல் நீளிடை*
*மடத்தகை மெலியச் சாஅய்*
*நடக்குங் கொல்என நோவல் யானே.**

## 35. கலுழும் நெஞ்சு

தலைவி தன் காதலனோடு வீட்டை விட்டு வெளியூர்க்குப் போய்விட்டாள் என்று அறிந்த தாய் தன் மகளைக் காணுமல் பலவாறு நொந்து வருந்தினள். தலைவியின் தோழி அவள் வருந்தும் துயரைத் தணிக்க முயன்றாள். " அவள் மலை வழியைக் கடந்து சென்றபோதிலும், அங்கே நெடுங்காலம் இருக்கமாட்டாள். நம்மைநினைந்து வந்துவிடுவாள் ; விரை

---

*219. கயமனர்.

வியன் - பெரிய. நகர் - வீடு. நக - விளங்கி. இயலி - நடந்து. ஓரை - விளையாட்டு. ஆயம் - கூட்டம். வள்ளல் - கிண்ணம். சால்கை - நிறைவு. பாடு - பங்கு. பொலந்தொடி - பொன் வளையல். இறந்தனள் - சென்றாள். மடத்தகை - மடப்பமான அழகு.

வில் வருவாள். நீ வருந்த வேண்டா" என்று தாயின் மனம் தேறுமாறு சில சொற்கள் கூறினாள்.

தோழியின் சொற்களைக் கேட்ட தாய் மனம் தேற வில்லை. "மகளே! நான் சொல்வதைக் கேள். உன் தோழி யாகிய என் மகள் வீட்டை விட்டுப் பிரிந்து சென்றாளே என்று என் நெஞ்சம் கலங்கவில்லை. அவள் வீட்டை விட்டுப் பிரிந்த பிறகு இந்த அழகான வீடே பொலிவு இழந்து வெறிச்சென்றிருக்கின்றது. உண்மைதான். ஆனால் அதற் காக நான் வருந்தவில்லை. காதலனாகிய அவனோடு பெரிய மலை வழியைக் கடந்து சென்றுவிட்டாளே என்று அதற் காகவும் நான் வருந்தவில்லை. நான் வருந்துவதற்குக் காரணம் வேறு. அவள் சென்ற வழியில் அஞ்சத்தக்க காடுகள் உள்ளன. அவற்றை என்ன பாடு பட்டுக் கடந்து செல்ல வேண்டியிருக்கும். அந்தக் காட்டு வழியில் வேடர் களின் சிற்றூர் இருக்கும். அந்த வேடர்கள் பசுமந்தை களைக் கவர்பவர்கள். கன்றுகளைக் காணாமல் துன்பப்பட்டுச் செவி சாய்த்து வருமாறு பசுக்களைக் கொண்டுவந்து அடைத்து வைத்திருப்பார்கள். அவர்களுடைய சிற்றூர் அது. அந்த ஆரவாரமான ஊரில் என் மகள் எப்படி அமைதியாக உறங்கப் போகின்றாள்? அங்கே அவள் இரவில் தங்கியிருக்க வேண்டும். அவள் தங்கும் வீடு முதியவள் ஒருத்தியின் வீடாக இருக்கலாம். (இந்த அழகிய வீடு போல் இல்லாமல்) கால்கள் சிதைந்து சோர்ந்த குடிசை யாக இருக்கலாம். அங்கே மயில்போன்ற என் மகள் நடந்து தளர்ந்த சோர்வோடு தலைவன் தன் தோளே துணையாகத் துயிற்றுவிக்கவும் துயிலாமல் வருந்துவாள். வேட்டைமேற் செல்லும் கள்வர் ஒலிக்கும் பறையின்

ஒலியை அவள் அப்போது கேட்டு வருந்துவாளோ என்று தான் என் நெஞ்சம் கலுழ்கின்றது. அதைக் குறித்தே வருந்துகிறேன்" என்றாள்.

மற்றவர்கள் தலைவியின் எதிர்காலத்தைப் பற்றிப் பல வாறு எண்ணிக் கவலைப்படும் நிலையில், தாயின் நெஞ்சம் மென்மையுற்றுக் குழைந்து அடுத்த வேளையில் அவளுக்கு நேரக்கூடிய துன்பத்தை நினைந்து கலங்கியதை இப்பாட்டு விளக்குகின்றது. அழகிய பெரிய வீட்டில் மகள் செல்வாக் கோடு வாழ்ந்த வாழ்வை ஒருபுறம் எண்ணி, முன் அறியாத சிற்றூரில் ஒரு சிறு குடிசையில் அவள் தங்கப்போவதையும் எண்ணியது அவளுடைய நெஞ்சம். ஆடல்பாடலில் மகிழ்ந்து ஆயத்தாரோடு பொழுது போக்கிய மகள், இப் போது கொள்ளைக்கு எழுவோரின் கொடிய பறையொலி கேட்டு நடுங்குவாள் என எண்ணிக் கலங்கினாள். மெத் தென்ற அணையில் அமைதியாக அச்சம் இன்றி உறங்குமாறு தான் வளர்த்து வந்த நிலைமையையும், அச்சமும் ஆரவாரமும் நிறைந்த சூழலில் தலைவனுடைய தோளே துணையாக அவள் உறங்கவேண்டிய நிலையையும் எண்ணிக் கலுழ்ந்தாள்.

தாய் :

*கேளாய் வாழியோ மகளை! நின் தோழி*
*திருநகர் வரைப்பகம் புலம்ப அவனொடு*
*பெருமலை இறந்தது நோவேன் ; நோவல்...*
*அஞ்சுவரத் தகுந கானம் நீந்திக்*
*கன்றுகா ணாதுபுன் கண்ண செவிசாய்த்து*
*மன்றுநிறை பைதல் கூரப் பலவுடன்*
*கறவை தந்த கடுங்கால் மறவர்*
*கல்லென் சீறூர் எல்லியின் அசைஇ*
*முதுவாய்ப் பெண்டின் செதுகால் குரம்பை*

மடமயில் அன்னஎன் நடைமெலி பேதை
தோள்துணை யாகத் துயிற்றத் துஞ்சாள்
வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கண்
சேக்கோள் அறையும் தண்ணுமை
கேட்குநள் கொல்எனக் கலுழும்என் நெஞ்சே.*

## 36. அங்கே இருந்தால்

தலைவனுடன் தலைவி காதல் கொண்டு பழகுவதை அறிந்த அயல் வீட்டுப் பெண்கள் வாளா இருக்கவில்லை. திரும்பத் திரும்பத் தலைவியைப் பற்றி அவளுடைய தாயிடம் பலவாறு எடுத்துரைத்தார்கள். அவர்கள் சொல்வதைக் கேட்ட தாய் தன் மகளிடம் அவற்றைச் சொல்வது எப்படி, சொல்லிக் கேட்பது எப்படி என்று தயங்கி ஒன்றுமே சொல்லாமல் எல்லாவற்றையும் தன் உள்ளத்தில் கரந்துவைத்து அமைதியாய் இருந்தாள். அந்தச் சொற்களைக் கேட்டால் தன் மகள் நாணுவாளே என்றும் வருந்தினாள். அயல் வீட்டுப் பெண்கள் தன்னைப் பற்றி ஐயுற்றுப் பேசுகிறார்கள் என்பது

*அகநானூறு, 63. கருவூர்க் கண்ணம்புல்லனார்.

நகர் - வீடு. வரைப்பகம் - இடம் முழுதும். புலம்ப - தனிமையுற. இறந்தது - கடந்து சென்றது. நீந்தி - அரிதில் கடந்து. புன்கண்ண - துன்பம் உடையனவாய். பைதல் - துன்பம். கூர - மிக. கடுங்கால் - வேகம் மிகுந்த கால். எல்லி - இரவு. குரம்பை - குடிசை. விசியுறு - வாரால் இழுத்துக் கட்டப்பட்ட. கடுங்கண் - கடுமையான ஓசை எழும் கண் (பக்கம்). சேக்கோள் அறையும் - எருது பிடிக்கும் குறிப்புடன் ஒலிக்கின்ற. தண்ணுமை - பறை. கலுழும் - கலங்கும் - அழும்.

தலைவிக்கும் தெரிந்தது. அந்தச் செய்தி மெல்லத் தாய்க்கு எட்டிவிட்டால், பிறகு வீட்டிலிருந்து வாழ்வது எப்படி என்று அவள் மிக வருந்தினாள். பலவாறு எண்ணி எண்ணி இறுதியில் தலைவனுடன் வெளியூர்க்குச் செல்வதே நலம் எனத் துணிந்தாள். துணிந்தவாறே அவனுடன் புறப்பட்டுச் சென்றாள். அதன் பிறகு தாய் மகளைக் காணாமல் தேடிக் கலங்கினாள். மகள் தனக்குச் செய்தி தெரியாமல் நடக்க வேண்டும் என்று அஞ்சியே சென்றாள் என்பதை உணர்ந்து உருகினாள். "அந்தோ! யான் அத்தகைய கொடியேன் அல்லேன் என்பது அவளுக்குத் தெரியாமல் போயிற்றே. இனியும் அவளுக்கு என்ன உதவியும் செய்து போற்றக் காத்திருக்கிறேனே" என்று நொந்தாள். அவள் தன் காதலனுடன் சென்ற வழியில் எங்கேனும் ஒரு குடிசையில் இருந்தேனும் அவர்களுக்கு அன்பான உதவி புரிய வேண்டும் என்று அந்தத் தாய்நெஞ்சம் ஏங்கியது.

"மகளுடைய நடத்தையைப் பற்றி மகிழ்வாளானாலும் சரி, அல்லது வெறுத்து மாறுபடுவாளானாலும்சரி, அவளைப் பெற்ற தாய் எப்படியாவது அறிந்து உணரட்டும் என்று பேசாமல் விட்டுவிடவில்லை. கொடிய வாய் உடையவர்கள், அலர் கூறும் தொழிலை விரும்பிச் செய்கிறவர்கள், இந்தப் பெண்கள் என்னிடம் வந்து வந்து மகளைப் பற்றிச் சொன்னார்கள். 'உன் மகள் இப்படிப்பட்டவள், இத்தகையவள்' என்று பல நாளும் என்னிடம் வந்து சொன்னார்கள். இவ்வாறு அடிக்கடி அவர்கள் வந்து சொல்லியும் நான் என் மகளிடம் ஒன்றும் கடிந்து சொல்லவில்லை. மகள் நாணுவாளே என்று எல்லாவற்றையும் மிக மறைத்து நடந்தேன். இவ்வாறு அவளுடைய நெஞ்சம் உணர்ந்து அன்பாக நடந்தேன்;

இத்தகைய என்னை இந்த வீட்டில்—பொலிவிழந்த இந்த வீட்டில்—விட்டுவிட்டுத் தான் சென்றுவிட்டாள். 'அன்னை அறிந்தால் இந்த வீட்டில் வாழும் வாழ்க்கை தொல்லையாகி விடும்' என்று அஞ்சி, தலைவனைப் பின்தொடர்ந்து, கொடிய பாலைவழியில் சென்றுவிட்டாள். ஆயின், அவளுக்கு யான் அவ்வாறு அன்பில்லாமல் கொடுமை செய்யும் தாய் அல்லேன். அத்தகைய அன்பு இருப்பது உண்மை என்பதை அவள் எப்படி அறியப் போகிறாள்? வளம் இழந்த மலை வழியில் அவர்கள் வெப்பத்தால் வாடி வருந்தாதவாறு அவர்களுக்கு முன்னே யான் செல்லவேண்டும். சென்று, அங்கே பெரிய மலையை அடுத்த தனிமையான சிற்றூர் ஒன்றில் அவர்களை விருந்தினராக ஏற்று உதவ வேண்டும்; அங்கே அந்தச் சிறு வீட்டில் அவர்கள் தங்குமாறு செய்ய வேண்டும். அவர்கள் இளைப்பாறித் தங்கும் வகையில் வீட்டைச் சுற்றி நொச்சி மரங்கள் தளிர்விட்டு அசைந்து காற்று வீச வேண்டும். அத்தகைய வீட்டிற்கு உரியவளாக யான் அங்கே இருக்க வேண்டும் என்று விழைகின்றேன். அப்போதுதான் யான் அவளிடம் மாறாத அன்பு கொண்டிருப்பது உண்மை என்பது தெரியும்.''

தாய்:

உவக்குநள் ஆயினும் உடலுநள் ஆயினும்
யாய்அறிந்து உணர என்னார் தீவாய்
அலர்வினை மேவல் அம்பல் பெண்டிர்
இன்னள் இனையள்நின் மகள்எனப் பன்னாள்
எனக்குவந்து உரைப்பவும் தனக்குஉரைப் பறியேன்
நாணுவள் அவள்என நனிகரந்து உறையும்
யான்இவ் வறுமனை ஒழியத் தானே
அன்னை அறியின் இவண்உறை வாழ்க்கை

என்க்குஎளி தாகல் இல்எனக் கழற்கால்
மின்ஒளிர் நெடுவேல் இளையோன் முன்உறப்
பன்மலை அருஞ்சுரம் போகிய தனக்குயான்
அன்னேன் அன்மை நன்வாய் ஆக
மான்அதர் மயங்கிய மலைமுதல் சிறுநெறி
வெய்துஇடை உறுஅது எய்தி முன்னர்ப்
புல்லென் மாமலைப் புலம்புகொள் சீறூர்ச்
செல்விருந்து ஆற்றித் துச்சில் இருத்த
நுனைகுழைந்து அலமரும் நொச்சி
மனைகெழு பெண்டுயான் ஆகுக மன்னே.*

## 37. சிறப்பும் சீரும்

தலைவன் தலைவியை யாரும் அறியாமல் வெளியூர்க்கு அழைத்துச் சென்றுவிட்ட பிறகு, தாய் பலவாறு வருந்தினள். எங்கும் தேடிக் காணுமல் கலங்கி நொந்தாள். பிறகு தலைவி வீட்டிலிருந்த காலத்தில் பழகிய கிளிகள் முதலியவற்றைக் கண்டு உருகினுள். தலைவி வளர்த்த கிளிகள், அவள் இல்லாமையால் பால் உண்ணுமல்

---

*203. கபிலர்.

உவக்குநள் - மகிழ்வாள். உடலுநள் - முரண்படுவாள். யாய் - தாய். மேவல் - விரும்பல். கரந்து - மறைத்து. வறுமனை - தலைவி இல்லாமையால் பொலிவு இழந்த வீடு. ஒழிய - பிரிந்திருக்க. இவண் - இங்கே. கழல் - வீரக் கழல். அன்னேன் அன்மை - அப்படிப்பட்ட கொடியேன் அல்லேன் என்பது. வாய் - வாய்மை, உண்மை. மான் - விலங்கு. அதர் மயங்கிய - வழிகள் மயங்கிக் கிடக்கிற. வெய்து - வெம்மை. புலம்பு - தனிமை. துச்சில் - ஒதுங்குமிடம். இருத்த - இருக்கச் செய்வதற்கு. நுனை - முனை. குழைத்து - தளிர்விட்டு. அலமரும் - அசையும்.

வாடின. அவளோடு விளையாடும் தோழியர்கூட்டம் விளையாட்டையும் வெறுத்து ஒதுக்கியது. அவள் நீர் வார்த்து வளர்த்த தாழியில் உள்ள மலர்க் கொடிகளும் நீர் இல்லாமல் வாடின. சுவரில் இருந்தது பாவை ஒன்று. அதற்கு வேளை தவறாமல் பலி கொடுத்துவந்தாள் தலைவி. அந்தப் பாவைக்கு இப்போது பலி (பால் முதலியன) கொடுப்பவர் இல்லை. இவற்றை எல்லாம் கண்ட தாய் மிகவும் நொந்து துயருற்றாள். தன் மகள் என்ன எண்ணிக் காட்டுக்குச் சென்றாளோ என வருந்தினாள். தான் அவளிடம் கடுமையாக நடக்கவில்லை என்பதை எண்ணிப்பார்த்தாள். ஒரே ஒரு முறையில் அவளைத் தடுத்தது உண்டு ; அதற்காகப் பிறந்த வீட்டைத் துறந்து போய்விட்டாளே என வருந்தினாள். தெரிந்திருந்தால் திருமணம் செய்துகொடுத்திருக்கலாமே ; அதை விட்டு, பாலைவழியில் அவன் அழைத்துச் சென்றுவிட்டானே என்றும், சீரும் சிறப்புமாகச் செய்யும் திருமணம் இருக்க, யாரோ ஓர் ஏழையின் வீட்டில் எங்கோ சென்று தங்கியிருப்பாளே என்றும், அந்த ஊரில் திருமணம் நடைபெறுமோ என்றும், நடைபெறுவதாயின் அதற்குமுன் செய்யும் சடங்கின்படி அவள் தன் சிலம்பை அந்த ஏழை வீட்டில் கழற்றி வைப்பாளே என்றும் தாய் எண்ணி ஏங்கினாள்.

"பாரம்மா மகளே ! அவளுடன் பொருந்தி இயைந்திருந்த என்னைப் பாரம்மா ! ஒளியுள்ள வளையல் அணிந்த முன்கையில் ஏந்திக்கொண்டு மங்கையர் பலவாறு பாராட்ட ஊட்டுகின்றவள் இல்லாத காரணத்தால் கிளிகளும் இனிய பாலை உண்ணவில்லை. மயில் போன்ற சாயலை

யும் சிவந்த அணிகளையும் உடைய தோழியர்கூட்டமும் விளையாடவில்லை. பூஞ்செடிகள் வளர்ந்த தாழிகளிலும் பல மலர்கள் மலரவில்லை. அழகான நிறம் கொண்டு முத்துவடம் புனைந்து இயற்றப்பட்ட அழகு அமைந்த (வலிய சுவரில் உள்ள) பாவைகளும் பலி என்று எதையும் ஏற்றுக்கொள்ள வில்லை. துன்பம் தாக்க, இவற்றைக் கண்டு வருந்துகிறேன். அதன் மேலும், நினைத்துப் பார்க்கும் ஆற்றல் இல்லாத யான், கொடியவளாகிய அவள் கருதியதை உணராமல் 'பெண்ணே! இன்று வெளியே சென்று நின் செழித்த கூந்தலை மண்ணுதே' என்று கூறினேன். அதற்காக என்னை வெறுத்து மனம் உடைந்து வெளியே போய்விட்டாள். தன் நிலைக்குத் தக்கவாறு செல்வ வளமுள்ள நல்ல வீட்டைப் புதுமையாகப் புனைந்து சுற்றத்தார் திருமணம் செய்விக்கவும் இயையாமல் சென்றுவிட்டாள். முன் கண்டறியாத நாட்டில் அரிய பாலைவழியில் அழைத்துச் சென்ற இளைஞனுக்குப் பொருந்திய துணைவியான என் மகள் சிறப்பும் சீரும் இல்லாமல் எங்கோ சென்று ஒரு சிற்றூரில் (வறுமையுற்ற மங்கையின்) புல்லால் வேயப்பெற்ற ஒரு குடிசையில் ஒரு பசு கட்டிய ஒற்றைத் தூண் உள்ள முற்றத்தை உடைய வறிய அயல்மனையில் சிலம்பைக் கழித்து வைத்து அவனை மணம் செய்துகொண்டாளோ என்று யான் வருந்துகிறேன்."

தாய் :

**கண்டிசின் மகளே கெழீஇ இயைவெனை**
**ஒண்டொடி செறித்த முன்கை ஊழ்கொள்பு**
**மங்கையர் பலபா ராட்டச் செந்தார்க்**
**கிள்ளையும் தீம்பால் உண்ணு ; மயிலியல்**

சேயிழை மகளிர் ஆயமும் அயரா ;
தாழியும் மலர்பல அணியா ; கேழ்கொளக்
காழ்புனைந் தியற்றிய வனப்பமை நோன்சுவர்ப்
பாவையும் பலினைப் பெறூஅ ; நோய்பொர
இவைகண்டு இனைவதன் தலையும், நினைவிலேன்
கொடியோள் முன்னியது உணரேன் 'தொடியோய் !
இன்றுநின் ஒலிகுரல் மண்ணல்' என்றதற்கு
எற்புலந்து அழிந்தனள் ஆகித் தற்றக...
நிதியுடை நன்னகர்ப் புதுவது புனைந்து
தமர்மணன் அயரவும் ஒல்லாள்...
அறியாத் தேஎத்து அருஞ்சுரம் மடுத்த
சிறியோற்கு ஒத்தஎன் பெருமடத் தகுவி
சிறப்பும் சீரும் இன்றிச் சீறூர்
நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை
ஓர்ஆ யாத்த ஒருதூண் முன்றில்
ஏதில் வறுமனைச் சிலம்புடன் கழீஇ
மேயினள் கொல்என நோவல் யானே.*

---

*369. நக்கீரர்.

கண்டிசின் - பார். கெழீஇ - பொருந்தி. இயைவெனை - இயையும் என்னை. ஊழ் - முறை. கொள்பு - கொண்டு. செந்தார் - கழுத்தில் உள்ள செந்நிற வரிகள். அயரா - விளையாடா. தாழி - பூத்தொட்டி போன்றது. கேழ் - நிறம். காழ் - முத்துவடம் முதலியன. வனப்பு - அழகு. நோன் - வலிய. பொர - தாக்க. இனைவதன் தலையும் - வருந்துவதன் மேலும். முன்னியது - கருதியது. தொடியோய் - தொடி அணிந்தவளே. ஒலி - தழைத்த - செழித்த. குரல் - கூந்தல். மண்ணல் - வெளியே சென்று நீராடித் தூய்மை செய்யாதே ; மண்ணுவதற்காக வீட்டைவிட்டு வெளியே செல்லாதே. எற்புலந்து - என் புலந்து - என்னை வெறுத்து. தற்றக - தன் தக - தன்நிலைக்குத் தக்கவாறு. நகர் - வீடு. தமர் சுற்றத்

## 38. அறியாமற் போனேன்

தலைவன் தலைவியை அழைத்துக்கொண்டு வெளியூர்க்குச் சென்றபின், தலைவியின் பெற்றோர் அவளைக் காணுமல் பல இடங்களிலும் தேடித் திரிந்தனர். பெற்ற தாயும் பலவாறு வருந்தினுள். மகள் தன்னைப் பிரிந்து சென்ருளே என்ற வருத்தம் ஒருபுறம்; அவள் அவனுடன் சென்ற வழி பொல்லாத கள்வர் வாழும் வழி ஆதலின் மகள் அஞ்சுவாளே என்ற கவலை ஒருபுறம்; அவள் தன் விருப்பத்தைத் தெரிவித்திருந்தால் அவனுக்கே மனைவியாக்கவும் துணிந்திருக்கலாமே என்ற எண்ணம் ஒருபுறம்; திருமணம் சிறப்புற நடத்தி மகிழவும் மகிழ்ந்திருக்கலாமே என்ற ஏக்கம் ஒருபுறம்; இவ்வாறு பலவேறு நிலையில் வருந்தித் துயருற்ருள்.

"அவள் சென்ற திசையில் அஞ்சத்தக்க பெரிய காடுகள் உள்ளனவாம். அங்கே உள்ள வழிகளோ வெவ்வேருகவும் கவர்த்த வழிகளாகவும் உள்ளனவாம். அந்தக் காட்டுவழியில் செல்லும் புதியவர்கள் வருவதைக் காண்பதற்காக வில்வன்மை உடைய ஆறலை கள்வர்கள் உயர்ந்த யாமரத்தின் கிளைகளைப் பற்றிக்கொண்டு மேற்புறத்தில் மறைந்திருப்பார்களாம். அத்தகைய கொடிய வழியில் என் மகளை அழைத்துச் சென்ற அந்தக் காளையினிடம் அவள் கொண்டுள்ள நெஞ்சத்

---

தார். மணன் - மணம். அயர - நடத்த. ஒல்லாள் - இசையாள். தேஎம் - நாடு. மடுத்த - சேர்த்த. பெருமடத்தகுவி - பெருமையும் மடப்பமும் தகுதியும் உடையவள். நல்கூர் - வறுமையுற்ற. குரம்பை குடிசை. யாத்த - கட்டிய. ஏதில் - அயல். சிலம்பு கழித்தல் - ஒரு சடங்கு, திருமணத்திற்கு முன்பு செய்வது. மேயினள் - பொருந்தினுள்.

துணிவு இத்தகையது என எனக்குத் தெரியாமற் போயிற்று. தெரிந்திருந்தால், அந்தோ, சேரன் போற்றிக் காக்கும் தலைநகரான வஞ்சிமாநகர் போன்ற வளம் உள்ள என் வீடு சிறப்படையுமாறு இனிதாகத் திருமணம் நடத்திச் சேர்த்துவைத்திருப்பேன். இப்போது அதற்கு வழி இல்லாமற் போயிற்று. வெறுப்பு இல்லாமல் என் மகளின் மார்பில் அவன் இன்பமுற்றுத் துயிலும் துயிலை இனிது சேர்த்திருப்பேனே.''

தாய் :

*வேறுபல் கவலைய வெருவரு வியன்காட்டு*
*ஆறுசெல் வம்பலர் வருதிறம் காண்மார்*
*வில்வல் ஆடவர் மேலான் ஒற்றி*
*நீடுநிலை யாஅத்துக் கோடுகொள் அருஞ்சுரம்*
*கொண்டனன் கழிந்த வன்கட் காளைக்கு*
*அவள்துணிவு அறிந்தனென் ஆயின் அன்றே*
*ஒளிறுவேல் கோதை ஓம்பிக் காக்கும்*
*வஞ்சி அன்னஎன் வளநகர் விளங்க*
*இனிதினின் புணர்க்குவென் மன்றே துனியின்று*
*திருநுதல் பொலிந்தஎன் பேதை*
*வருமுலை முற்றத்து ஏமுறு துயிலே.**

---

*263. கருவூர்க் கண்ணம்பாளனார்.

கவலை - இரண்டு மூன்றாய்ப் பிரியும் வழிகள். வெருவரு - அஞ்சத்தக்க. வியன் - பெரிய. ஆறு - வழி. வம்பலர் - புதியவர். காண்மார் - காண. மேல் ஆன் - மேல் இடம். ஒற்றி - மறைந்திருந்து. கோடு - கொம்பு, கிளை. வன்கண் - அஞ்சாமை. ஒளிறு- ஒளிவீசும். கோதை - சேரன். நகர் - வீடு. துனி - வெறுப்பு. ஏம் - இன்பம்.

## 39. போகா உயிர்

தலைவி வீட்டை விட்டுத் தலைவனோடு வெளியூர்க்குச் சென்ற பிறகு தன் மகள் சென்ற வழி எத்தகைய கொடிய பாலை என்பதை எண்ணித் தாய் மிக மிகக் கலங்கினாள்.

அது வேனில் காலம். வெம்மை பரப்பிச் செல்லும் கதிரவன், மலையே பிளவுபடுமாறு காய்ந்தான். அதனால் அந்தப் பாலை நிலத்தின் நெடுவழியில் பறந்து செல்லும் பறவைகளும் வெப்பம் தாங்க முடியாமல் வருந்தின. காலால் நடந்துசெல்லும் மக்களுக்கோ, வெப்பம் மட்டும் அல்லாமல், அவர்களின் அடியில் தாக்கி வருத்தவல்ல பரல்கற்கள் உளிபோல் கூர்மையாக இருந்தன. வழிப் போக்கரின் உயிர்க்கு எப்போது எவ்வாறு முடிவு வருமோ என்று அறிய முடியாத நிலைமை இருந்தது. வெயிலின் கொடுமையால் மூங்கிலும் தீய்ந்து கரிந்துபோன காடு அது. இவ்வாறு அந்தப் பாலைவழியைப் பற்றிப் பிறர் சொல்லக் கேட்டவை எல்லாம் தாயின் நினைவுக்கு வந்தன. அவள் பாலையின் கொடுமையைத் தன் உள்ளத்தில் கற்பனை செய்து கண்டாள். அவள்நெஞ்சம் அதனால் பெருந் துன்பம் அடைந்தது.

**காய்ந்துசெலல் கனலி கல்பகத் தெறுதலின்**
**நீந்துகுருகு உருகும் என்றூழ் நீளிடை**
**உளிமுக வெம்பரல் அடிவருத் துறலின்**
**விளிமுறை அறியா வேய்கரி கானம்...**

இவ்வாறு எண்ணிக் கலங்கிக்கொண்டிருந்த தாயைத் தேற்றுவதற்காக அடுத்த வீடுகளிலிருந்த பெண்கள் வந்தனர் ; வந்து பலவாறு தேறுதல் மொழிகளை எடுத்துக் கூறினர். அவர்களின் சொற்களைக் கேட்ட தாய் தன்

துன்பத்தைத் தாங்கிக்கொள்ள முடியாதவளாய்ப் பின்வரு மாறு கூறினாள் :

"அம்மா ! என் மகள் அந்தக் காளையோடு காட்டு வழியில் சென்றாளே என்பதற்காக நான் வருந்தவில்லை. அவள் சென்ற பிறகு நான் ஏன் இங்கே இருக்க வேண்டும்? அவளைப் பிரிந்து இங்கே இருந்து உலைக்களத்துத் துருத்தி போல் பெருமூச்சு விட்டுச் சோர்ந்து, நெருப்பில் வேவது போல் கொதிக்கும் நெஞ்சத்தோடு, கண்மூடித் தூங்கமுடி யாமல் வாய்பிதற்றிக்கொண்டு நான் ஏன் இங்கே இருக்க வேண்டும் ? கரிகால் சோழனோடு வெண்ணி என்ற இடத் தில் எதிர்த்துப் போர் செய்து புறப்புண்பட்ட சேரமன்னன் போர்க்களத்தில் வடக்கிருந்து உயிர்நீத்தபோது அந்தச் செய்தியைக் கேட்ட சான்றோர் சிலர் மேலுலகத்தில் அவ னுயிரோடு செல்வதற்காகத் தாமும் உயிர்விட்டாற்போல், என் மகள் பிரிந்து சென்றபோதே நானும் உயிர்விட்டிருக்க வேண்டும். ஆயின், இந்த உலக வாழ்வின்மேல் காதல் கொண்டு என்னை விட்டுப் பிரிந்து செல்லாமல் இருக்கிறது என் உயிர். அதற்காகத்தான் நான் வருந்துகிறேன்."

தாய் :

**வயக்களிற் றன்ன காளையொடு என்மகள்**
**கழிந்ததற்கு அழிந்தன்றோ இலனே ; ஒழிந்துயான்**
**ஊதுலைக் குருகின் உள்ளுயிர்த்து அசைஇ**
**வேவது போலும் வெய்ய நெஞ்சமொடு**
**கண்படை பெறேஎன் கனவ ஒண்படைக்**
**கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்**
**பொருதுபுண் நாணிய சேர லாதன்**
**அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென**
**இன்னா இன்னுரை கேட்ட சான்றோர்**

அரும்பெறல் உலகத்து அவனொடு செலீஇயர்
பெரும்பிறி தாகி யாங்குப் பிரிந்துஇவண்
காதல் வேண்டிஎன் துறந்து
போதல் சொல்லாளென் உயிரொடு புலந்தே.*

## 40. இதோ மணல் வீடு!

தலைவி தலைவனிடம் காதல்கொண்ட பிறகு வீட்டில் அடங்கி நடக்கும் முறையில் சிறு வேறுபாடு நேர்ந்தது. முன்போல் அவள் பெண்மைக்கு உரிய அமைதியோடு வீட்டில் தங்கி நடக்காமல் வேறுபட்டு நடப்பதாகத் தாய் உணர்ந்தாள் ; ஐயுற்றாள் ; கடிந்து அறிவுரை கூறித் திருத்த வேண்டும் என்று எண்ணினாள்.

தலைவி அடிக்கடி பந்தாடுவது வழக்கம். அவள் பந்தாடிய இடம் வயலைக்கொடி படர்ந்த ஒரு பந்தலின் கீழ் ஆகும். அந்த வயலைக்கொடி உயர்ந்த ஒரு தாழியில் வளர்ந்து நிறைந்து படர்ந்தது. அதற்கு நாள்தோறும் தலைவி நீர் வார்த்துவந்தாள். பனங்குடையால் நீர் முகந்து சொரிந்து வார்த்துவந்தாள். அப்படி வளர்ந்து படர்ந்த

---

*அகநானூறு, 55. மாமூலனார்.

கனலி - சூரியன். கல்பக - மலை பிளவுபட. குருகு - பறவை. என்றூழ் - வெயில். நீள் இடை - நெடுவழி. விளி முறை - சாகும் முறை. வேய் - மூங்கில். வய - வலிமை உடைய. அழிந்தன்று - அழிந்தது - வருந்தியது. குருகு - துருத்தி. உயிர்த்து - மூச்சுவிட்டு. கண்படை - உறக்கம். கனவ - வாய் பிதற்ற. பறந்தலை - பாழிடம். செலீஇயர் - செல்ல. பெரும் பிறிது - சாதல். இவண் - இங்கே - இவ்வுலக வாழ்வில்.

வயலைக்கொடியின் பந்தலின் கீழ் அவள் பந்து விளையாடிக் கொண்டிருந்தபோது, தாய் அவளைக் கடிந்து கூறினாள். " நீ இன்னும் இளஞ் சிறுமியின் தன்மையோடு இருக்கிறாய். வளம் பொருந்திய மனைக்கு உரிமை உடைய பெண் நீ. ஆனால் கண்டவாறு திரியும் தன்மை உடையவளாய் இருக்கிறாய். உன் பெண்மை பாழாய்ப் போக (ஒழிக)" என்று கடிந்து கூறினாள் :

தாய் :

**ஓங்குநிலைத் தாழி மல்கச் சார்த்திக்**
**குடைஅடை நீரின் மடையினள் எடுத்த**
**பந்தர் வயலைப் பந்துஎறிந்து ஆடி**
**இளமைத் தகைமையை வளமனைக் கிழத்தி**
**பிதிர்வை நீரை பெண்நீறு ஆகஎன**
**யாம்தன் கழறுங் காலை......**

தாய் இவ்வாறு கடிந்து கூறியதைக் கேட்டதும் தலைவி சினம் கொள்ளவில்லை ; தாய் தன் நிலைமையை ஐயுற்று அறிந்தாளோ என அஞ்சினாள் ; வருந்தினாள். அதனால் அவளுடைய உள்ளத்தில் சினம் பிறக்கவில்லை ; தாயிடம் அன்பே வளர்ந்தது. அக்காரணத்தால், தாயை நோக்கிக் கடுஞ்சொல் கூறாமல்—தன் மழலைத் தன்மை உடைய இன் சொல்லால் கடிந்து பேசாமல்—இனிய உயிர் கலங்குமாறு மறுமொழி கூறினாள் :

தாய் :

**யாம்தன் கழறுங் காலைத் தான்தன்**
**மழலை இன்சொல் கழறல் இன்றி**
**இன்னுயிர் கலப்பக் கூறி......**

இவ்வாறு தாயின் கடிந்துரையை ஏற்று அன்புகாட்டிய தலைவி உடன்போக்குக்கு ஏற்பாடு செய்து தலைவனுடன் வெளியூர்க்குப் புறப்பட்டுச் சென்றுவிட்டாள். அவளைத் தேடிக் காணுமல் வருந்திய தாயின் உள்ளம் கலங்கியது; கலங்கிக் கலங்கிப் பித்துப் பிடித்தாற்போன்ற நிலைமை உற்றது. அந்நிலையில் மகள் தன்னைக் கடிந்து கூறியிருந்தாலும் நன்ருக இருந்திருக்குமே என எண்ணினுள். வீட்டை விட்டுப் பிரிந்து போய்விடாமல் தன்னை எதிர்த்துக் கடுமையான மறுமொழி கூறியாவது வீட்டிலேயே இருந்திருக்கக் கூடாதா என்று ஏங்கினுள். அவளுடைய மறுமொழி கடுமையாக இருந்தாலும், மழலைத்தன்மை பொருந்திய இனிய சொற்களாக இருக்குமே என உருகினுள். பலநாளும் மகளுடைய 'மழலை இன்சொல்' கேட்டு மகிழ்ந்த தாய், அவள் வீட்டில் இல்லாததை நினைந்து நினைந்து உருகினுள். "நம் வீடு பலரை விருந்தினராக ஏற்று எந்நாளும் பெருஞ்சோறு விளங்கும் வீடு அன்ருே? இத்தகைய பெருவிருந்து நடக்கும் வீட்டில் எங்களோடு ஒருங்கே இருந்திருக்கக் கூடாதா? யாரோ ஒருவன் - தொடர்பு இல்லாத அயலான் - அவனுடைய காதலை விரும்பிச் சென்றுவிட்டாளே. நாம் இங்கே பிரிந்து கிடக்குமாறு விட்டுவிட்டுச் சென்றுவிட்டாளே. உலகம் அஞ்சிப் பெருமூச்சு விடத் தகுந்த பொல்லாத காட்டு வழியில் நேற்றுச் சென்றுவிட்டாளே. மிக்க மடப்பம் உடையவள் அவள்; அவ்வாறு இருந்தும் துணிந்து சென்ருளே" என்று வருந்தினுள்:

தாய்:

***மழலை இன்சொல் கழறல் இன்றி***
***இன்னுயிர் கலப்பக் கூறி நன்னுதல்***

பெருஞ்சோற்று இல்லத்து ஒருங்கு இவண் இராஅள்
ஏதி லாளன் காதல் நம்பி
...நம்மிவண் ஒழிய
இருநிலன் உயிர்க்கும் இன்னாக் கானம்
நெருநைப் போகிய பெருமடத் தகுவி...

இத்தகைய துயரத்தோடு தாய் வருந்திக்கொண்டிருந்த போது, ஊரார் சிலர் செய்தி அறிந்து அவளைத் தேற்றுவதற்காக வீட்டுக்கு வந்தனர். வந்தவரைப் பார்த்துப் பித்துப் பிடித்தவள்போல் கூறிக் கலங்கினாள் தாய். "அவள் இடையின் தழையாடைக்குச் சேர்க்கும் இலைகளைத் தரும் அந்த நொச்சிமரத்தைப் பாருங்கள். குறுகி வளர்ந்த அந்த நொச்சி மரத்தின்கீழ் என் மகள் தன் சிவந்த சிறுவிரல்களால் இழைத்த மணல்வீட்டைப் பாருங்கள். கண் பெற்றவர்களே, காண்கிறீர்களோ?" என்றாள்.

தாய் :

ஐதுஅகல் அல்குல் தழையணிக் கூட்டும்
கூழை நொச்சிக் கீழது என்மகள்
செம்புடைச் சிறுவிரல் வரித்த
வண்டலும் காண்டிரோ கண் ணுடை யீரே.*

---

*275. கயமனார்.

மல்க - நிறைய. குடை - பனையோலையால் செய்தது, குடை வானது. மடையினள் - சேர்த்து, சொரிந்து. எடுத்த - வளர்த்த. பிதிர்வை - ஒரு நிலையாய் அமையாத. நீரை - தன்மை உடையாய். நீறு ஆக - அழிக. கழறுங்காலை - கடிந்துரைக்கும்போது. நம்பி - விரும்பி. ஏதிலாளன் - அயலான். உயிர்க்கும் - மூச்சு விடும். இருநிலன் - உலகம். நெருநை - நேற்று. கூழை - குறையான வளர்ச்சி. செம்புடை - சிவந்த பக்கங்கள் உடைய. வண்டல் - சிற்றில் விளையாட்டு.

# 41. அந்தோ ! வயலை !

தலைவி தலைவனுடன் புறப்பட்டு வெளியூர்க்குச் சென்று விட்ட பிறகு, அவளுடைய பெற்றோரும் மற்றோரும் கலங்கினர் ; தேடி அலைந்தனர். பெற்ற தாய் மிக மிக வருந்தினாள் ; தன்னை விட்டுப் பிரிந்து செல்லவும் மகளுக்கு மனம் வந்ததே எனக் கதறினாள். ஊராரும் தெருவாரும் அறிந்து பேசும் பேச்சையும், அவள் காட்டு வழியே சென்றதையும், வெளிநாட்டுச்குச் செல்லத் துணிந்ததையும் எண்ணி எண்ணி நொந்தாள். இவ்வாறு வருந்திக்கொண் டிருந்த தாயின் கண்ணெதிரே வயலைக்கொடி இருந்தது. அதைக் கண்டதும், அவளுடைய நெஞ்சு நெக்குருகியது. அந்த வயலைக்கொடியை நீர் வார்த்துப் பாராட்டி வளர்த்தவள் தலைவிதான். அவள் அதற்காக நீர் முகந்துகொண்டு சென்ற காட்சியும், அப்போது அடிக்கடி அன்போடு கொடியை நோக்கிய காட்சியும், அவ்வாறு அசைந்தசைந்து சென்ற போது அவள்காலில் ஒலித்த சிலம்பின் ஒலியும் தாயின் மனத்தை விட்டு நீங்கவில்லை. அவற்றை நினைத்தவாறே வயலைக்கொடியை நோக்கி வருந்தினாள் :

"தன்னைக் காப்பாற்றி வளர்த்த என்னையும் விட்டுப் பிரிந்து மறந்தாள். ஊரும் தெருவும் ஒருசேர அலர் எழுமாறு, காடும் சோலையும் அவனோடு போகத் துணிந்து, நாடும் தேசமும் மிகப் பலவற்றைக் கடந்து சென்ற கல் மனம் உடையவள் அவள். அவளுக்கு அழகு செய்பவர் வாடுவதுபோல் நீயும் வாடினாய் வயலைக்கொடியே ! நீ பல கிளைகளாய்க் கொடியோடிய கொம்புகள் இங்கும் அங்கும் அலைய, அவளுடைய இடையில் தழையுடைக்குச் சேர்க்கும் அழகிய தளிர்கள் உதவுமாறு, மூங்கில்குழாயின் வழியாக வரும் நீர் அவளுடைய சிறந்த வளையலில் விழுந்து பாயச்

சால் நிறைய மொண்டுகொண்டு, உன்னிடம் வருவாளே. அழகிய மடப்பம் பொருந்திய பார்வையோடு தாயின் முகம் கொண்டு அன்போடு உன்னைப் பார்த்து, காலில் அணிந்த சிலம்பு ஒலிக்குமாறு நாள்தோறும் இயங்குவாள். இனி, அவள் சென்றுவிட்டதால், நிறைய நீர் வார்த்து உன்னைக் காப்பாற்றுபவர் வேறு யாரைப் பெறப்போகிறாய்! நீ இரங்கத் தக்க நிலையில் உள்ளாய் ":

தாய் :

*தற்புரந் தெடுத்த என்துறந்து உள்ளாள்*
*ஊரும் சேரியும் ஓராங்கு அலர்எழக்*
*காடும் காவும் அவனொடு துணிந்து*
*நாடும் தேயமும் நனிபல இறந்த*
*சிறுவன் கண்ணிக்கு ஏர்தே றுவர்என*
*வாடினை வாழியோ வயலை ! நாள்தொறும்*
*பல்கிளைக் கொடிக்கொம்பு அலமர மலர்ந்த*
*அல்குல் தழைக்கூட்டு அங்குழை உதவிய*
*வினைஅமை வரல்நீர் விழுத்தொடி தத்தக்*
*கமஞ்சூல் பெருநிறை தயங்க முகந்துகொண்டு*
*ஆய்மடக் கண்ணள் தாய்முகம் நோக்கிப்*
*பெய்சிலம்பு ஒலிப்பப் பெயர்வனள் வைகலும்*
*ஆர நீர் ஊட்டிப் புரப்பவர்*
*யார்மற்றுப் பெறுகுவை அளியை நீயே.**

---

*383. கயமனார்.

புரந்து - காத்து. உள்ளாள் - நினையாள், மறந்தாள். ஓராங்கு - ஒருசேர. அலர் - பிறர் கூறும் பழிச்சொல். கா - சோலை. நனி - மிக. வன்கண்ணி - வன்கண்மை உடையவள், அஞ்சாத தயங்காத மனம் உடையவள். ஏர் - அழகு. தேறுவர் - ஆராய்ந்து செய்வோர். என - போல. அலமர - சுழல, அசைந்தாட.

## 42. பாவை—மருமகள்

தலைவி தலைவனுடன் வெளியூருக்குச் சென்றுவிட்ட பிறகு, தலைவியின் வீடு முழுதும் கலங்கியது ; தந்தையர் முதலானவர் தேடிச் சென்று வருந்தினர் ; தாயோ வீட்டி லிருந்தவாறே பலவாறு வருந்தினாள். அவள் துயரத்தின் எல்லையை எட்டிய காரணத்தால், பித்துப் பிடித்தவள் போல் கலங்கினாள். வழியில் சென்றவர்கள் அவளுடைய நிலைமையை நினைந்து வருந்தினர்.

" பல நாடுகளைக் கடந்து சென்ற நல்ல பண்புகளை உடைய தலைவிக்காக, அவளுடைய விளையாட்டுக் கூட்டத் தாரும் பொலிவு இழந்து வருந்தினர். பெற்ற தாயும் பல வாறு வருந்தினாள். மகள் பாராட்டிவைத்து விளையாடிய பாவையை (பொம்மையை) நோக்கிப் பித்துப் பிடித்தவள் போல் கலங்கிக் கூறினாள். ' உன் தாய் எங்கே ? அவளை அழைத்து எனக்குக் காட்டு. இல்லையானால் என் உயிர் அழிவதாக ' என்று கலங்கினாள். அந்தப் பாவையின் கண்ணையும் நெற்றியையும் தன் கையால் தடவினாள். குளிர்ச்சியுறும்படியாக வளர்ந்த நொச்சியின் வரிவரியான நிழலில் அதைக் கிடத்தினாள். தாழியில் வளர்ந்த குவளை யின் மலர், நீர் வார்க்கத் தலைவி இல்லாத காரணத்தால் நீர் இல்லாமல் வாடியிருந்தது. அந்த வாடிய குவளைமலரைப் பாவைக்குச் சூட்டினாள். ' பரப்பிய மணலில் கிடக்கும் பாவையே ! என் மருமகளே !' என்று தழுவியவாறே அழு கிறாள்."

---

மலர்ந்த - விரிந்த, அகன்ற. குழை - தளிர். வினை - வேலைப்பாடு. அமை - மூங்கில். விழு - சிறந்த. தொடி - வளையல். கமம் - நிறைவு. சூல் - உள்ளே கொள்ளும் பொருள், நீர். நிறை - சால். ஆர - நிறைய.

கண்டோர் :

நாடுபல இறந்த நன்னர் ஆட்டிக்கு
ஆயமும் அணிஇழந்து அழுங்கின்று ; தாயும்
'ஈன்றேள் தாராய் இறீஇயர்என் உயிர்' எனக்
கண்ணும் நுதலும் நீவித் தண்ணெனத்
தடவுநிலை நொச்சி வரிநிழல் அசைஇத்
தாழிக் குவளை வாடுமலர் சூட்டித்
'தருமணல் கிடந்த பாவை !என்
மருமக ளே!' என முயங்கினள் அழுமே.*

## 43. நடைப் போட்டி

தலைவியை வெளியூர்க்கு அழைத்துச் சென்ற தலைவன், வழியெல்லாம் அவள் மகிழுமாறு நடந்தான். வேனில் காலம் ஆகையால் வெயிலின் வெப்பம் ஒருபுறம் வருத்தக் கூடியதாக இருந்தது ; வழியோ வளம் இழந்த பாலை வழியாக இருந்தது ; கொடிய விலங்குகளும் கொடிய வேட்டுவ மக்களும் வாழும் பகுதிகளைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது. இத்தகைய துன்பங்களும் கொடுமைகளும் ஒருபுறம் இருக்க, தன் பெற்றோரையும் தோழியரையும் பழகிய வீட்டையும் விட்டுப் பிரிந்து வந்த வருத்தம் ஒருபுறம் தலைவியின் நெஞ்சில் இருக்கும் என்பதைத்

*165...

நன்னர் - நன்மை. அழுங்கின்று - வருந்தியது. ஈன்றேள் - பாவையின் தாய், தலைவி. தடவு - வளைவு. அசைஇ - இருக்கச் செய்து. தருமணல் - கொண்டுவந்து பரப்பிய மணல். முயங்கினள் - தழுவி.

தலைவன் உணர்ந்தான். உணர்ந்து, இத்தனையும் மறந்து வழி நடந்து வருமாறு அவளை மகிழ்ச்சியாக நடத்தினான். அங்கே கிடைத்த புதுவகை மலர்களைப் பறித்துத் தந்து அவளுடைய கூந்தலில் சூடிக்கொள்ளுமாறு செய்தான். முன்னே நடக்கும்போது அவள் முதுகைக் காண வேண்டும் என்று விரும்பிச் சிறிது முன்னே நடக்குமாறு கூறினான். அதற்கு அவள் நாணியதைக் கண்டு மகிழ்ந்தான். அவள் முன்னே நடக்காமையால் தானும் அடியெடுத்து வைக்காமல் நின்றான். இப்படியே நின்று இருவரும் வழியில் சிறிது நேரம் தங்கிய பின் தொடர்ந்து சென்றனர். இவ்வாறு மகிழ்வித்துக் கடத்திச் சென்ற தலைவன் சில நாள் வெளியூரில் இருந்த பிறகு மீண்டு ஊர்க்கு வந்தான். ஊர்க்கு வந்ததும் தோழி அவனை எதிர்ப்பட்டு நிகழ்ந்தவற்றைக் கேட்டறிந்தாள். அப்போது தலைவன் பின்வருமாறு தோழியிடம் கூறினான்.

"காட்டில் பூத்த பாதிரிமலர்களை வேனில்காலத்தில் மலரும் அதிரல்மலர்களோடு கலந்து அழகுறக் கூந்தலில் செருகி, மெல்லிய மாமரத்தின் பூங்கொத்துகளை அணிந்து, ஒளிபொருந்திய வளைகள் ஒலிக்குமாறு கைவீசி, சிலம்பு ஒலித்து விளங்கச் சிலவகை மெல்லிய நடையோடு மெல்ல மெல்ல நடந்தாள். உன் அழகு சிறந்த முதுகை யான் காணுமாறு சிறிதுதூரம் முன்னே நட என்றேன். அவ்வாறு முன்னே நடப்பதற்கு நாணினாள். நாணி, உடனே மான் போன்ற பார்வையோடு மடப்பம் பொருந்த ஒதுங்கி நின்று முகம் கவிழ்ந்தாள். அதைக் கண்டு, யானும் முன்செல்லாமல் நின்றேன். அப்பொழுது அந்தப் பாலைவழியிலேயே தங்கினோம். பெரிய புலி ஒன்று ஆண் யானையைக் கொன்று முழங்கும் ஓசையும் கேட்டோம். வில் ஏந்திய வேட்டுவர்,

கள் உண்டு மயங்கி அவர்களின் சிற்றூரில் ஆரவாரம் செய்யும் துடியின் ஓசையையும் கேட்டோம். இந்த ஓசைகளைக் கேட்டவாறே அங்கே சிறிது நேரம் தங்கினோம்.''

தலைவன் :

> கானப் பாதிரிக் கருந்தகட்டு ஒள்வீ
> வேனில் அதிரலொடு விரைஇக் காண்வரச்
> சில்ஐங் கூந்தல் அழுத்தி மெல்இணர்த்
> தேம்பாய் மராஅம் அடைச்சி வான்கோல்
> இலங்குவளை தெளிர்ப்ப வீசிச் சிலம்புநகச்
> சின்மெல் ஒதுக்கமொடு மென்மெல இயலிநின்
> அணிமாண் சிறுபுறம் காண்கம் சிறுநனி
> ஏகுஎன ஏகல் நாணி ஒய்யென
> மாகொள் நோக்கமொடு மடம்கொளச் சாஅய்
> நின்றுதலை இறைஞ்சி யோளே ; அதுகண்டு
> யாம்முந் துறுதல் செல்லேம் ஆயிடை
> அருஞ்சுரத்து அல்கி யேமே ; இரும்புலி
> களிறுஅட்டுக் குழுமும் ஓசையும் களிபட்டு
> வில்லோர் குறும்பில் ததும்பும்
> வல்வாய்க் கடுந்துடிப் பாணியும் கேட்டே.*

*261. பாலைபாடிய பெருங்கடுங்கோ.

கருந்தகட்டு - கருநிறமான புறவிதழ் (வெளி இதழ்) உடைய. ஒள்வீ - ஒளியுள்ள பூ. அதிரல் - புனலிப் பூ. விரைஇ - கலந்து. காண்வர - காணத்தக்க அழகு பொருந்த. சில் ஐங் கூந்தல் - சில வாய் ஐவகைப்படும் கூந்தல். இணர் - மலர்க் கொத்து. தேம் - தேன். அடைச்சி - சேர்த்து. வான் - பெரிய. கோல் - திரண்ட. தெளிர்ப்ப - ஒலிக்க. நக - விளங்க. ஒதுக்கம் - ஒதுங்கி நடத்தல். இயலி - நடந்து. சிறுபுறம் - முதுகு. ஒய்யென - விரைந்து. மா கொள் - மான் தன்மை கொண்ட. சாஅய் - ஒதுங்கி. இறைஞ்சியோள் - கவிழ்ந்தாள். முந்துறுதல் - முன் செல்லல். அல்கியேம் - தங்கினோம். அட்டு - கொன்று. குழுமும் - முழங்

## 44. திருமணம்

திருமணம் நிகழ்ந்து சில திங்கள் ஆகிவிட்டன. தலைவனுடன் தலைவி இல்லறம் நிகழ்த்திவந்தாள். களவுக் காலத்திற்குமுன் ஒருவரை ஒருவர் அறியாமல் எங்கெங்கோ தனித்தனியே வாழ்ந்துவந்த அவர்கள், இப்போது ஈருடல் ஓருயிர் என்னுமாறு ஒருமனப்பட்டு வாழ்க்கை நடத்தி வந்தனர்; பல ஆண்டுகளாகவே நன்கு பழகியவர்களைப் போல் தோன்றினர்.

இது காண்பவர்க்கு வியப்பை விளைக்கும் வகையில் தோன்றும் காட்சியாக மட்டும் நிற்கவில்லை. ஒரு நாள் எதிர்பாராமல் நினைத்துப் பார்த்தபோது தலைவனுக்கே வியப்பாக இருந்தது.

அவனுடைய மனக்கண்ணில் களவுக்காலத்து உறவும் தோன்றவில்லை. திருமணக் காட்சியே தோன்றியது. வருவோர்க்கு வரையாது வழங்கிய விருந்துணவு மனக்கண்ணில் வந்து தோன்றியது. உழுத்தம்பருப்புச் சேர்த்துச் சமைத்துக் குழைந்த பொங்கலும் பெரிய பெரிய சோற்றுத் திரள்களும் வருவார் உண்ணக் கிடந்தன. வரிசைப்பட்ட கால்களுடன் அமைந்த திருமணப்பந்தல் பெரியதாய்க் குளிர்ந்ததாய் இருந்தது. புதுமணல் கொண்டுவந்து பரப்பப்பட்டிருந்தது. விளக்குகள் ஏற்றப்பட்டிருந்தன. மாலைகள் தொங்கவிடப் பட்டிருந்தன.

அந்த நாள் இன்ன நாள் என்பதும், இன்ன நேரம் என்பதும் தலைவன்நினைவில் வந்து நின்றன. மிக்க இருள் நீங்கிய விடியற்காலமாக இருந்தது. உரோகணி திங்களை அடையும் நல்ல நாளாக இருந்தது. முதியவராகிய மங்கலப்

---

கும். களி - கள்ளுண்ட மயக்கம். குறும்பு - பாலை நிலத்துச் சிற்றூர். வல்வாய் - வலிய வாய். பாணி - ஒலி.

பெண்கள் தலையில் குடம் சுமந்து கையில் புதிய கலங்களை ஏந்தி ஆரவாரத்தோடு தோன்றிப் பொருள்களை எடுத்துக் கொடுத்து உதவினர். குழந்தை பெற்ற மகளிர் நால்வர் சேர்ந்து, "கற்புநெறி போற்றி, நல்ல பேறுகளை உதவி, கணவனை விரும்பும் காதலியாகுக" என வாழ்த்தி, நெல் லும் மலரும் தூவி நீர் சொரிந்து தலைமகளை நீராட்டினர். இந்த நீராடலாகிய மணம் முடிந்த பிறகு, சுற்றத்தார் ஆரவாரத்தோடு விரைந்துவந்து, "பெரிய இல்லக்கிழத்தியாக வாழ்க" என்று வாழ்த்திக் கொடுத்தனர். அதன் பிறகு தனித்த அறையில் முதுகு வளைந்து குனிந்தவாறே புதுப் புடைவைக்குள் ஒடுங்கிக் கிடந்தாள் தலைவி. தலைவன் விருப்பத்தோடு அவளை அணுகி, முகத்தை மூடிய ஆடையை நீக்க, தலைவி அஞ்சி மூச்சுவிட்டாள். "உன் மனத்தில் உள்ள எண்ணத்தை மறைக்காமல் உரைக்க" என்று தலைவன் வினவினான். மான் போன்ற மடமும் செருக்கும் அமைந்த பார்வையுடைய தலைவி, காதில் குழை அசைய, உள்ளம் நிறைந்த மகிழ்ச்சியோடு, முகம் கவிழ்த்துத் தலை குனிந்திருந்தாள்.

இத்தகைய திருமணநாளின் காட்சி தலைவனுடைய மனக்கண்ணில் தோன்றியது ; அந்நாளில் அவள் புதியவள் போல் நடந்துகொண்ட தன்மையை எண்ணி, இந்நாளின் பழகிய வாழ்க்கையையும் எண்ணி, ஒப்பிட்டு வியந்து உருகினான்.

தலைவன் :

**உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை**
**பெருஞ்சோற்று அமலை நிற்ப நிரைகால்**
**தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி**

மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனையிருள் அகன்ற கவின்பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்
கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென
உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோன் பெட்கும் பிணையை ஆகென
நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரில் கிழத்தி ஆகெனத் தமர்தர
ஓர்இல் கூடிய உடன்புணர் கங்குல்
கொடும்புறம் வளைஇக் கோடிக் கலிங்கத்து
ஒடுங்கினள் கிடந்த ஓர்புறம் தழீஇ
முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப
அஞ்சினள் உயிர்த்த காலை யாழநின்
நெஞ்சம் படர்ந்தது எஞ்சாது உரைஎன
இன்னகை இருக்கைப் பின்யான் வினவலின்
செஞ்சூட்டு ஒண்குழை வண்காது துயல்வர
அகமலி உவகையள் ஆகி முகன்இகுத்து
ஒய்யென இறைஞ்சி யோளே மாவின்
மடங்கொள் மதைஇய நோக்கின்
ஒடுங்கீ ரோதி மாஅ யோளே.*

*86. நல்லாவூர் கிழார்.

அமலை - திரள். ஞெமிரி - பரப்பி. புத்தகல் மண்டை - புது அகல் மண்டை - புதிய அகன்ற கலம். கம்பலை - ஆரவாரம்.

## 45. அவளும் வந்தால்—

**ஊ**ரில் வறுமை மிகுந்தது. இல்லை என்ற குறை பெருகியது. பசித்துன்பம் பலரையும் வாட்டியது. தலைவனுடைய சுற்றத்தார் பலர் துன்புற்றனர். அவர்களின் துன்பத்தைக் கண்டு தலைவன் உள்ளம் உருகினான். மற்றவர்கள் வறுமையால் வாடுவதைக் கண்டபோதும் இரக்கம் கொண்டு வருந்தினான். அந்நிலையில் வெளிநாட்டிற்குச் சென்றாவது பொருள் தேடி வந்து எல்லோர்க்கும் உதவி செய்ய வேண்டும் என்று அவன்நெஞ்சம் துணிந்தது ; எவ்வளவு இரக்கமும் அருளுணர்வும் இருந்தாலும் என்ன பயன் ? பொருள்வளம் இல்லாதவர்களின் அருள் பயன் இல்லாதது என்று தலைவன் உணர்ந்தான். அவன் செல்ல வேண்டிய வழியோ கொடிய பாலைவழி. அந்த வழியின் கொடுமை அவனுக்குத் தெரியும். அதை நினைந்து அவன் தயங்கியதாகப் பிறர் எண்ணக் கூடும். ஆனால் அந்தக் கொடிய வழிக்கு அஞ்சும் அச்சம் அவனுடைய வீரநெஞ்சில் எள்ளளவும் இல்லை. அவன் நெஞ்சில் இருந்த கவலை வேறொன்று. அது தலைவியைப் பற்றியது. பாலைவழியில் மரங்கள் நிழலும் தராமல் வாடிய நிலையில், அங்குள்ள யானைகள் ஒன்றை விட்டு ஒன்று பிரியாமல் அன்பாகக் கூடிவாழும் வாழ்வை நினைந்தான். இலைகள் இல்லாதபோது மரப்பட்டைகளைப்

---

திதலை - தேமல். வால் இழை - தூய அணிகள். பெட்கும் - விரும்பும். கதுப்பு - கூந்தல். சும்மை - ஆரவாரம். ஞெரேரென - விரைந்து. கொடும்புறம் - வளைந்த முதுகு. கலிங்கம் - ஆடை. உயிர்த்த - மூச்சுவிட்ட. படர்ந்தது - நினைத்தது. எஞ்சாது - விடாமல், ஒளிக்காமல். துயல்வர - அசைய. இகுத்து - கவிழ்த்து. இறைஞ்சியோள் - வணங்கினாள். மதைஇய - செருக்குக்கொண்ட. ஓதி - கூந்தல்.

பிளந்து கொடுத்தாவது பெண்யானையின் பசியைப் போக்கும் ஆண்யானை அவன்நெஞ்சில் காட்சி அளித்தது. யானை அவ்வாறு வாழும்போது, தான்மட்டும் தலைவியைப் பிரிந்து துன்புறச் செய்துவிட்டு வெளிநாட்டுக்குச் செல்வது தகுமோ எனக் கலங்கினான். பாலைவனத்தின் கொடுமைக்குத் தயங்காத தலைவன், தன் துணைவியைப் பிரியும் கொடுமையை எண்ணியே தயங்கினான்.

"வறுமை காரணமாக இருண்ட நெஞ்சத்தின் துன்பத்தைத் தீர்க்கும் அருள் மிகுதியாக உடையவர்களாக இருந்தாலும், பொருள் இல்லாதவர்களுக்கு ஈதல் அறம் இயலாமற் போகும் என்பதை யானும் அறிவேன். ஆண்யானை, துன்ப மிகுந்த வேனில்காலத்தில் (வேறு உணவு இல்லாத காரணத்தால்) சினம் மிகுந்து தன் இனிய துணையாகிய பெண்யானை தின்னுவதற்காகத் தன் கொம்பு ஒடியக் குத்தி யாமரத்தின் பட்டைகளைப் பிளந்து ஊட்டும் அத்தகைய வறண்ட கொடிய பாலைவழிகள்—கதிரவன் வெம்மையால் நிலம் பிளவுபடும் பாலைவழிகள்—நமக்கு அரியவை அல்ல; ஒளி பொருந்திய வளைகளை அணிந்த காதலியையும் உடன் அழைத்துச் செல்வோமானால், அந்தக் கொடிய பாலைவழிகள் செல்வதற்கு அரியவை அல்ல."

தலைவன் :

**இருள்படு நெஞ்சத்து இடும்பை தீர்க்கும்**<br>**அருள்நன்கு உடைய ராயினும் ஈதல்**<br>**பொருள்இல் லோர்க்குஅஃது இயையா தாகுதல்**<br>**யானும் அறிவென் மனனே ; யானைதன்**<br>**கொல்மருப்பு ஒடியக் குத்திச் சினம்சிறந்து**<br>**இன்னா வேனில் இன்துணை ஆர**

*முளிசினை யாஅத்துப் பொளிபிளந்து ஊட்டப்
புலம்புவீற் றிருந்த நிலம்பகு வெஞ்சுரம்
அரிய அல்லமன் நமக்கே...
ஒண்தொடிக் குறுமகள் கொண்டனம் செலினே.**

## 46. பொருள் எய்துக

பொருள் தேடுவதற்காகப் பிரிந்து செல்லத் துணிந்த தலைவன் தன் கருத்தைத் தலைவிக்குத் தெரிவிக்க முடியாமல் வருந்தினன். மெல்லத் தோழியிடம் கூறினன். அவனுடைய முயற்சியை அறிந்தால் தலைவி மிக்க துயரம் அடைவாள் என்பதையும், அவனைத் தடுத்து நிறுத்தும் வகையில் அவளுக்குப் போதிய ஆற்றல் இல்லை என்பதையும் தோழி எண்ணிப் பார்த்தாள். தானாகத் தடுத்து நிறுத்த வேண்டும் என முயன்றாள். ஆயின் செல்ல வேண்டா என்று நேர் முகமாகக் கூறித் தடுத்தால், அவனுடைய துணிவை வெல்ல முடியாது என்று உணர்ந்தாள். அவன்மனம் விரும்பும் வகையில், அந்த முயற்சியை வாழ்த்துவது போலவே பேச்செடுத்தாள். வாழ்த்திக் கூறிய பிறகு, தலைவி துன்பம் தாங்கமுடியாத நெஞ்சினள் என்பதையும், ஆற்றியிருக்கக் கூடிய வன்மை இல்லாத மெல்லியள் என்பதையும், பிரிந்து வாழ இயலாத இளமை உடையவள் என்பதையும், பிரிந்த காலத்தில் இடைவிடாது நினைந்து துயரைப் பெருக்கிக்

---

*335. மதுரைத் தத்தங்கண்ணனார்.

கொன்மருப்பு - கொலை செய்யும் கொம்பு. ஆர - பசிதீரத் தின்னுமாறு. முளிசினை - முளிந்த கொம்புகளை உடைய. பொளி - பட்டை. புலம்பு - தனிமைத் துன்பம். குறுமகள் - இளைய பெண்.

கொள்ளத்தக்க பேரன்பு மிக்கவள் என்பதையும் எடுத்துரைத்தாள். இத்தகையவள் அவள் என்று உணர்ந்தால் பிரிந்து செல்லும் பயணத்தைக் குறித்து அவளிடம் கூறும் கல்நெஞ்சம் தலைவனுக்கு வராது என நம்பினாள். தடுக்கும் தன் கருத்தைக் குறிப்பால் அறிவித்தாள்.

"இவளை விட்டுப் பிரிந்து செல்வதையே எண்ணுவீராயின், நீர் தேடும் அரிய பொருள் உமக்குக் கிடைப்பதாக. குழைந்த தளிரைப் போன்றவள் இவள். பிரிவுத் துன்பத்தைத் தாங்கும் வலிமை இல்லாதவள்; மென்மையானவள்; வயதிலும் இளையவள்; உம்மை விட்டுப் பிரிய முடியாத பேரன்பு உடையவள். பிரிந்து போவதாகச் சொல்லும் உம் எதிரே, பிரிந்த காலத்தில் ஆற்றியிருப்பேன் என்று கூறும் அறிவுத்திறன் இல்லாதவள்."

தோழி :

...இவள்வயின்
பிரிந்தனிர் அகறல் சூழின் அரும்பொருள்
எய்துக மாதோ நுமக்கே; கொய்குழைத்
தளிர்ஏர் அன்ன தாங்கரு மதுகையள்
மெல்லியள் இளையள் நனிபேர் அன்பினள்
செல்வேம் என்னும் நும்எதிர்
ஒழிவேம் என்னும் ஒண்மையோ இலளே.*

*319. தாயங்கண்ணனார்.

இவள்வயின் - இவளிடத்தில். அகறல் - அகலுதல். சூழின் - எண்ணினால். தாங்கரு - தாங்குதற்கு அரிய. மதுகையள் - வலிமை உடையவள். நனி பேர் - மிகப் பெரிய. ஒண்மை - அறிவு.

## 47. துணியா நெஞ்சே !

தலைவன் பொருள் தேட வேண்டும் என்று எண்ணினான்; பிறகு தலைவியைப் பிரிந்து செல்ல வேண்டுமே என்றும், அவள் பிரிவாற்றாமல் துன்புறுவாளே என்றும் எண்ணித் தயங்கினான். சுற்றத்தாரின் வறுமையைக் கண்டும், மற்றவர்க்கு உதவி செய்யப் பொருள் இல்லாத நிலையை உணர்ந்தும் ஊரில் வாளா இருத்தல் தகுமோ என்று அவன் நெஞ்சம் அவனை இடித்துரைத்தது. தன்னையே நம்பி வாழும் ஒருத்தி—வாழ்க்கைத் துணைவி—துன்புறுமாறு பிரிந்து செல்வது அறம் ஆகுமோ என்று அவன் எண்ணினான். இன்பம், துன்பம், கூடுதல், பிரிதல் என்பவை எல்லாம் பகலும் இரவும் போல வாழ்க்கையில் மாறி மாறி வருபவை என்று உணர்ந்தான். பாலைவழி அவ்வளவு கொடியது என்று அறிந்திருந்தும், நெஞ்சம் துணிந்து செல்ல முயல்வது பொருளாசையால்தானே என்று எண்ணிப் பார்த்தான். தன் நெஞ்சத்தின் துணிவைத் தானே வியந்தான். நெஞ்சம் எவ்வளவு துணிந்து வற்புறுத்தினாலும் வற்புறுத்தட்டும், அதற்குத் தான் இசையப் போவதில்லை என ஒரு முடிவுக்கு வந்தான். நெஞ்சை மட்டும் அம் முயற்சியில் செல்ல விடுவது போலவும் அதற்கு விடை கொடுப்பது போலவும் கூறினான்.

“இன்பமும் துன்பமும் கூடியிருத்தலும் பிரிந்து செல்லுதலும் பகற்பொழுதும் இரவும் போல் வெவ்வேறு தன்மையை உடையனவாய் மாறுபட்டு உள்ளன என உணர்க. உணர்ந்தாயானால், பிரிந்து செல்லும் துன்பம் உள்ள கொடிய பாலைவழியில் நல்ல பொருளாசை செலுத்துவதன் காரணமாக நீ செல்வது தகுமோ ? துணிவு இல்லாத நெஞ்சமே ! நீ அவ்வாறு செல்லத் துணிந்தாயானால்,

சிறிதாவது என்னை நினைப்பாயோ? வழிப்போக்கர்கள் செல்லும்போது அவர்களுக்குப் பின்புறத்தில் ஒதுங்கி யிருந்து இரக்கம் இல்லாமல் கொல்லும் ஆறலைகள்வர்கள், தாங்கள் எய்த அம்புகள் போய்விட்டமைக்காக வருந்து வார்களாம்; அத்தகைய வழிகளை உடைய காட்டைக் கடந்து சென்ற பிறகு என்னைச் சிறிதாவது நினைத்துக் கொள்வாயோ?"

தலைவன் :

*இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்*
*நன்பகல் அமையமும் இரவும் போல*
*வேறுவேறு இயல ஆகி மாறுஎதிர்ந்து*
*உளஎன உணர்ந்தனை ஆயின், ஒரூஉம்*
*இன்னா வெஞ்சுரம் நல்நசை துரப்பத்*
*துன்னலும் தகுமோ துணிவுஇல் நெஞ்சே!*
*நீசெல வலித்தனை ஆயின், யாவதும்*
*நினைத்தலும் செய்தியோ எம்மே......*
*சென்றோர் செல்புறத்து இரங்கார் கொன்றோர்*
*கோல்கழிபு இரங்கும் அதர*
*வேய்பயில் அழுவம் இறந்த பின்னே.**

*327. மருங்கூர்ப் பாகைச் சாத்தன் பூதனார்.

இடும்பை - துன்பம். அமையம் - பொழுது. இயல - இயல்பு உடையன. ஒரூஉம் - பிரியும். நசை - விருப்பம். துரப்ப - செலுத்த. துன்னல் - நெருங்கிச் செல்லுதல். வலித்தனை - துணிந்தாய். யாவதும் - சிறிதும். இரங்கார் - இரக்கம் கொள்ளாதவர் (ஆகி). கோல் - அம்பு. கழிவு - போய்க் கழிந்தமை(க்காக). அதர - வழிகளை உடைய. வேய்பயில் - மூங்கில் மிகுந்த. அழுவம் - காடு. இறந்தபின் - கடந்து சென்ற பிறகு.

# 48. அங்கே நினைப்பாய்

பொருள் தேடுவதற்காகப் பிரிந்து செல்ல வேண்டும் என்று தலைவன் சில நாளாக எண்ணிவந்த போதிலும் தலைவியை விட்டுப் பிரிய அவன் துணியவில்லை. கனவு போல் நாட்கள் கழிவதை நினைந்தான். நாட்கள் கழிந்த பின் வரும் மூப்பை எண்ணினான். இவ்வாறு பயனற்றுப் போகும் வாழ்நாளில் காதல் பெறுதற்கு அரியதாக இருத்தலை எண்ணி, அந்தக் காதலைத் துறந்து பொருளைத் தேடிச் செல்லுதல் அறியாமை எனக் கருதினான். வீட்டின் ஒரு புறத்திலிருந்து இவ்வாறு எண்ணிக்கொண் டிருந்தபோது, தலைவி இங்கும் அங்கும் சென்றுகொண்டிருந்தாள். இடையறாமல் விருந்தோம்பும் அறத்தை மேற்கொண்டு அவள் உழைத்துவருதலைக் கண்டான். அவள்கூந்தலில் மலர்கள் விளங்குவதையும் முகத்தில் புன்முறுவல் பொலிவதையும் கண்டான். தன்னோடு நல்ல இன்சொற்கள் கூறிப் பேசுவதையும் எண்ணினான். இத்தகைய அவளுடைய செயலையும் பண்பையும் மறந்து போக முடியுமா என்றும், துணிந்து சென்றாலும் இடைவழியில் அவற்றை நினைந்து வருந்த நேருமே என்றும் கலங்கினான். நெஞ்சை நோக்கிக் கூறினான் :

"பொருள் தேடும் முயற்சியின் காரணமாகப் பிரிந்து செல்வதும் உண்டோ ? பிரிந்தாலும், ஒன்று சொல்கிறேன் கேள் நெஞ்சே ! கனவு தோன்றி மறைவது போல் நாள் தோறும் நனவில் நாள் கழிந்து போவதையும், மூப்பு நெருங்கி வருவதையும், பெறுதற்கு அரிய சிறப்பை உடைய காதலின் தன்மையையும் இப்போது நீ அறியாவிட்டாலும், மர நிழல் இல்லாத வழிகளை உடைய பாலையைக் கடந்த பிறகு நினைப்பாய் அல்லையோ ? (நினைத்து

வருந்துவாய் அல்லையோ ?) விருந்தினர் இடையறாமல் உள்ள பெரிய குளிர்ந்த வீட்டுப் பந்தரில் வருந்தி வருகின்றவரைப் போற்றி விருந்தோம்பி, மலர்ப் பொடிகளை உதிர்த்த தாழையை அணிந்த அழகிய கூந்தலின் மெல்லிய பின்னலில் விருப்பமான பூவிதழ்களைச் சேர்த்துச் சூடி, மகிழ்ச்சியே அணியாகக் கொண்ட புன்முறுவலோடு சிறந்த படுக்கையில் இருந்து நம்மோடு நல்ல மொழிகளைப் பேசும் காதலியின் குணங்களை அப்போது நினைத்து வருந்துவாய் அல்லையோ ?"

தலைவன் :

ஆள்வினைப் பிரிதலும் உண்டோ ? பிரியினும்
கேள்இனி வாழிய நெஞ்சே ! நாளும்
கனவுக்கழிந் தனைய ஆகி நனவின்
நாளது செலவும் மூப்பினது வரவும்
அரிதுபெறு சிறப்பின் காமத்து இயற்கையும்
இந்நிலை அறியாய் ஆயினும்...
மரநிழல் அற்ற இயவின் சுரன்இறந்து
உள்ளுவை அல்லையோ மற்றே உள்ளிய
விருந்துஒழிவு அறியாப் பெருந்தண் பந்தர்
வருந்தி வருநர் ஓம்பித் தண்ணெனத்
தாதுதுகள் உதிர்த்த தாழையங் கூந்தல்
வீழ்இதழ் அலரி மெல்லகம் சேர்த்தி
மகிழ்அணி முறுவல் மாண்ட சேக்கை
நம்மொடு நன்மொழி நவிலும்
பொம்மல் ஓதி புனையிழை குணனே.*

---

*353. மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார்.

ஆள்வினை - முயற்சி. இயவின் - வழிகளை உடைய. சுரன் - பாலை. இறந்து - கடந்து. ஒழிவு அறியா - ஒழியாத, ஓயாத. தாது - மகரந்தப் பொடி. வீழ் - விரும்புகிற. மெல்லகம் - மெல்லிய

## 49. நாளை எங்கே ?

பொருள் தேடி வர வேண்டும் என்பதற்காக வீட்டை விட்டுப் பிரிந்து செல்வதற்குக் குறித்த நாள் நெருங்கியது. பிரியும் நாளுக்கு முந்தியநாள் தலைவன் வீட்டில் இருந்தவாறே தன் பிரிவைப் பற்றி எண்ணி உருகினான்.

"மா நிறமுள்ள காதலியோடு வேலைப்பாட்டின் அழகு எய்திய, புனையப் பெற்ற பூக்களை உடைய படுக்கையில் வான் அளாவிய பெரிய மாளிகையில் தங்கி இன்றைப்பொழுது மிக இனிமையாகக் கழிந்தது. நாளைய நிலைமை என்னவோ? உறக்கம் வந்து பொருந்தாத கண்களோடு, தனிமைத் துன்பம் வந்து வருத்த எங்கே தங்குவோமோ? நெஞ்சே! நாளை நாம் தங்கும் இடம், வளம் எல்லாம் இழந்து பாழ் பட்ட ஓர் இடமாக இருக்கலாம். வாணிகக் கூட்டத்தைக் கொன்று வழிபறித்த பொருளைக் கூட்டாகப் பெற்று உண்ணும் கொடியவரின் - வருத்தம் செய்யும் அம்புகளையும் வளைந்த வில்லையும் உடைய ஆறலைகள்வரின் - பகைக்கு அஞ்சி ஊரார் அந்த ஊரை விட்டு வெளியேறிய காரணத்தால் வளம் இழந்துபோன பாழிடம், பீர்க்கு வளர்ந்த பழைய பாழிட மாக இருக்கலாம். அங்கே முருங்கைக் கிளைகளை ஒடித்துத் தின்ற யானையின் முதுகின் உயர்ந்த பிடரி உராய்ந்த காரணத்தால் தளர்ந்து, செங்கல்லால் கட்டிய நீண்ட சுவரின் விட்டம் விழுந்திருக்கும். அதனால் மணிப்புறா அந்த இடத்தை விட்டு நீங்கியிருக்கும். அத்தகைய மரம் சோர்ந்து

---

பின்னல். சேக்கை - படுக்கை. நவிலும் - கூறும். பொம்மல் - பொலிவு பெற்ற. ஓதி - கூந்தல். புனையிழை - புனையப் பெற்ற அணிகலன்களை அணிந்த தலைவி. குணன் - குணம்.

விழுந்த மாடத்தைக் காண்போம். ஓவியமாக எழுதப்பெற்ற அழகிய கடவுளும் இடத்தைவிட்டு நீங்கியமையால் பொலிவு அழிந்து, பலி நிகழ்வது மறக்கப்பட்டு மெழுகப்படாத புல்லிய திண்ணை அங்கே இருக்கும். அதனைக் காண்போம். குட்டி ஈன்று பால்தரும் நாய் தங்கியுள்ள வட்டமான இடத்தை உடைய சிறிய வீட்டில், வேலைப்பாடு செய்யப் பட்ட தூண் அழியும்படியாக நெருங்கிக் கறையான் மூடி யுள்ளதைக் காண்போம். அங்கே கூரை அழிந்து நல்ல இறப்பு மட்டும் உள்ள அம்பலத்தில் நாளை நாம் தங்கி யிருப் போமோ, என்னவோ ?'' என்று தலைவன் நெஞ்சிற்குக் கூறி வருந்தினான்.

தலைவன் :

...மாஅ யோளொடு
வினைவனப்பு எய்திய புனைபூஞ் சேக்கை
விண்பொரு நெடுநகர்த் தங்கி இன்றே
இனிதுடன் கழிந்தன்று மன்னே ; நாளைப்
பொருந்தாக் கண்ணேம் புலம்புவந்து உறுதரச்
சேக்குவங் கொல்லோ நெஞ்சே ! சாத்துஎறிந்து
அதர்கூட் டுண்ணும் அணங்குடைப் பகழிக்
கொடுவில் ஆடவர் படுபகை வெரீஇ
ஊர்எழுந்து உலறிய பீர்எழு முதுபாழ்
முருங்கை மேய்ந்த பெருங்கை யானை
வெரிந்ஓங்கு சிறுபுறம் உரிஞ ஒல்கி
இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென
மணிப்புறாத் துறந்த மரம்சோர் மாடத்து
எழுதுஅணி கடவுள் போகலின் புல்லென்று
ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்திணைப்

பால்நாய் துன்னிய பறைக்கண் சிற்றில்
குயில்காழ் சிதைய மண்டி அயில்வாய்க்
கூர்முகச் சிதலை வேய்ந்த
போர்மடி நல்இறைப் பொதியி லானே.*

## 50. ஊர் மறைகிறதே

பொருள் தேடுவதற்காகப் பிரிய முயன்ற தலைவன், தன் மனத்திற்குள்ளேயே பிரிவாற்றாமையை நினைந்து பல நாள் வருந்தினான். இறுதியில் துணிந்து தலைவியிடம் கூறினான். முதலில் தயங்கிய அவள் பிறகு விடை கொடுத்தாள்.

பிரியும்போது, அவனை நோக்கி, "பொருள் காரணமாகப் பிரிந்து சென்றால், காலம் நீட்டித்து அங்கே தங்குவீர்கள் அல்லிரோ?" என்று கேட்டாள். விரைவில் திரும்புவதாக

*167. கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

மாயோள் - மாமை நிறம் உடையவள், தலைவி. சேக்கை - படுக்கை. நகர் - வீடு. கழிந்தன்று - கழிந்தது. புலம்பு - தனிமைத் துயர். சேக்குவங்கொல் - தங்குவோமே. சாத்து - வணிகர் கூட்டம். எறிந்து - கொன்று. அதர் - வழி. அணங்கு - துன்பம். பகழி - அம்பு. கொடு - வளைந்த. வெரீஇ - அஞ்சி. உலறிய - வறட்சியுற்ற. வெரிந் - முதுகு. சிறுபுறம் - பிடரி. ஒல்கி - தளர்ந்து. இட்டிகை - செங்கல். கண் - இடம். குயில் - இயற்றுதல், வேலைப்பாடு. காழ் - வயிரம். மண்டி - நெருங்கி. அயில் வாய் - கூர்மையான வாய். சிதலை - கரையான். வேய்ந்த - மூடிய. போர் - போர்த்தல், கூரை. இறை - இறப்பு. பொதியில் - அம்பலம்.

அவளுக்குத் தேறுதல் சொல்லிவிட்டுத் தலைவன் பிரிந்தான். பிரிந்து செல்லும்போது திரும்பித் திரும்பிப் பார்த்துச் சென்றான். முதலில் தன் வீடு மறைவதைக் கண்டான். பிறகு தெரு மறைந்தது. பிறகு ஊரின் சில பகுதிகள் மறைந்தன ; பிறகு பல பகுதிகள் மறைந்தன. ஊரின் மன்றம் ஊரின் ஓரத்தே இருந்தமையால் நெடுந்தூரம் மறையாமல் தோன்றியது ; ஊரை அடுத்திருந்த பெரிய மரங்களும் கண்ணுக்குத் தோன்றின. மேலும் நடந்து சென்றான். மறுநாள் நெடுந்தொலைவு நடந்து போய்விட்டான். அப்போது ஓர் இடத்தில் நின்று திரும்பிப் பார்த்தபோது, அந்த ஊர் மன்றமும் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துவிட்டது ; மரங்களும் மறைந்துவிட்டன. ஊர் கண்ணுக்கு எட்டாத தாய் மறைந்ததைக் கண்டதும் அவனுடைய நெஞ்சம் கலங்கி வருந்தியது. தன்னைப் பிரிந்து தனித்திருக்கும் துணைவியையும், பிரியுமுன் அவள் சொன்ன சொல்லையும் நினைந்து துயருற்றான்.

" அந்தோ ! இரங்கத்தக்கது அந்த ஊர் ; அது என்ன ஆகுமோ ? அங்கு உள்ள மன்றமும் இப்போது கண்ணுக் குத் தோன்றுது ; மரங்களும் தோன்றவில்லை. பெண்கள் பிறையைத் தொழுகின்ற பொலிவற்ற மாலைக் காலம் இது. இந்நேரத்தில் யான் இந்த இடத்தில் பிரிந்திருக்கிறேன். அவளோ, 'சேர்ப்பதற்கு அரியதான பொருள் காரணமாகப் பிரிந்தால் காலம் நீட்டித்துத் தங்குவீர்கள் அல்லிரோ ?" என்று குறியவையும் நெடியவையுமாக ஊடல்மொழிகள் கூறி, நேற்றும் என்னோடு இனிய பல சொல் சொன்னாள். அவள் அங்கே தனித்திருக்கிறாள். அந்தப் பெரிய நல்ல ஊர் இரங்கத்தக்கது, அந்தோ !"

தலைவன் :

*அளிதோ தானே எவன்ஆ வதுகொல்!*
*மன்றும் தோன்றாது ; மரனும் மாயும் ;...*
*ஒள்ளிழை மகளிர் உயர்பிறை தொழூஉம்*
*புல்லென் மாலை யாம்இவண் ஒழிய*
*" ஈட்டருங் குரைய பொருள்வயின் செலினே*
*நீட்டுவிர் அல்லிரோ நெடுந்தகை யீர் " எனக்*
*குறுநெடும் புலவி கூறி நம்மொடு*
*நெருநலும் தீம்பல மொழிந்த*
*சிறுநல் ஒருத்தி பெருநல் ஊரே.**

## 51. மலர் இழந்த கொடி

பொருள் தேட வேண்டும் என்று துணிந்து புறப்பட்டான் தலைவன். வழியே வந்து கொண்டிருந்தபோது அவன் நெஞ்சம் திரும்பத் திரும்ப வீட்டையும் அங்குத் தன்னைப் பிரிந்து வருந்தும் தலைவியையும் நினைந்து நினைந்து ஏங்கியது. நடுவழியில் இவ்வாறு நெஞ்சு நினைந்து ஏங்கியதால், பயணத்திலும் ஊக்கம் இல்லை. அவன் அறிவால் எண்ணிப் பார்த்தான் ; முயற்சியில் தளராமல் கடமையை முடிக்க வேண்டும் என்ற துணிவு பிறந்தது. ஆயின் அடுத்த நொடியிலேயே அவனுடைய நெஞ்சு வீட்டில்

---

*239. எயினந்தை மகன் இளங்கீரனார்.

எவன் - என்ன. மரன் - மரம், மரங்கள். மாயும் - மறையும். இவண் - இங்கே. ஈட்டருங்குரைய - ஈட்டரிய - சேர்ப்பதற்கு அரிய. நெடுந்தகையீர் - உயர்ந்த தன்மை உடையவரே. நெருநல் - நேற்று. தீம் பல - இனியன பல.

தனித்திருந்து வருந்தும் காதலியின் துன்பத்தைப் படமாகத் தீட்டிக் காட்டியது ; உடனே அவன் துணிவு கலங்கியது : பயணத்தில் சோர்வு கண்டான். இவ்வாறு ஒருமுறை அன்று, பலமுறை கலங்கினான் ; சோர்ந்தான்.

எவ்வாறோ சிறிது சிறிதாக நடந்து ஒரு மலையடிக்கு வந்து சேர்ந்தான். மலையைக் கடந்து அப்பால் செல்வதற்கு முன் மீண்டும் பழைய போராட்டமும் சோர்வும் தலையெடுத்தன. அப்போது தலைவனுக்கு ஒருவகை அஞ்சாமை பிறந்தது. தன்னைக் கலக்கிச் சோர்வடையச் செய்யும் நெஞ்சைக் கடிந்து அறிவுரை கூறத் தொடங்கினான்.

"நெஞ்சே ! நீ இன்று வந்து இங்கே இவ்வாறு செய்கின்றாயே. நான் புறப்பட்ட அன்று என்னோடு வாராமல் வீட்டிலேயே நின்றுவிட்டிருக்கலாம் ; நிற்காமல் வந்தாய். வந்து மிகவும் வருந்தினாய். இப்போது என்னுடன் வரத் துணியாமல் பின்வாங்குகிறாய். இந்த மலையைக் கடந்து வரத் தயங்குகிறாய். என்னை முன்னே அனுப்பி விட்டு, என்பின்னே நின்று பிரிவதற்கு எண்ணுகிறாய். அப்படியானால், இனிமேல் தடையில்லாமல் திரும்பிச்செல். உன் எண்ணம் விரைவில் சிறப்படைவதாக. ஆனால் ஒன்று கேட்டுக்கொள்கிறேன். நீ வீட்டிற்குச் சென்று தலைவியைச் சேர்ந்த பிறகு, என்னை மறந்துவிடாதே" என்றான்.

தலைவன் :

**அன்றுஅவண் ஒழிந்தன்றும் இலையே ; வந்துநனி**
**வருந்தினை வாழிஎன் நெஞ்சே !...குன்றம்**
**எம்மொடு இறத்தலும் செல்லாய் ; பின்நின்று**
**ஒழியச் சூழ்ந்தனை ஆயின் தவிராது**

**செல்இனிச் சிறக்கநின் உள்ளம் வல்லே**
**மறவல் ஓம்புமதி எம்மே...காதலி**
**உயங்குசாய் சிறுபுறம் முயங்கிய பின்னே.**

தன் மனம் தன்னோடு ஒத்துழைக்காமல் தன் முயற் சிக்குத் துணை நிற்காமல், தலைவியை நாடி வருந்துவதை உணர்ந்து அதற்கு விடைகொடுத்து அனுப்புவதுபோல் கூறினன். ஆயினும் தலைவியை நினைந்து நெஞ்சம் மட்டும் வருந்தியது, அவன் வருந்தவில்லை என்று கூறமுடியாது. அறிவு பற்றின்றி உண்மைகளை உணர்த்த, மனம் பற்றுக் கொண்டு விருப்பு வெறுப்பின் வழிச் செல்ல, மனிதன் வாழ்க்கையில் போராடுவது இயற்கை. இந்தப் போராட்டமே காதலன்பிரிவில் ஒரு படமாகத் தீட்டப்பட்டுள்ளது. ஆயினும் தலைவன் வேறு, அவன் நெஞ்சு வேறு என்று பிரிந்து நிற்காமல், நெஞ்சுடன் கலந்தே வருந்தினன்.

தலைவன் கடமையை மேற்கொண்டு வழிநடந்தபோதெல் லாம் அவனுடைய மனம், பிரிந்து வருந்தும் தலைவியையே, நினைந்து உருகியது; தலைவனுடைய அறிவும் கண் முதலி யனவும் செல்லும் வழியையே கண்டுவர, அவனுடைய நெஞ்சு வருந்தும் தலைவியின் படத்தைக் கற்பனை செய்து கண்டு கொண்டிருந்தது. அவ்வாறு நெஞ்சு தீட்டிய படத்தைத் தலைவன் உணர்ந்து கூறியுள்ளான்.

" குவளை மலரின் கரியஇதழ்களைப் போன்ற கண்களின் இமைகள் இப்போது கண்ணீர் நிரம்பியிருக்கும். அழுது அழுது சிவந்து அவை நறவம்பூவின் சிவந்த இதழ்களைப் போல் ஆகியிருக்கும். பிரிவாற்றுமையால் உள்ளம் கொதித்து வருந்தும்போதெல்லாம் வற்றிப்போய்த் துன்ப வேகத் தால் விரைந்து விழும் கண்ணீர் வெப்பம் உடையதாகும். அந்தக் கண்ணீரின் துளி வெப்பத்தோடு விழும்போது,

தலைவியே திடுக்கிடுவாள். துயரத்தால் மெலிந்து மெலிந்து அவளுடைய மெல்லிய முன்கையில் இருந்த சில வளையலும் கழன்று போயிருக்கும். தன்னை அழகுபடுத்திக் கொள்வதையும் விட்டு, மலர்கள் அற்ற கொடிபோல் பொலிவிழந்து தோன்றுவாள். வீட்டை விட்டு வெளியே செல்லவும் பிறரோடு பழகவும் மனம் இல்லாமல் ஒரு மூலையில் தனியே உட்கார்ந்திருப்பாள். மாலை வேளையில் ஏற்றப்படும் அகல் விளக்கின் சுடர்தான் அவளுக்குத் துணையாக இருக்கும்."

இவ்வாறு அவன் தலைவியின் துன்பநிலையை ஓவியமாகத் தீட்டிக் காண்பதே அவன் கலங்குவதை நன்கு எடுத்துக் காட்டுகின்றது. இத்தகைய கலக்கமும் சோர்வும் இருந்த போதிலும், அவன் மேற்கொண்ட கடமையை முடிக்கவே துணிந்தான். அதனால்தான், "நெஞ்சே! நீ தடையில்லாமல் செல். ஆயின் என்னை மறக்காதே" என்று விடை கொடுக்கும் முறையில் நெஞ்சிற்குக் கூறினான்.

தலைவன் :

சேயிதழ் அனைய ஆகிக் குவளை
மாயிதழ் புரையும் மலிர்கொள் ஈரிமை
உள்ளகம் கனல உள்ளுதொறு உலறிப்
பழங்கண் கொண்ட கதழ்ந்துவீழ் அவிர்அறல்
வெய்ய உகுதர வெரீஇப் பையெனச்
சில்வளை சொரிந்த மெல்விறை முன்கை
பூவீ கொடியின் புல்லெனப் போகி
அடர்செய் ஆய்அகல் சுடர்துணை யாக
இயங்காது வதிந்தநம் காதலி
உயங்குசாய் சிறுபுறம் முயங்கிய பின்னே.*

---

*19. பொருந்தில் இளங்கீரனார்.

அவண் - அங்கே. ஒழிந்தன்றும் - வாராமல் நின்றதும். இறத்தல் - வழிகடத்தல். செல்லாய் - மாட்டாய். வல்லே - விரை

## 52. பல்லி! நல்ல கூறு

தலைவன் பொருள்தேடும் நோக்கத்தோடு தலைவியை விட்டுப் பிரிந்து சென்றான். சென்றபின், தலைவி எவ்வெவ் வாறு துயருற்று வருந்துவாளோ என்று பலமுறை நினைந்து நினைந்து கலங்கினான். வீட்டில் அவளுடன் பிரியாமல் வாழ்ந்த காலத்திலேயே அணைத்த கை சிறிது நெகிழ்ந்து தளர்ந்தாலும் அவள் வருந்துவாளே என்றும், அப்படிப் பட்டவள் நெடுந்தொலைவு வந்து பிரிந்திருக்கும் நிலையில் எவ்வளவு வருந்துவாளோ என்றும் எண்ணி நொந்தான். தான் பிரிந்து சென்ற நாட்களை நாள்தோறும் சுவரில் குறித்து அதை நோக்கி நோக்கி வருந்துவாள் என்றும், கண்ணீர் விட்டுக் கலங்கியவாறே படுக்கையில் கிடந்து துன்புறுவாள் என்றும் கற்பனை செய்து நெக்குருகினான். வீட்டில் பல்லி சொல்லும்போது, அது நன்மை தீமைகளை அறிவிப்பதாக அவள் உணர்வாளே என்று நினைத்தான்; தான் பிரிந்திருக்கும் காலத்தில் பல்லி சொல்லுமானால், தீமை கூறாமல் நன்மையே கூற வேண்டும் என்று ஏங்கி நடுங்குவாள் என்றும் எண்ணினான்.

"பாலைவழியின் இடையே மரங்கள் ஓங்கிய வழிகளில் வந்து பொருள் தேடும் கடமையே உறுதியாகப் பற்றியிருக் கின்றேன் யான். என் பிரிவால், என்னை நினைந்து கலங்கும் உள்ளத்தோடு ஓயாமல் வருந்திக்கொண் டிருப்பாள் அவள். மெல்லத் தழுவிப் பிணித்த கை சிறிது நெகிழ்ந்து

---

வில். புரையும் - போன்ற. மலிர் - நீர் - கண்ணீர். உலறி - வற்றி. பழங்கண் - துன்பம். கதழ்ந்து - விரைந்து. அறல் - நீர். உகுதர - சொரிய. வெரீஇ - அஞ்சி. பூவீகொடி - பூ ஒழிந்த கொடி. அடர் - தகடு - பொன்தகடு. வதிந்த - தங்கிய. உயங்கு - வருந்து. சாய் - மெலிந்த.

விலகினாலும் வருந்தும் தன்மை உடையவள் அவள். நெடுந் தொலைவு பிரிந்து தனித்து வாழும் காரணத்தால் நாள் தோறும் முறையாகக் கோடு இழைத்த திண்மையான சுவரை நோக்குவாள். பிரிவை நினைந்து உருகி வருந்துவாள். நூலிலிருந்து நெகிழ்ந்து உதிரும் முத்துக்களைப் போல் கண்ணீர் மார்பில் தெறித்து விழ, அழகிய மெல்லிய அன்னத்தின் சிறகால் அமைத்த அணையில் கிடந்து அறிவு மயங்கி வலிமை அழிந்து வருந்துவாள். பிளந்த வாயை உடைய பல்லி ஒலிக்கும்போதெல்லாம் வழிபடுவாள் ; வழி பட்டு, 'நன்மையானவற்றையே கூறுக' என்று நடுங்கி, பொலிவற்ற மாலைக் காலத் துன்பத்தை எதிர்த்து வருந்துவாளோ ?''

தலைவன் :

*சுரனிடை விலங்கிய மரன்ஓங்கு இயவின்*
*வந்துவினை வலித்த நம்வயின் என்றும்*
*தெருமரல் உள்ளமொடு வருந்தல் ஆனாது*
*நெகிழா மென்பிணி வீங்கிய கைசிறிது*
*அவிழினும் உயவும் ஆய்மடத் தகுவி*
*சேண்உறை புலம்பின் நாள்முறை இழைத்த*
*திண்சுவர் நோக்கி நினைந்து கண்பனி*
*நெகிழ்நூல் முத்தின் முகிழ்முலைத் தெறிப்ப...*
*ஐமென் தூவி அணைசேர்பு அசைஇ*
*மையல் கொண்ட மதன்அழி இருக்கையள்*
*பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி*
*நல்ல கூறுஎன நடுங்கிப்*
*புல்லென் மாலையொடு பொரும்கொல் தானே.**

---

289. எயினந்தை மகன் இளங்கீரனார்.

சுரன் - பாலைவழி. விலங்கிய - குறுக்கிட்ட. மரன் - மரம். இயவு - வழி. வலித்த - உறுதிகொண்ட. தெருமரல் - சுழலல்.

## 53. வைகறை மதியம்

தலைவன் பொருள் தேடத் துணிந்து பயணம் குறித்து ஏற்பாடுகள் முடித்துத் தலைவியிடம் கூறினான். கூறக்கேட்ட அவளுடைய உள்ளத்தின் துன்பம் முகத்தில் புலப்பட்டது. அவளுடைய முகம் விடியற்காலத்து மதிபோல் அழகு இழந்து தோன்றியது. தன் துன்பம் கணவனுக்குப் புலப் படாமல் இருத்தல் வேண்டும் என்று உடனே அவள் முகம் கவிழ்ந்தாள். உள்ளத்தில் அமைதி இழந்தவளாய்க் கால் விரலால் நிலத்தைக் கிளறி நின்றாள். கண்கள் நீர் நிறைந்தன. சில கண்ணீர்த்துளிகள் மார்பிலும் விழுந்தன. நிற்க முடியா மல் கால் தடுமாறினாள். முகத்தையும் கூந்தலால் மறைத்து, நா நடுங்கிய சொற்களால், "உமது பயணம் செம்மை உறுவதாக" என்று கூறி வெம்மையான மூச்சுவிட்டு, மிக்க துன்பத்தால் கலங்கி அழிந்தாள். இவ்வாறு தலைவி உற்ற துன்பம் தலைவனுடைய நெஞ்சை விட்டு நீங்கவில்லை. தலைவன் பிரிந்த பின்னும் இந்தத் துன்பக்காட்சி அடிக்கடி நினைவில் தோன்றி அவனை வருத்திவந்தது. சென்ற நாட்டில் பொருள் தேடும் முயற்சியில் முனைந்து நின்றபோதும் நீங்காமல் வந்து வருந்தியது. அப்போது ஒருமுறை தலைவன் அந்தக் காட்சி யைப் பற்றி எண்ணலானான். சொந்த ஊரையும் மறந்து வெளிநாட்டில் வேற்றூரில் தங்கி வாழ முடிந்தபோதிலும், அன்று கண்ட அந்தத் துன்பக் காட்சியை மறக்கமுடிய வில்லையே என்று எண்ணினான்.

---

ஆனாது - ஓயாது. உயவும் - வருந்தும். ஆய்மடத்தகுவி - அழகிய மடப்பம் உடையவள், தக்கவள். சேண் - தொலைவு. பனி - நீர். தூவி - அன்னத்தின் சிறகு. மையல் - மயக்கம். மதன் - வலிமை. பகு - பிளந்த. பொரும் - போர் செய்யும், எதிர்க்கும்.

"பகலும் இரவுமாகக் கடமை காரணமாகப் பிரிந்த என் உள்ளம் ஊரையே எப்போதும் நினைக்கின்றது. ஊரை மறந்து வாழ்வதற்கு என்னால் முடியும் என்றாலும், அந்தத் துன்பக் காட்சியை மறந்து வாழ முடியவில்லையே. தேடும் பொருள் காரணமாகப் பிரிந்து செல்லும் பயணத்தைப் பற்றி அவளிடம் சொல்ல, வைகறைப் பொழுதில் ஒளி குறைந்து தோன்றும் மதிபோல், தனிமைத் துன்பத்தால் மெல்ல மெல்ல அழகு இழந்துவிட்டது அவளுடைய முகம். அந்த அழகு பொருந்திய திருமுகம் கவிழ்ந்து, கால்விரலால் நிலத்தைக் கிளறி, கண்கள் சொரிந்த தெளிந்த துளிகள் மார்பில் விழ, கால் நிலையாக நிற்க முடியாதவளாய் மிக்க துன்பத்தால் கலங்கினாள். நடுங்கிய நாவோடு திருந்தாச் சொற்கள் சில கூறினாள். கருமணல் போன்ற கூந்தலில் மறைந்தவாறே கூறினாள். "திறம்படச் சிறப்பாக அமைந்து உம் பயணம் செம்மை உறுவதாக" என்று வெம்மை யான மூச்சு விட்டுப் பெருந் துன்பத்தோடு நெஞ்சம் அழிந்தாள். மிக்க விரைவு உடைய அவள் அவ்வாறு கலங்கிய அந்த நிலையை மறந்து வாழ என்னால் முடிய வில்லையே."

தலைவன் :

***எல்லையும் இரவும் வினைவயின் பிரிந்த***
***உள்ளம் முன்னுறுபு அடைய உள்ளிய***
***பதிமறந்து உறைதல் வல்லுநம் ஆயினும்***
***அதுமறந்து உறைதல் அரிதா கின்றே ;...***
***செய்பொருள் மருங்கின் செலவுதனக்கு உரைத்தென***
***வைகுநிலை மதியம் போலப் பையெனப்***
***புலம்புகொள் அவலமொடு புதுக்கவின் இழந்த***
***நலம்கெழு திருமுகம் இறைஞ்சி நிலம்கிளையா***

நீரொடு பொருத ஈரிதழ் மழைக்கண்
இகுதரு தெண்பனி ஆகத்து உறைப்பக்
கால்நிலை செல்லாது கழிபடர்க் கலங்கி
நாநடுக் குற்ற நவிலாக் கிளவியொடு
அறல்மருள் கூந்தலின் மறையினள் திறன்மாண்டு
திருந்துக மாதோநும் செலவுஎன வெய்துஉயிராப்
பருவரல் எவ்வமொடு அழிந்த
பெருவிதுப் புறுவி பேதுறு நிலையே.*

## 54. உயிரும் உடம்பும்

ஒரு பக்கம், முயற்சியில் பின்வாங்காமல் துணிந்து சென்று பொருள்தேடி வர வேண்டும் என்னும் எண்ணம்; மற்றொரு பக்கம், வெளிநாட்டிற்குச் சென்ற பிறகு பிரிவாற்றாமல் தலைவி வருந்துவாளே என்ற கவலை; இவ்வாறு கடமை ஒருபுறம் காதல் ஒருபுறம் இழுக்கத் தலைவன்

---

*299. எயினந்தை மகனார் இளங்கீரனார்.

எல்லை - பகல். வினைவயின் - கடமை காரணமாக. முன்னுறுபு - முன்னுற்று, முந்தி. அடைய - முழுதும். வல்லுநம் - வல்லோம். செலவு - பயணம். உரைத்தென - உரைக்க. வைகுநிலை - வைகறைப் பொழுது. பையென - மெல்ல. கவின் - அழகு. இறைஞ்சி - வணங்கி, குனிந்து. கிளையா - கிளைத்து. ஈர்இதழ் - குளிர்ந்த இமைகள். இகுதரு - சொரியும். தெண்பனி - தெளிந்த நீர். ஆகத்து - மார்பில். கழிபடர் - மிக்க துன்பம். நவிலா - சொல்லிப் பழகாத, திருந்தாத. அறல் - கருமணல். மருள் - போன்ற. மாண்டு - மாட்சிமைப்பட்டு. பருவரல் - துன்பம். எவ்வம் - துன்பம். விதுப்புறுவி - விரைவு உடையவள் (அவசரப்படுபவள்). பேதுறு - மயங்கிய.

வருந்தினன். இறுதியில் பொருள்தேடத் துணிந்து புறப்பட்டுச் சென்றான். போகும் வழியிலும் அவன் இந்தப் போராட்டத்திற்கு மீண்டும் மீண்டும் இரையாகி வருந்தினன். இருதலைக் கொள்ளியினிடையே அகப்பட்ட எறும்பு போல் அவன் துன்புற்றான். ஒப்புரவான வாழ்க்கை வாழ வேண்டுமானல், பொருள்தேடும் முயற்சியைக் கைவிடக் கூடாது என்று எண்ணினன். அதை எண்ணும்போதே, தலைவி எவ்வாறு வருந்தித் துன்புறுவாளோ என்ற எண்ணமும் வந்துவந்து அவனை வாட்டியது. அப்போது தனக்கும் அவளுக்கும் உள்ள நட்பு எத்தகையது என்று நினைத்தான். அந்தக் காதல், உயிர்வாழ்க்கையின் அடிப்படையாய்ப் பிரிய முடியாததாய் இருத்தலை நினைந்து உருகினன் :

" முன்னே முயற்சி கொண்டு எழுந்த சோர்வில்லாத உள்ளத்தின் ஆண்மை இழுக்க, காதல் பின்னே நின்று தடுக்க, இவ்வாறு இருவகையில் வருந்தும் நெஞ்சமே ! இரண்டு கணுக்களில் தீப்பற்றி எரிய இரண்டு பக்கமும் வேகும் கொள்ளியின் உள்ளே இடையே அகப்பட்டு வருந்தி ஒரு பக்கமும் போக முடியாத எறும்பைப்போல் வருந்துகின்றோம். நம் காதலி வருந்துவாளோ ? அந்தோ பாவம் ! உடலுக்கு உயிர் அமைந்தது போன்ற நட்பையும், அந்த உயிர் இன்புற்று வாழ்தல் போன்ற காதலையும், துன்புற்றுச் சாதல்போன்ற பிரிவு இயலாமையும் உடைய காதலி வருந்துவாளோ ?"

தலைவன் :

...முற்பட
**ஆள்வினைக்கு எழுந்த அசைவுஇல் உள்ளத்து**
**ஆண்மை வாங்கக் காமம் தட்பக்**
**கவைபடு நெஞ்சம் கட்கண் அகைய**

இருதலைக் கொள்ளி இடைநின்று வருந்தி
ஒருதலைப் படாஅ உறவி போன்றனம் ;
நோங்கொல் அளியள் தானே யாக்கைக்கு
உயிர்இயைந் தன்ன நட்பின் அவ்வுயிர்
வாழ்தல் அன்ன காதல்
சாதல் அன்ன பிரிவரி யோளே.*

## 55. பல்லி சொல்லுமோ ?

பொருள் தேடவேண்டும் என்று கொண்ட ஆர்வ மிகுதியால், வெளிநாட்டிற்குச் செல்லத் துணிந்து புறப் பட்டான் தலைவன். சுற்றத்தார் பின்வந்து வழிஅனுப்ப வெளிநாட்டிற்குச் சென்று எடுத்த கடமையைச் செய்து பொருள் தேடி முடித்தான். இடைவழியில் நடந்துவந்த காலத்திலும், வெளிநாட்டில் கடமையைச் செய்த காலத்தி லும் அவன் ஒருநாளும் தலைவியை மறந்திருக்க முடிய வில்லை. அவளை நினைந்தபோதெல்லாம் அவள் எவ்வளவு துன்பமுறுவாளோ என்று எண்ணி எண்ணிக் கலங்கினன். கடமை முடிந்த பின்னும், உடனே தலைவியின் துயரை

*339. நரைமுடி நெட்டையார்.

ஆள்வினை - முயற்சி. அசைவு இல் - சோர்வு இல்லாத. வாங்க - இழுக்க. காமம் - காதல். தட்ப - தடுக்க. கவைபடு - இருவகைப் பட்ட. கட்கண் - கண்கண் - கணுவில். அகைய - தீப்பற்ற. ஒருதலை - ஒருபக்கம். படாஅ - சேராத, சேரமுடியாத. உறவி - எறும்பு. நோங்கொல் - நோவாளோ, வருந்துவாளோ. அளியள் - இரங்கத்தக்கவள். பிரிவு அரியோள் - பிரிய முடியாதவள்.

நினைந்தான். "நான் பொருள் தேடி முடித்த நற்செய்தி யை யாரேனும் முன்சென்று அவளுக்கு அறிவித்தால் அவளுடைய துயரம் தீருமே ; அவள் மகிழ்வாளே" என்று ஏங்கினன். பல்லி ஒலிக்கும்போதெல்லாம் அவள் அதைக் கேட்டு நன்மை தீமை அறியும் வழக்கம் உடையவள் ; அந்தப் பல்லியாவது தன் வருகையைப் பற்றி அவளுக்கு அறிவித்துத் துயரத்தைத் தீர்க்குமா என்று எண்ணி ஏங்கினன்.

"வேற்று நாட்டில் சென்று தங்கியிருப்பதை விருப்பத் தோடு மேற்கொண்டு, பெறுவதற்கரிய சுற்றத்தார் வழி யனுப்ப வந்தோம். பொருள் தேடுவதையே நோக்கமாகக் கொண்ட விருப்பம்மிக்க நெஞ்சத்தோடு இங்கே வந்து, இன்றி யமையாத கடமையை முடித்தோம். முடித்தபின் நிறைந்த நெஞ்சத்தோடு திரும்பும் இனிய பயணத்தை அவளுக்குப் பல்லி அறிவுறுத்துமா ? ஊர்க்குத் திரும்பிச் செல்லும் உள்ளத்தோடு யான் அங்கு வருவதை அவளுக்குத் தோற்று விக்கும் குறியாகிய வட்டத்தை நாள்தோறும் எழுதி எழுதி எண்ணுவாள். எழுதிய சுவரும் நனையுமாறு அழுது நீண்ட குளிர்ந்த கண்களிலிருந்து விலகி விழும் கண்ணீர் காதணி யில் தெறிக்க, முன்கையைக் கன்னத்தில் வைத்து ஊன்றி யிருந்து, பிறகு பஞ்சணையின்மேல் பொருந்திக் கிடந்து வருந்துகின்ற அவளுடைய தோளின் துயரத்தைத் தீர்க்கும் மருந்தாகப் பல்லி ஒலித்து அறுவுறுத்துமா ? எதையாவது நினைக்கும் போதெல்லாம் ஒலிக்கும் பல்லி அவளுக்கு அறி வுறுத்துமா ? நிமித்தம் வாய்க்குமா என்று தொழுது கொண்டிருக்கும் அவளுடைய செவியில் கேட்குமாறு (என் வருகையை) அறிவுறுத்துமா ?"

தலைவன் :

வேற்றுநாட்டு உறையுள் விருப்புறப் பேணிப்
பெறலருங் கேளிர் பின்வந்து விடுப்பப்
பொருளகப் படுத்த புகல்மலி நெஞ்சமொடு
குறைவினை முடித்த நிறைவின் இயக்கம்
அறிவுறாஉங் கொல்லோ தானே......
மறுதரல் உள்ளமொடு குறுகத் தோற்றிய
செய்குறி ஆழி வைகல்தோறு எண்ணி
எழுதுசுவர் நனைந்த அழுதுவார் மழைக்கண்
விலங்கிவீழ் அரிப்பனி பொலங்குழைத் தெறிப்பத்
திருந்திழை முன்கை அணல்அசைத்து ஊன்றி
திருந்தணை மீது பொருந்துழிக் கிடக்கை
வருந்துதோள் பூசல் களையும் மருந்தென
உள்ளுதொறு படூஉம் பல்லி
புள்ளுத்தொழுது உறைவி செவிமுத லானே.*

## 56. நோயிலர் ஆக

தலைவன் பொருள் காரணமாக வெளிநாட்டுக்குப் பிரிந்து நெடுங்காலம் ஆகியும் திரும்பாத காரணத்தால் தலைவி வாடி வருந்தினள். அப்போது அவளுடைய நிலையைக் கண்ட ஊரார் பலவாறு பழிச்சொல் கூறித் தலைவனை

*351. பொருந்தில் இளங்கீரனார்.

உறையுள் - தங்கி வாழ்தல். பேணி - போற்றி. பெறலரு - பெறுதற்கு அருமையான. புகல் - விருப்பம். மலி - மிக்க. குறை - இன்றியமையாதது. நிறைவின் - நிறைவு இன். இயக்கம் - இயங்குதல் - பயணம். மறுதரல் - திரும்பல். ஆழி - வட்டமாக எழுதப் படும் குறி. வார் - நீண்ட. அணல் - கவுள் - கன்னம். புள் - பறவை - சகுனம், நிமித்தம். செவி முதல் - செவியில்.

யும் அவளையும் பழித்தார்கள். அவர்கள் எள்ளிக் கூறிய சொற்கள் தோழியின் செவிக்கு எட்டின. தோழி தலைவி யிடம் வந்து ஊரார் எள்ளுவதைக் குறிப்பிட்டு, அவர்கள் மேலும் எள்ளாதிருக்கும் வகையில் வாழவேண்டுமானால் தலைவனை நினைந்து வருந்தாமல் ஆற்றியிருக்க வேண்டும் என வற்புறுத்திக் கூறினாள். அப்போது தலைவி தன் உள் ளம் ஊராரின் சொற்களைப் பெருட்படுத்தவில்லை என்றும், பிரிந்து சென்ற தலைவர் நோய் இல்லாமல் இருக்க வேண்டும் என்பதே தன் கவலை என்றும், போதிய பொருள் கிடைத் திருந்தால் அவர் முன்னமே மீண்டு வந்திருப்பார் என்றும், கிடைக்காத காரணத்தால்தான் இன்னும் சில காலம் நீட்டித்துத் தங்கியுள்ளார் என்றும் எடுத்துரைத்தாள்.

"இந்தப் பழைய ஊரில் பழி இல்லாதவராக இருந்தா லும் பலரைப் புறங்கூறிப் பழிக்கும் வழக்கம் உண்டு. இவ் வாறு அலர் தூற்றுதலை ஒழுக்கமாகவே கொண்டுள்ள (கொடுஞ்சொல் பழகிய) பெண்கள் இகழ்ந்தாலும் இகழட் டும். என் சிறந்த அழகு கெடுவதானாலும் கெடட்டும். நம் காதலர் என்றும் துன்பம் இல்லாதவராக இருக்க வேண்டும். நம் நல்ல அழகு கெடுமாறு தொலைநாட்டுக்குச் சென்று நம் மைப் பிரிந்து வாழும் காதலர் - பொருள் தேடும் கடமை முற்றிலும் கைகூடாத காரணத்தால் இன்னும் சிறிதுகாலம் நீட்டித்து அங்கே தங்கியுள்ள காதலர் - என்றும் துன்பம் இல்லாதவராக வாழ வேண்டும். இதுவே என் ஆவல்."

தலைவி :

**அழியா விழவின் அஞ்சுவரு மூதூர்ப்**
**பழியிலர் ஆயினும் பலர்புறங் கூறும்**
**அம்பல் ஒழுக்கமும் ஆகிய வெஞ்சொல்**

சேரியம் பெண்டிர் எள்ளினும் எள்ளுக ;
...என்,ஆய்நலம் தொலேயினும் தொலேக ; என்றும்
நோயில ராகநம் காதலர்...
நன்னர் ஆய்கவின் தொலேயச் சேய்நாட்டு
நம்நீத்து உறையும் பொருட்பிணிக்
கூடா மையின் நீடி யோரே.*

## 57. அவரிடம் செல்க

பொருள் தேடப் பிரிந்து சென்ற தலேவன் தொலே நாட்டிலேயே நெடுங்காலம் தங்கியிருக்கவேண்டியதாயிற்று. தலேவி அவன்வருகையை எதிர்நோக்கி எதிர்நோக்கி ஏமாற்றமுற்றுக் கலங்கினுள். இன்ன இடத்திலே இன்ன நிலேயிலே உள்ளார் என்பதை அறியவோ வழி இல்லே. இன்ன நாளில் திரும்பி வருவார் என்று அறிவிப்பவர் ஒருவரும் இல்லே. ஆதலின் பலவாறு நினேந்து நினேந்து வருந்தினுள். தன்னேத் தனியே விட்டு அவர் பிரிந்து சென்றது தவறு என்று எண்ணத் தொடங்கினுள். அவர் சென்ற போது அவருடன் தானும் சென்றிருக்க வேண்டும் என்று எண்ணித் தன்னே நொந்துகொண்டாள். இனி வழி என்ன என்று கலங்கினுள். அவர் திரும்பிவருமாறு செய்வதற்கோ வழி இல்லே என்பதை நன்கு உணர்ந்தாள் ஆதலின், இப்

---

*115. மாமூலனுர்.

விழவின் - திருவிழாக்களே உடைய. அம்பல் - மெல்ல அலர் கூறுதல். சேரி - ஊர்ப்பகுதி. ஆய் - ஆய்ந்து போற்றப்பட்ட, சிறந்த. நோய் - துன்பம். நன்னர் - நல்ல. கவின் - அழகு. பொருட் பிணி - பொருள் தேடும் கடமை. கூடாமையின் - கைகூடாத காரணத்தால்.

போதேனும் அவரிடம் தான் சென்று சேர்வதற்கு வழி உண்டோ என எண்ணினாள். இந்த உடலுடன் கூடி வாழ்கின்ற நிலையில் வழி இல்லை என்று உணர்ந்தாள். இறக்க வேண்டும் என்றும், இறந்த பிறகு உயிர் கட்டுப்பாடு இல்லாமல் எண்ணிய இடத்தை அடைய முடியும் ஆகையால் தலைவன் உள்ள நாட்டிற்குச் சென்று அவருடன் இருக்க வேண்டும் என்றும் ஏங்கும் மனநிலை உற்றாள்.

அவளைத் தேற்றுவிப்பதற்காக வந்த தோழி சிலசொல் கூறியபோது, அவள் தோழியை நோக்கிப் பின்வருமாறு கூறினாள் :

"என் தோள்களை மணந்த பிறகு, அருள் இல்லாதவராய் விட்டுப் பிரிந்தார் காதலர். என் துயரத்தையும் மெலிவையும் கண்டு ஊரார் பலவாறு தூற்றிப் பேசுமாறு என்னை விட்டுச் சென்றார். அவர் எங்கு உள்ளார் எனில், பல நாடுகளைக் கடந்து நெடுந்தொலைவில் வாழ்பவராக உள்ளார் என்று பலரும் கூறுகின்றனர். அதனால் துயரமுற்றுச் சோர்ந்த என் நெஞ்சத்தின் துன்பம் நீங்க வழி என்ன ? மரக்கிளையில் கட்டிய கூடு பொலிவிழந்து போகுமாறு தான் செல்லக் கருதிய வேறு இடத்திற்குப் பறவை புறப்பட்டுச் செல்வதுபோல், இந்த உடம்பை இங்கே விட்டு என் உயிர் பிரிந்து, அவர் கடமையைச் செய்யும் இடத்தை நாடிச் செல்ல வேண்டும். அதுதான் வழி. அந்த நிலை வாய்த்தால்தான் அழாமல் வாழ்வதற்கு இயலும்."

தலைவி :

...என் தோள்மணந்து
அழுங்கல் மூதூர் அலர்எடுத் தரற்ற
நல்காது துறந்த காதலர்...

சேயர் என்றலின் சிறுமை உற்றஎன்
கையறு நெஞ்சத்து எவ்வம் நீங்க
அழாஅம் உறைதலும் உரியம்; பராரை
அலங்கல் அஞ்சினைக் குடம்பை புல்லெனப்
புலம்பெயர் மருங்கில் புள்எழுந் தாங்கு
மெய்இவண் ஒழியப் போகிஅவர்
செய்வினை மருங்கில் செலீஇயர்என் உயிரே.*

## 58. தூது வருமா ?

தலைவன் வெளிநாட்டிற்குச் சென்று பிரிந்திருந்த காலத்தில், பிரிவாற்றுமல் வருந்தினுள் தலைவி. அவள் மேனியில் பசலை படர்ந்தது; நெஞ்சம் மிகக் கலங்கியது. அவளுடைய பசலையையும் கலக்கத்தையும் கண்ட அயலார், இவ்வாறு துன்புறுமாறு விட்டுச் சென்ற தலைவியைப் பழிப்பார்களே என்று தோழி அஞ்சினுள். தலைவனிடத்தில் சென்று உரைக்குமாறு யாரையாவது அனுப்பலாமா என்று எண்ணினுள். அது அவனுடைய முயற்சிக்கு இடையூறு ஆகுமோ என அஞ்சினுள். ஆகவே தலைவியைத் தேற்றுவதே தக்கது என உணர்ந்தாள். உணர்ந்து ஏற்றவை கூறினுள். தலைவன் நெடுங்காலம் அங்கே தங்கியிருக்கமாட்டான் என்பதையும், பல மலைகளைக் கடந்து நெடுந் தொலைவு சென்றிருந்தபோதிலும் காலம் கடத்தாமல் திரும்புவான்

---

*113. கல்லாடனர்.

அழுங்கல் - ஆரவாரம். சேயர் - தொலைவில் உள்ளார். சிறுமை - துன்பம். எவ்வம் - துன்பம். பராரை - பருத்த அடிமரம். அலங்கல் - அசைதல். அம் சினை - அழகிய கிளைகள். குடம்பை - கூடு. மருங்கு - பக்கம். புலம் - இடம், நிலப்பகுதி. இவண் - இங்கு. செலீஇயர் - செல்வதாக.

என்பதையும் எடுத்துரைத்துத் தலைவியைத் தேற்ற முயன்ருள். தோழி (பயன்படும் வகையில் நயம் நிரம்பக் கூறிய) இனிய சொற்களைப் போற்றிக் கேட்டாள் தலைவி. அந்தச் சொற்கள் உண்மை ஆக வேண்டுமே, அந்தச் சொற்களின் படியே தலைவன் திரும்பிவர வேண்டுமே என ஏங்கினுள். ஏக்கத்திற்கு இடையே மற்ருென்றும் தலைவி எண்ணினுள். ஒருகால் தலைவன் உடனே திரும்பி வர முடியாத தடை இருக்கலாம் ; மேற்கொண்ட கடமை இன்னும் நிறைவேரு திருக்கலாம் ; அப்போது, திரும்பி வர வேண்டும் என்ற எண்ணம் இருந்தாலும் பயன்படாமற் போகும் ; அவ்வா ருயின் அந்த நிலைமையை ஒருவர் வாயிலாகத் தூது சொல்லி அனுப்பினும் போதுமே ; அதுவே ஆறுதலாகப் பிரிவுத் துன்பத்தைப் பொறுத்திருக்க முடியுமே என்று தோழிக்குக் கூறினுள்.

“ ‘மேனியில் அழகிய பசலை படர வருத்தம் மிக உடையவளாய் அவர்க்குப் பழி வந்து சேரும்படி நடக்கிருய். தூது செல்பவர் கூறும் சொற்களைக் கேட்டதும் அவரால் துயரம் தாங்க முடியுமா ? தூது உரைத்தபின் தேடிய பொருள் கிடைக்காவிட்டாலும் அங்கே நீட்டித்திருக்க மாட்டார். வாழ்க்கையின் பயன் கெடுமாறு எண்ணிக்கொண்டு நீட்டிக்க மாட்டார். மலைவழியில் நெடுந்தொலைவு கடந்து சென் றிருந்த போதிலும் நாட்கள் பல கழியாமலே விரைந்து வருவார் நம்மவர்’ என்று சொல்கிருய். பயன்தரும் கொள்கை யோடு நயம் மாருமல் சொல்கிருய். உன் வாயில் கேட்ட இனிய சொற்கள் உண்மைச் சொற்கள் ஆகுமாறு தலைவர் திரும்பிவந்தால் நன்மையாகும். ஒருகால் வராமல் காதலர் அங்குத் தங்கியிருப்பார் ஆயினும், இங்கே நம் பசலை தீர்வது

எளிதாகும். அதற்கு ஒரு வழி உண்டு. அவர் சென்ற நாட்டில் மேற்கொண்ட கடமை முடிந்த பிறகு மீளும் எண்ணம் உடையவராக இருந்தாலும், திரும்பி வர வேண்டும் என்ற பெரு விருப்பத்தோடு அவரிடமிருந்து ஒரு தூது வரப்பெற்றால் போதும் ; நம் பசலை எளிதில் தீரும்.''

தலைவி :

'ஆக மேனி அம்பசப்பு ஊர
அழிவுபெரிது உடையை ஆகி அவர்வயின்
பழிதலைத் தருதல் வேண்டுதி ; மொழிகொண்டு
தாங்கல் ஒல்லுமோ மற்றே ; ஆங்குநின்
எவ்வம் பெருமை உரைப்பின் செய்பொருள்
வயங்கா தாயினும் பயங்கெடத் தூக்கி
நீடலர் வாழி தோழி...
மலைச்சேண் இகந்தனர் ஆயினும் நிலைபெயர்ந்து
நாளிடைப் படாஅ வருவர் நமர்'எனப்
பயம்தரு கொள்கையின் நயம்தலை திரியாது
நின்வாய் இன்மொழி நன்வாய் ஆக
வருவர் ஆயினோ நன்றே ; வாராது
அவணர் காதலர் ஆயினும் இவண்நம்
பசலை மாய்தல் எளிதுமன் றில்ல
சென்ற தேஎத்துச் செய்வினை முற்றி
மறுதரல் உள்ளத்தர் எனினும்
குறுகுபெரு நசையொடு தூதுவரப் பெறினே.*

*333. கல்லாடனார்.

ஆகம் - உடம்பு. ஒல்லுமோ - முடியுமோ. எவ்வம் - துன்பம். வயங்காது - விளங்காது, நிறைவேறாது. தூக்கி - ஆராய்ந்து, எண்ணி. சேண் - தொலைவு. இகந்தனர் - கடந்து சென்றார். வாய் ஆக - உண்மை ஆகுமாறு. அவணர் - அவ்விடத்தார், அங்கேயே தங்குபவர். மாய்தல் - கெடுதல். தேஎத்து - நாட்டில். மறுதரல் - திரும்பல். குறுகு - அணுகு.

## 59. அறிந்தால் போதும்

தலைவன் பிரிந்து வெளிநாட்டில் இருந்த காலத்தில் தலைவியின் துயரம் தணியுமாறு தோழி பலவாறு தேற்றிவந்தாள். தலைவன் மாறாத அன்பு உடையவன் என்றும், வெளிநாட்டில் கடமையை மேற்கொண் டிருந்தபோதிலும் தலைவியை மறந்து வாழான் என்றும், நீண்ட காலம் அங்கே தங்க மாட்டான் என்றும் அடுத்தடுத்துக் கூறித் தேற்ற முயன்றாள். அவற்றைக் கேட்ட தலைவி தன் துயரத்தின் காரணம் தோழிக்கு விளங்கவில்லையே என வருந்தினாள். "என்னைப் பிரிந்து சென்றாரே என்பதற்காகவா யான் துயரப்படுகிறேன்? இல்லையே. பிரிந்து நெடுங்காலம் ஆயிற்றே, இன்னும் காலம் நீட்டிப்பாரோ என்றும் யான் துன்புறவில்லை. என் தனிமை பொறுக்க முடியாததாக உள்ளதே என்று வருந்துகிறேனா? அதுவும் இல்லையே. யான் படும் துயரத்தின் காரணத்தை உயிர்த்தோழியும் அறியவில்லை என்றால் வேறு யார் அறியப்போகிறார்கள்? யான் எவ்வளவு காலம் தனித்திருந்தாலும் கவலை இல்லை; அவர் அங்கே சிறிது காலம் நீட்டித்துத் தங்கினும் கவலை இல்லை. என் கவலைக்குக் காரணம் வேறு. அவர் சென்ற வழி பொல்லாத கள்வர் வாழும் வழி; செல்வோரிடம் பொருள் இல்லாவிட்டாலும் கொல்ல வேண்டும் என்று கொன்று இன்புறும் கூட்டம் வாழும் வழி. அத்தகைய வழியில் சென்றார் அவர். மீண்டும், அந்தக் கொடிய வழியிலேயே திரும்பி வர வேண்டுமே. சென்று தங்கியுள்ள நாடு எத்தன்மையானதோ? இத்தனை தீங்குகள் மலிந்துள்ள சூழலில், துன்பம் இல்லாமல் அவர் திரும்பி வருவார் என்று உறுதியாகத் தெரிந்தால் போதுமே; யான் துயருற மாட்டேன்" என்று எண்ணினாள். தோழிக்குத் தன் துயரின் காரணத்தைக் கூறினாள்:

"'சென்று அங்கே நெடுங்காலம் தங்கியிருக்கமாட்டார்; அவர்பிரிவை நினைந்து வருந்துவதை விடுக' என்கின்றாய் தோழி! அம்பு தொடுப்பதன் பொருத்தத்தைக் காண்பதற்காக, வழிப்போக்கர் பொருள் இல்லாதவரே ஆயினும் அவர்மேல் அம்பு எய்து கொன்று பறவைகளுக்கு உணவாக்கும் அறிவில்லாத ஆறலைகள்வர் செருக்கோடு வாழும் வழிகளை உடைய பாலையை - அஞ்சத்தக்க தன்மை உடைய கொடிய பாலையை - கடந்து சென்ற தலைவர் துன்பம் உறாதவராய்த் திரும்பி வருவார் என்று அறிய முடியுமானால், தோழி, என் கண்கள் அழ மாட்டா. பொல்லாத அவ்வழியில் துன்பம் இன்றி வந்து சேர முடியுமா என்பதை நினைத்துத்தான் வருந்துகிறேன்:"

தலைவி :

*சென்று நீடுநர் அல்லர் அவர்வயின்*
*இனைதல் ஆனாய் என்றிசின் இகுளை!*
*அம்புதொடை அமைதி காண்மார் வம்பலர்*
*கலன்இலர் ஆயினும் கொன்றுபுள் ஊட்டும்*
*கல்லா இளையர் கலித்த கவலை...*
*அஞ்சுவரு மரபின் வெஞ்சுரம் இறந்தோர்*
*நோயிலர் பெயர்தல் அறியின்*
*ஆழல மன்னே தோழிஎன் கண்ணே.**

*375. இடையன் சேந்தங் கொற்றனார்.

நீடுநர் - நீடித்திருப்பார். இனைதல் - வருந்துதல். ஆனாய் - அமைக, நிறுத்துக. இகுளை - தோழி. தொடை - தொடுத்தல். அமைதல் - அமையுமாறு, பொருந்துமாறு. காண்மார் - காண. வம்பலர் - புதிய வழிப்போக்கர். கலன் - அணிகலன் - பொருள். புள் - பறவை - கழுகு முதலியன. கல்லா - வழிபறித்தல் தவிர வேறொன்றும் அறியாத. கலித்த - செருக்குக் கொண்ட. கவலை -

## 60. நண்டே! நீ சொல்

பிரிவாற்ருமை அளவு கடந்து போயிற்று. அப்போது தலைவி பித்துப் பிடித்தவள்போல் கலங்கிப் பலவாறு வருந்தினுள். கடற்கரையில் தனியே உலவித் துயருற்றிருந்த அவள், கடற்கரைச் சோலையைக் கண்டு, என் துயரத்தை இந்தச் சோலை அவர்க்குக் கடிந்து கூறி உணர்த்தாதோ என்று எண்ணினுள். அருகே இருந்த உப்பங் கழியைப் பார்த்ததும், இந்த உப்பங்கழியாவது அவரிடம் சென்று என் துயரத்தைச் சொல்லாதோ என்று ஏங்கினுள். எதிரே இருந்த புன்னை மரத்தைக் கண்டதும், அந்த மரமாவது சென்று மொழியாதோ என்று நைந்தாள். கண்ட இவை யாவும் இடம் விட்டுப் பெயராமல் இருக்க, நண்டு ஒன்று சுறுசுறுப்பாக ஓடித் திரிவதைக் கண்டதும், தலைவிக்கு அதனிடம் நம்பிக்கை ஏற்பட்டது. நண்டைப் பார்த்து "நீயாவது தூது சென்று துயர் உரைக்க வேண்டும்" என்ருள்.

"இந்தக் கடற்கரைச் சோலையும் அவரிடம் சென்று கடிந்துகூறி உணர்த்தாது; உப்பங்கழியும் கூருது; வண்டுகள் ஒலிக்கும் நறுமலர்களை உடைய புன்னையும் மொழியாது. உன் ஒரு துணை அல்லாமல் வேறு துணை எனக்கு இல்லை. தலைவருக்கு நீயே சொல்லுதல் வேண்டும். நண்டே! 'நள்ளிரவில் பலநாளும் உன்னுடைய மிக்க துயரத்தைப் போக்கிக் களவொழுக்கத்தில் உனக்கு உதவி புரிந்த ஒருத்தி இப்போது நீ பிரிந்த பிரிவால் ஏற்பட்ட தன் துயரத்தை

---

பிரியும் வழி. அஞ்சுவரு - அச்சம் தோன்றும். மரபின் - தன்மை உடைய. நோய் - துன்பம். பெயர்தல் - திரும்புதல். ஆழல - கண்ணீரில் ஆழ்ந்துபோகா, அழா.

எவ்வாறு கடப்பாள்' என்று நீயே அவருக்குச் சொல்லுதல் வேண்டும்'' என்றாள்.

தலைவி :

கானலும் கழறாது ; கழியும் கூறாது ;
தேன் இமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியாது ;
ஒருநின் அல்லது பிறிதுயாதும் இலனே ;
...துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமால் அலவ !...
...நள்ளென் யாமத்து
நின் உறு விழுமம் களைந்தோள்
தன் உறு விழுமம் நீந்துமோ எனவே.*

## 61. நெஞ்சு தழுவியதோ ?

தலைவன் மேற்கொண்ட கடமை முடிந்தது. அந்தக் கடமையைச் செய்து முடிப்பதற்காகத் தன் வீட்டை விட்டுத் தன் அருமைத் துணைவியைப் பிரிந்து பல திங்கள் வெளிநாட்டில் தங்கியிருந்தான். கடமை முடிந்ததும், தன் ஊர்க்குத் திரும்பிச் செல்ல வேண்டும் என்ற ஆர்வம் மிகுந்தது ; தனியே இருந்து வருந்துமாறு விட்டுப் பிரிந்துவந்த துணைவியை விரைந்து சென்று காண வேண்டும் என்ற ஆவல் மிகுந்தது.

---

*170. மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார்.

கானல் - கடற்கரைச் சோலை. தேன் இமிர் - வண்டு ஒலிக்கும். பிறிது - வேறு (துணை). துறைவன் - நெய்தல் நிலத் தலைவன். அலவ - நண்டே ! உறு - மிக்க. விழுமம் - துன்பம். நீந்துமோ - கடக்க முடியுமோ ?

விரைவாக ஓடுவதில் வல்ல குதிரைகள் பூட்டிய தேரைச் செலுத்தினான். சிறிது நேரமும் தயங்கி நிற்காமல் தேர் விரைந்து வந்துகொண்டிருந்தது. கதிரவன் மேற்கே சாயத் தொடங்கினான். ஊர் இன்னும் தொலைவிலேயே இருந்தது. ஆயினும் தலைவன் சோர்வுறவில்லை; விரைந்து செலுத்தியபடியே வந்தான். அவனுடைய நெஞ்சமோ அவனுக்குமுன் விரைந்து தலைவியை நாடியது. நெஞ்சின் விரைவு மிகுதி; தேரின் வேகம் நெஞ்சின் வேகத்தை எட்ட முடியாது. தேர் எவ்வளவுதான் விரைந்து சென்றாலும், நிலத்தின் நெடுவழியில் சக்கரம் உருண்டு உருண்டு சென்றே ஆகவேண்டும். நெஞ்சத்திற்கு இத்தகைய முயற்சி இல்லை. தலைவியை நினைந்தது; உடனே அவளிடம் எய்தியது. இதைத் தேரின்மீது இருந்த தலைவன் எண்ணினான். "என்ன இது! விரைந்து சென்று காண்பதற்கே இந்த முயற்சி! ஆயினும் என் நெஞ்சின் வேகமே வேகம்! அது என்னிடம் இருந்தது; இப்போது அந்த ஊரில் வாழும் என் துணைவியிடம் சென்று சேர்ந்துவிட்டதே" என வியந்தான். "நான் சென்றால் என் வரவை உடனே அவள் உணர்ந்து மகிழ்வாள். ஆயின் என் நெஞ்சம் சென்று பயன் என்ன? அதன் வருகையை அவள் எப்படி அறிந்துகொள்ளப் போகிறாள்? என் நெஞ்சம் அவளிடம் வந்திருப்பதை அவள் உணரப் போவதில்லை. இன்னும் வரவில்லையே என்ற ஏக்கத்தால் தனிமைத் துயர் உழந்து வருந்திக்கொண் டிருப்பாள். சிறப்பு மிகுந்த அந்தப் பெரிய வீட்டின் ஒரு மூலையில் சோர்ந்திருப்பாள். பக்கத்தே பல்லி சொல்லும்போதெல்லாம் வாழ்த்திக் கொண்டிருப்பாள். மாலைப்பொழுது நெருங்க நெருங்க

என் வரவை எதிர்பார்த்து ஏங்கும் ஏக்கம் மிகுதியாகும். கன்றுகள் வீடு நோக்கித் திரும்பும் காட்சி அவளுக்கு மாலைக் காலத்தை நினைவூட்டும். அவள் என் வரவை எதிர் பார்த்து நின்றுகொண்டிருப்பாள். இந்த என் நெஞ்சம் என்ன செய்யும்? (நான் முன்னெல்லாம் அவள் அறியாமல் சென்று அவளுடைய கண்ணை மூடித் திடுக்கிடச் செய்து விளையாடுவேன் அல்லனோ? அதுபோல் என் நெஞ்சம் இப் போது செய்யக் கூடும்.) கைகளைக் கவித்தவாறே நெஞ்சம் அவளை நெருங்கிச் சென்று அவளுடைய கண்களைப் புதைக் கும். பின்னலைத் தொடும். யார் என்று அறிவதற்காக அப் போது அவள் தன் அருமைக் கைகளால் தடவுவாள். அந்தக் கைகள் தடவிப் பொருந்துமாறு என் நெஞ்சம் அவளைத் தழுவியதோ?'' என்று எண்ணி உருகினான்:

தலைவன்:

ஞாயிறு படினும் ஊர்சேய்த்து எனாது
துனைபரி துரக்கும் துஞ்சாச் செலவின்
எம்மினும் விரைந்துவல் எய்திப் பன்மாண்
ஓங்கிய நல்இல் ஒருசிறை நிலைஇப்
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
கன்றுபுகு மாலை நின்றோள் எய்திக்
கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை அன்ன பின்னகம் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாள்நுதல்
அந்தீக் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறநசைஇச் சென்றஎன் நெஞ்சே!*

*9. கல்லாடனார்.

சேய்த்து - தொலைவில் உள்ளது. துனை பரி - விரைந்து ஓடும் குதிரை. துஞ்சாச் செலவு - சோர்வடையாத பயணம். ஒரு

## 62. ஊரில் சேர்த்தாய்

தலைவன் போர்க்கடமை முடிந்ததும் ஊர்க்குத் திரும்ப விரைந்தான். தேர்ப்பாகனை நோக்கி, "விரைந்து செலுத்துக" என்றான். அப்போது அவன் நெஞ்சம் ஊரில் தனித்து வருந்தும் தலைவியை நினைந்து உருகியது. நரை விரவிய கூந்தலை உடைய முதிய செவிலித்தாயர் தலைவியைப் பலவாறு பாராட்டித் தேற்றிக்கொண் டிருப்பர் என்றும், பொன்னாலாகிய கிண்கிணி அணிந்த அழகிய அடிகளால் மணல் பரந்த முற்றத்தில் வடு ஏற்படுமாறு இளைய தோழியர் விளையாடுவர் என்றும், அவர்களின் விளையாட்டால் கலைந்து (வீட்டில் வாழும்) ஆண்புறா துணையோடு சிறிது சிறிது பறந்து மேலே எழும் என்றும், இந்தக் காட்சியைக் காணுந் தோறும் தலைவி தன்னை நினைந்து வருந்துவாள் என்றும், அவள் தனிமையால் கலங்கும் துன்பம் நீங்குமாறு விரைந்து செல்ல வேண்டும் என்றும், வேந்தன் கட்டளைப்படி அமைந்த தொழிலோடு வேற்று நாட்டில் வந்து தங்கி மேற்கொண்ட கடமையை முடித்துவிட்டோம் ஆகையால் இனிக் காலம் தாழ்க்காமல் விரைந்து செல்ல வேண்டும் என்று எண்ணினான்.

தலைவன் :

**நரைவிரா வுற்ற நறுமென் கூந்தல்**
**செம்முது செவிலியர் பலபா ராட்டப்**
பொலன்செய் கிண்கிணி நலம்பெறு சேவடி
**மணல்மலி முற்றத்து நிலம்வடுக் கொளாஅ**

---

சிறை - ஓர் இடத்தே. நிலைஇ - நின்று. பாங்கர் - பக்கம். புதையா - புதைத்து. பிடிக்கை அன்ன - பெண் யானையின் கை போன்ற. தோய்ந்தன்று - தோய்ந்தது, தழுவியது.

*மனை உறை புறவின் செங்கால் சேவல்*
*துணையொடு குறும்பறை பயிற்றி மேற்செல*
*விளையாடு ஆயத்து இளையோர்க் காண்தொறும்*
*நம்வயின் நினையும் நன்னுதல் அரிவை*
*புலம்பொடு வதியும் கலங்கஞர் அகல*
*வேந்துறு தொழிலொடு வேறுபுலத்து அல்கி*
*வந்துவினை முடித்தனம் ஆயின்...*

எண்ணியவாறே தேர்ப்பாகனிடம் கூறினன். "வேந்தன் கட்டளைப்படி அமைந்த தொழிலுக்காக வேற்று நாட்டில் தங்கிக் கடமையை முடித்தோம் ஆகையால், நீயும் விரைந்து தேர் செலுத்துக. பந்தியில் (கட்டும் இடத்தில்) தொழில் இல்லாமல் நிற்பதை வெறுத்த குதிரைகளை - போர்த் தொழிலில் பழகிய குதிரைகளை - பூட்டிய பெரிய தேரின் சக்கரம் சென்று சிதைப்பதால், நுண்ணிய மின்னல் கொடி போல் வழியில் உள்ள பசும் பயிர்கள் அறுபட்டுச் செல்லுமாறு தேரைச் செலுத்துக. செம்முல்லை வெண்முல்லையுடன் சேர்ந்து குளிர்ச்சியுற நறுமணம் கமழும் மலர் நிறைந்த காட்டுவழியில் நெடுவழி எல்லாம் பிற்படுமாறு செலுத்துக" என்றான்.

தலைவன் :

*வேந்துறு தொழிலொடு வேறுபுலத்து அல்கி*
*வந்துவினை முடித்தனம் ஆயின் நீயும்*
*பணைநிலை முனைஇய வினைநவில் புரவி*
*இழைஅணி நெடுந்தேர் ஆழி உறுப்ப*
*நுண்கொடி மின்னின் பைம்பயிர் துமியத்*
*தளவம் முல்லையொடு தலைஇத் தண்ணென*
*வெறிகமழ் கொண்ட வீ ததை புறவின்*
*நெடியிடை பின்படக் கடவுமதி...*

தலைவன் ஏவியவாறே தேர்ப்பாகன் தேரைச் செலுத்தினான். காலம் தாழ்க்காமல் விரைந்து செலுத்தினான். குதிரைகளின் மனம் அறிந்து செலுத்தி ஊரின் அருகே கொண்டுவந்துவிட்டான். அவ்வாறு விரைந்து வந்து ஊரை அடைந்ததை அறிந்த தலைவன் வியந்தான் ; மகிழ்ந்தான் ; நன்றிகூறும் வகையில் தேர்ப்பாகனைப் பாராட்டினான்.

"செலுத்துக என்று யான் சொல்லியவுடனே காலம் நீட்டிக்காமல் விரைந்து, தார்மணி அணிந்த குதிரைகளின் மனம் அறிந்து செலுத்தி ஊர்க்கு அண்மையில் கொண்டு வந்து சேர்த்துவிட்டாய். யான் மகிழ்ச்சி அடையுமாறு செய்தாய்" எனப் பாராட்டினான்.

தலைவன் :

*...கடவுமதி என்றுயான்*
*சொல்லிய அளவை நீடாது வல்லெனத்*
*தார்மணி மாஅறி வுறூஅ*
*ஊர்நணித் தந்தனை உவகையாம் பெறவே.**

---

*254. மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்.

விராவுற்ற - கலந்த. குறும் பறை - சிறிதளவு பறத்தல். நன்னுதல் அரிவை - அழகிய நெற்றியை உடைய மங்கை. புலம்பு - தனிமைத் துயர். வதியும் - தங்கியுள்ள. அஞர் - துன்பம். புலத்து - நாட்டில். அல்கி - தங்கி. பணை - பந்தி - குதிரை கட்டும் இடம். நிலை - நிற்றல். முனைஇய - வெறுத்த. வினைநவில் - போர்த் தொழிலில் பழகிய. ஆழி - சக்கரம். துமிய - சிதைய, அறுபட. தளவம் - செம்முல்லை. தலைஇ - சேர்ந்து. வெறி - நறுமணம். வீ - பூ. ததை - செறிந்த. நெடியிடை - நெடுவழி. வல்லென - விரைவாக. தார்மணி - மணிமாலை. அறிவுறூஅ - அறிந்து. நணி - அணிமையில்.

## 63. காற்ருே ? மனமோ ?

போர்க்களத்திற்குச் சென்றிருந்த தலைவன், அங்கு மேற்கொண்ட கடமை முடிவதை எண்ணிக் காத்திருந்தான். கடமையும் முடிந்தது ; முடிந்த அன்றே தேர்ப்பாகனை நோக்கித் தேர் பூட்டுமாறு ஏவினன். விரைந்து திரும்பிச் செல்ல வேண்டும் ; ஊரில் வருந்திக் கிடக்கும் துணைவியை விரைவில் கண்டு மகிழ்விக்க வேண்டும் ; அவளுடைய துயரை உடனே தீர்க்க வேண்டும் என்ற எண்ணமே அப் போது அவன்மனத்தில் குடிகொண் டிருந்தது. அதைத் தேர்ப்பாகன் நன்கு உணர்ந்தான். குதிரைகளின் மனத்தை அறிந்து செலுத்துவதில் தேர்ச்சி மிக்கவன் அந்தத் தேர்ப் பாகன் ; ஆதலின், எவ்வளவு விரைவாகச் செலுத்த முடியுமோ அவ்வளவும் செலுத்தினன். தேரில் இருந்த தலைவன், குதிரைகளின் ஆற்றல், வழியின் அருமை, செல்லும் விரைவு முதலிய எவற்றையும் நினையாமல், தன் துணைவி வீட்டி லிருந்து வருந்தும் வருத்தம் ஒன்றையே நினைந்து, தன்னையும் மறந்தவனாய் இருந்தான். தேர் ஊரை அணுகியது ; வீட்டையும் அடைந்தது. தேர்ப்பாகன் அறிவித்த பிறகே தலைவன் வீட்டை அடைந்தோம் என்பதை அறிந்தான் ; அறிந்ததும் மருண்டான் ; வியந்து தேர்ப்பாகனைப் பாராட்டினன் ; நன்றியுணர்வோடு அவனை மார்புறத் தழுவிக்கொண்டு வீட்டினுள் அழைத்துச் சென்ருன் ; தலைவி எதிர்பாரா மகிழ்ச்சியுற்று விருந்துபெற்றுக் களித்தாள். இந்தக் காட்சியைத் தெருவிலிருந்து கண்டவர்கள் வியந்து கூறினர்கள்.

" 'பாசறையில் இருந்த வேந்தன் அரிய போர்க் கடமையை முடித்தவுடனே, விரும்பிய காதலோடு யானும் பெரிய தேரில் ஏறியதை அறிவேனே அல்லாமல், தேர் வந்த

தன்மையை நன்கு அறியேன். இந்தச் சிற்றூரில் காதலி யின் வீட்டெதிரே தேரை நிறுத்தி 'இறங்குங்கள்' என்று சொன்ன உன் சொல்லைக் கேட்டு மருண்டு போனேன். வானில் இயங்கும் தன்மை உடைய காற்றையே குதிரை களாகப் பூட்டிச் செலுத்தினயோ ? அல்லது, குதிரைகளின் வடிவாக உன் மனத்தையே பூட்டினயோ ? சொல்லுக தேர்ப்பாகனே !' என்று அவனைத் தன் மலைபோன்ற மார்பில் இறுகத் தழுவிக்கொண்டான் ; தழுவி, வீட்டினுள் அழைத் துச் சென்ருன் தலைவன். விருந்தோம்பும் சிறப்பைப் பெற்ருள் வீட்டினுள் இருந்த தலைவி.''

கண்டோர் :

'இருந்த வேந்தன் அருந்தொழில் முடித்தெனப்
புரிந்த காதலொடு பெருந்தேர் யானும்
ஏறியது அறிந்தன்று அல்லது வந்தவாறு
நனியறிந் தன்ருே இலனே ;
சீறூர் ஆங்கண்
மெல்லியல் அரிவை இல்வயின் நிறீஇ
இழிமின் என்றநின் மொழிமருண் டிசினே ;
வான்வழங்கு இயற்கை வளிபூட் டினையோ ?
மான்உரு வாகநின் மனம்பூட் டினையோ ?
உரைமதி வாழியோ வலவ' எனத்தன்
வரைமருள் மார்பின் அளிப்பனன் முயங்கி
மனைக்கொண்டு புக்கனன் நெடுந்தகை ;
விருந்தேர் பெற்றனள் திருந்திழை யோளே.*

*384. ஒக்கூர் மாசாத்தியார்.

புரிந்த - விரும்பிய. அறிந்தன்று - அறிந்தது. அரிவை - பெண் (இங்கே, தலைவி.) நிறீஇ - நிறுத்தி. இழிமின் - இறங் குங்கள். மருண்டிசின் - மருண்டேன். வான் - வானம், ஆகாயம். வளி - காற்று. மான் - குதிரை. மதி : அசை. வரை மருள் -

## 64. உடம்புதான் அங்கே

பொருள் தேடி வருவதற்காக வடநாட்டிற்குப் பிரிந்தான் தலைவன். பிரியுமுன் தன் மனைவியைத் தேற்றிப் பல மொழிகள் கூறினான். " சில திங்கள் எப்படியாவது பொறுத்திரு. விரைந்து வந்துவிடுவேன்" என்றான். "யான் பொருள் தேடுவதற்காகப் பிரிந்தபோதிலும் ஒரு நாளும் உன்னை மறக்க மாட்டேன். மறந்தால் உயிர் வாழ மாட்டேன்" என்றான்.

"சோர்வு அடையாத ஊக்கம் மேன்மேலும் மிகுவதால் பொருள் சேர்க்கும் கடமையை மேற்கொண்டு வெளிநாட்டுக்குப் போகின்றேன். போனபோதிலும் அங்கு உன்னை நினைக்காமல் கழியும் நாள் இருக்குமானால், அன்றே யான் ஒரு சிறிதும் உயிர் வாழேன்" என்பதே அவன் கூறிய மொழி.

> தாழ்வில் உள்ளம் தலைத்தலைச் சிறப்பச்
> செய்வினைக்கு அகன்ற காலை...
> நினையாது கழிந்த வைகல் எனையதூஉம்
> வாழலென் யான்...

இவ்வாறு கூறியதைக் கேட்ட தலைவி எவ்வாறோ துயரத்தைத் தாங்கிக்கொண்டு தலைவனுக்கு விடைகொடுத்து அனுப்பினாள். தலைவனும் வெளிநாட்டில் வாணிகம் செய்து பொருள் ஈட்டினான். பிறகு தன் ஊரை நாடித் திரும்பினான். அதுவரையில் தலைவியும் அவனை நினைந்து வருந்தியவாறே நாட்களைக் கழித்து அவன்வரவை எதிர்பார்த்து ஏங்கியிருந்தாள்.

---

மலை போன்ற. நளிப்பனன் - செறித்தனன் - செறித்து, இறுக. ஏர் - அழகு - சிறப்பு. திருந்து இழையோள் - திருந்திய அணிகலன் அணிந்தவள்.

தலைவனும் வந்தான். தலைவி அவனைக் கண்டதும் மகிழ்ந்தாள். ஆயினும், அவன் தன்னை மறந்தே காலம் கழித்ததாகவும், தான் மட்டும் அவனை மறக்க முடியாமல் வருந்தியதாகவும் எண்ணினாள். "உன்னை மறந்து வாழும் நாளில் யான் உயிர் வாழமாட்டேன் என்று அன்று தேறுதல் சொல்லிவிட்டுப் பிரிந்தீர்களே. பணிவுடன் அழகான நல்ல சொற்களைச் சொன்னீர்கள். ஆனால் என்னைப் பிரிந்து சென்றபின், மறந்துவிட்டீர் என்று கருதுகின்றேன்" என்று வருத்தக் குறிப்போடு கூறினாள்.

இவ்வாறு அவள் கூறியபோது தலைவன் அவள்முகத்தில் இயல்பாக விளங்கிய இனிய புன்முறுவல் இல்லாமற் போனதைக் கண்டான். அவள் உண்மையாகவே அவ்வாறு எண்ணிக் கேட்டதை அறிந்து, அவள் நம்புமாறு தான் உற்ற துன்பத்தையும் அவளை எந்நாளும் மறவாமல் நினைத்ததையும் எடுத்துக் கூறினான்.

"உன் இனிய முறுவலும் கெடுமாறு இவ்வாறு கேட்கிறாயே! நான் ஏன் உன்னை விட்டுப் பிரிந்தேன்? பொருள் இல்லாத வறிய வாழ்க்கை வாழ்ந்தால் பிறர் எள்ளிப் பேசும் பேச்சைப் பொறுக்க முடியாமையால்தான் பொருள் தேடும் விருப்பத்தோடு சென்றேன். அதனால்தான் கொடிய பாலை வழியைக் கடந்து செல்லத் தொடங்கினேன். வெப்பம் மிகுந்து அடங்காமல் தீப் பரந்த பாழ்நிலத்தில் மெலிந்து வாடிய யானைகள், நீர் உள்ள இடம் அறியாமல் பேய்த் தேரைக் கண்டு நீர் என்று மயங்கி ஓடிக் களைத்து இறுதியில் (நீரற்ற ஆற்றில் ஓய்ந்து கிடக்கும் ஓடம்போல்) வழியில் சோர்ந்து தங்கும் கொடிய பாலை அது. நினைப்பவர்கள் நடுங்கும்படியான வழி அது. உன்னைப் பிரிந்து அத்தகைய கொடிய பாலையைக் கடந்து சென்றேன். துணிந்து

கடமையை மேற்கொண்ட பிறகு எக்காரணத்தாலும் பின் வாங்குதல் கூடாது என்ற நாண உணர்ச்சியே என்னைக் கட்டுப்படுத்தி அங்கே தங்கியிருக்கச் செய்தது. ஆயினும் அந்தச் சிறந்த கடமையை முடிப்பதற்காக என் உடம்பு மட்டும் அங்கே இருந்ததே தவிர, என் பேதை நெஞ்சம் இங்கே உன்னிடம்தான் இருந்தது" என்றான்.

தலைவன் :

> தாழ்வில் உள்ளம் தலைத்தலைச் சிறப்பச்
> செய்வினைக்கு அகன்ற காலை...
> நினையாது கழிந்த வைகல் எனையதூஉம்
> வாழலென் யான்எனத் தேற்றிப் பன்மாண்
> தாழக் கூறிய தகைசால் நன்மொழி
> மறந்தனிர் போறிர் எம்எனச் சிறந்தநின்
> எயிறுகெழு துவர்வாய் இன்னகை அழுங்க
> வினவல் ஆனாப் புனையிழை ! கேள்இனி ;
> வெம்மை தண்டா எரியுகு பறந்தலைக்
> கொம்மை வாடிய இயவுள் யானை
> நீர்மருங்கு அறியாது நெறிமுதல் உணங்கும்
> உள்ளுநர்ப் பனிக்கும் ஊக்கருங் கடத்திடை
> எள்ளல் நோனாப் பொருள்தரல் விருப்பொடு
> நாணுத் தளையாக வைகி மாண்வினைக்கு
> உடம்பு ஆண்டு ஒழிந்தமை அல்லதை
> மடம்கெழு நெஞ்சம் நின்னுழை யதுவே.*

*29. வெள்ளாடியனார்.

தலைத்தலை - மேன்மேலும். வினை - கடமை. போறிர் - போலுதிர் - போல இருக்கின்றீர். எயிறு - பல். துவர் - பவளம். அழுங்க - கெட. தண்டா - தணியாத. பறந்தலை - பாழ் இடம். கொம்மை - பெருமை. இயவுள் - வழி. கடம் - பாலைநிலம். நோனா - பொறுக்காத. தளை - கட்டு. நின்னுழையது - உன்னிடத்தது.

## 65. வறுங்கை காட்டியது

பொருள் காரணமாகப் பிரிந்து சென்ற தலைவன் வெற்றியோடு திரும்பிவந்தான். அவனை ஆவலுடன் வரவேற்ருள் தலைவி. ஆயின் சிறிது நேரத்தில் அவள்முகத்தில் இருந்த புன்முறுவல் மாறியது; ஏதோ துன்பம் முகத்தில் படர்ந்தது. தலைவனை நோக்கிக் கேட்டாள் : "நெடுவழி எல்லாம் கடந்து சென்றீரே ! அப்போது என்னைப் பிரிந்துவிட்டுச் சென்றதற்காக நொந்து பழித்த நெஞ்சத்தோடு என்னை நினைத்ததும் உண்டோ ?" என்று கேட்டாள். அந்தச் சொற்கள் அன்புடையவர் சொல்லும் சொற்களாக இராமல், அயலார் சொல்வனபோல் இருந்தன :

தலைவன் :

"ஒழித்தது பழித்த நெஞ்சமொடு வழிப்படர்ந்து
உள்ளியும் அறிதிரோ எம்" என யாழநின்
முள்எயிற்றுத் துவர்வாய் முறுவல் அழுங்க
நோய்முந் துறுத்து நொதுமல் மொழியல்...

தலைவன் பிரிந்து சென்ற காலத்தில் அவள் பிரிவாற்ருமல் வருந்திய வருத்தமே இவ்வாறு அவளுடைய நெஞ்சத்தைக் கலக்கியது. அவளுடைய அன்பு மாறவில்லை. ஆயின் தலைவன் கல்நெஞ்சத்தோடு தன்னைப் பிரிந்து சென்ருன் என்றும், தன்போல் நெக்குருகும் நெஞ்சம் உடையவனுக இருந்திருந்தால் விட்டுப் பிரிந்திருக்க முடியாது என்றும் அவள் எண்ணிஞள். அதனுலேயே அவனுடைய வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தவள், அவனை அன்புடன் வரவேற்றபின் இவ்வாறு கேட்டாள்.

அவள் உற்ற துன்பம் எத்தகையது என்பதைத் தலைவன் இதன் வாயிலாக உணர்ந்தான். வேறு வழி இல்லை.

அவள்பொருட்டாகத் தான் உற்ற துயரத்தை அவளுக்கு உணர்த்த வேண்டும் என்று முனைந்தான். "உன்னை மறக்கவும் முடியுமோ?" என்றான்.

துணைவியுடன் இனிது வாழும் வாழ்க்கையை விட்டுப் பாலைவழியில் தான் பட்ட துன்பத்தை உணர்த்த எண்ணி, அந்த வழியில் ஒரு நாள் நிகழ்ந்ததை எடுத்துரைத்தான். "நெடுந்தூரம் கடந்து சென்றேன். பாலைவழியில் மூங்கில்கள் ஒன்றோடொன்று உராய்ந்து தேய்ந்த காரணத்தால் ஏற்பட்ட தீப்பொறி, உலர்ந்த சருகுகள் எரியப் பற்றிக்கொண்டு உயரத்தில் இருந்த உலர்ந்த ஊகம்புல்லின்மேல் காற்றால் சுழன்று சென்று பரவியது. உடனே காடு முழுதும் பற்றிய பெருந்தீயாகிக் காற்றின் வழியெல்லாம் ஓடியது. வணிகர் கூட்டம் ஒன்று வந்திருந்தது. அந்தக் கூட்டத்தோடு நானும் இருந்தேன். தீப் பரவிய காரணத்தால் வழி தெரியாமல் கலங்கி அலறினோம். புலியைக் கண்டு அஞ்சி மயங்கிய யானைக் கூட்டம் ஒன்று அங்கும் இங்கும் ஓடியது. அத்தகைய பெரிய காட்டில் எவ்வளவோ துன்புற்றேன். அப்போது மாலைக் கதிரவனும் மறையும் நேரம். கதிரவனும் மயங்கி மறைந்துவிட்டான். இவ்வளவு துன்பங்களைப் பட்டுச் செல்லவேண்டி யிருந்தது" என்றான்.

தலைவன் :

**...சேண் இகந்து**
**ஒலிகழை பிசைந்த ஞெலிசொரி ஒண்பொறி**
**படுஞெமல் புதையப் பொத்தி நெடுநிலை**
**முளிபுல் மீமிசை வளிசுழற் றுறூஉக்**
**காடுகவர் பெருந்தீ ஓடுவயின் ஓடலின்**
**அதர்கெடுத்து அலறிய சாத்தொடு ஒராங்கு**
**மதர்புலி வெரீஇய மையல் வேழத்து**

*இனம்தலை மயங்கிய நனந்தலைப் பெருங்காட்டு*
*ஞான்றுதோன்று அவிர்சுடர் மான்றுற் பட்டென*

அத்தகைய துன்பநிலையிலும் தன் நினைவெல்லாம் தலைவியின் மீதே இருந்தது என்று தொடர்ந்து கூறினான். "அந்த நிலையிலும் யான் உன்னையே நினைந்தேன். அந்தக் காட்டு வழியில் மேலும் செல்ல முடியாமல் தங்கினோம். யான் சிறிது கண் அயர்ந்து உறங்கினேன். அப்போது கண்ட கனவில் நீ ஒரு பெண்மான் போல் வந்து தோன்றினாய். கழன்று விழும் வளையல்களை இறுகச் செறித்தபடியே குனிந்த பார்வையோடு நிலத்தைக் காலால் கிளறிக்கொண்டு நின்றாய். யான் உன்னைக் கண்டு, "காதலி! நான் இவ்வாறு வருந்தித் துன்புறும் நிலையில் உள்ளபோது உனக்கு என்னிடம் ஊடல் எப்படித் தோன்றியது?" என்று உன் நெற்றியைத் தடவிக் கூந்தலைக் கோதினேன். அந்த நல்ல நேரத்தில் கனவு கலைந்து விழித்தேன். வெறுங்கை மூடிக் காட்டுவதுபோல் அந்தக் கனவு என்னை ஏமாற்றியது. அத்தகைய பொய்க் கனவு என் ஏக்கத்தைப் பெருக்கிவிட்டது. நான் அப்போது ஏங்கிய வருத்தத்தை என்ன என்று சொல்வது? அதை நீ கருதவில்லை. அதனால்தான் என்னிடம் வெறுப்பு உடையவளாய் இவ்வாறு பேசுகிறாய்" என்று கூறி அவள் உணருமாறு செய்தான் :

தலைவன் :

*...நிற்படர்ந்து உள்ளி*
*அருஞ்செலவு ஆற்றா ஆரிடை ஞெரேரெனப்*
*பரந்துபடு பாயல் நவ்வி பட்டென*
*இலங்குவளை செறியா இகுத்த நோக்கமொடு*
*நிலம்கிளை நினைவினை நின்ற நிற்கண்டு*
*இன்னகை! இனையம் ஆகவும் எம்வயின்*

ஊடல் யாங்குவந் தன்றுஎன யாழநின்
கோடுஏந்து புருவமொடு குவவுநுதல் நீவி
நறுங்கதுப்பு உளரிய நன்னர் அமையத்து
வறுங்கை காட்டிய வாய்அல் கனவின்
ஏற்றுஏக் கற்ற உலமரல்
போற்றாய் ஆகலின் புலத்தியால் எம்மே.*

## 66. உன் மகன்தாய்

பண்டைத் தமிழகத்தில் இருந்துவந்த ஒரு மாசு பரத்தையர்சேரி. ஒருவனுக்கு உரியவளாய் வாழாமல் பொருள் காரணமாகப் பலரிடம் மாறி மாறி வாழும் பெண் அக்காலத்துச் சமுதாயத்தில் ஒரு தனிப் பகுதியாக இருந்தாள். இத்தகைய குடும்பங்களை உடைய ஊர்ப்பகுதியே பரத்தையர்சேரி எனப்படுவது. இந்த மாசு இன்னும் உலகில் வெவ்வேறு வடிவில் உள்ளது.

---

*39. மதுரைச் செங்கண்ணனார்.

ஒழித்தது - விட்டுப் பிரிந்தது. உள்ளியும் அறிதிரோ - நினைத்தும் அறிவீரோ. யாழ : அசை. எயிறு - பல். துவர் - பவளம். அழுங்க - கெட. நொதுமல் - அயல். சேண் - தொலைவு. இகந்து - கடந்து. கழை - மூங்கில். பொறி - தீப்பொறி. ஞெமல் - சருகு. வளி - காற்று. அதர் - வழி. சாத்து - வாணிகக் கூட்டம். ஞான்று - தாழ்ந்து. மான்று - மயங்கி. ஆரிடை - அரிய வழி. பாயல் - படுக்கை. நவ்வி - பெண்மான். இருத்த - தாழ்ந்த, குனிந்த. கோடு ஏந்து - பக்கம் உயர்ந்த. குவவு - சிறிதாயுள்ள. கதுப்பு - கூந்தல். நன்னர் அமையம் - நல்ல சமயம். வாய் அல் - உண்மை அல்லாத. உலமரல் - வருத்தம். புலத்தி - புலவி கொள்கிறாய், வெறுக்கிறாய்.

மருதத்திணை என்னும் அகப்பொருட் பகுதியில் தலைவன் பரத்தை ஒருத்தியை நாடியதாகவும், சிலநாள் அங்கே தங்கியிருந்ததாகவும், அப்பிரிவின் காரணமாகத் தலைவி வருந்தியதாகவும், தலைவன் திரும்பி வந்தபோது அவனிடம் ஊடல்கொண்டதாகவும் பாடுதல் சங்க இலக்கிய மரபு.

அவ்வாறு தலைவன் திரும்பிவந்தபோது, ஊடல் கொண்ட தலைவியைத் தணிக்க முயன்றான். "நீ எண்ணுவதுபோல் நான் பரத்தையை நாடிச் செல்லவில்லை. இன்றியமையாத வேலையின் காரணமாக வெளியே சென்றிருந்தேன். நீ எண்ணுவது தவறு. யான் எந்தப் பரத்தையையும் அறியேன்" என்று பொய் கூறினான்.

இதைக் கேட்ட தலைவி நெஞ்சில் சினம் கொள்ள முடியவில்லை. தன் ஊடலைத் தலைவன் பொருட்படுத்தாது நடந்திருந்தால், அல்லது, செய்தது தவறு அன்று என வலியுறுத்தியிருந்தால், தலைவி அவன்மேல் சினம் கொண்டிருப்பாள். தலைவனோ, அவள் ஊடுவதைக் கண்டு அஞ்சினான்; அடங்கினான். தான் தவறு செய்யவில்லை எனப் பொய் கூறி மறைக்க முயன்றான்.

இவ்வாறு பொய் கூறியதைக் கேட்டதும் தலைவி அவனுடைய எளிமையை உணர்ந்து உள்ளத்தே நகைத்தாள்; அதனால் ஊடலும் ஒருசிறிது தணிந்தாள். தன்னைப் பொய் கூறி ஏமாற்ற முடியாது என்பதை அவனுக்கு உணர்த்தத் தொடங்கினாள். "எனக்கு எல்லாம் தெரியும். என்னிடம் மறைக்காதே. கண்ணாரக் கண்டு தெளிந்தே சொல்கிறேன்" என்றாள்.

தலைவி, குழந்தை பெற்ற தாய். குழந்தை, தெருவரையில் சென்று விளையாடும் சிறுவனாக இருந்தான். தாமரை

இதழ்போன்ற அழகிய கையும், பவளம் போன்ற அழகிய வாயும், நாவோடு பழகாத இளங் குதலே மொழியும்கொண்டு அவன் எல்லோரையும் மகிழ்வித்துவந்தான். எத்தகையவரும் விரும்பிப் போற்றக்கூடிய செல்வமகனுக இருந்தான் அவன். ஒருநாள் அவன் தெருவில் தனியே விளையாடிக் கொண்டிருந்தான். தலைவனுடைய பரத்தை அன்று அவ் வழியே வந்தாள். சிறுவனைக் கண்டு முகச்சாயல் முதலிய வற்ருல் இன்னுருடைய மகன் என அறிந்தாள். அவனிடம் அன்பு கொண்டாள். சிறுவன் தனியே இருந்ததையும் உணர்ந்தாள்; தன்னை யாரும் காணவில்லை என்று எண்ணினுள். எண்ணியவாறே நெருங்கினுள். ஆவலுடன் அணுகி, "என் உயிரே! வருக" என்று மிக்க மகிழ்ச்சியோடு மார்பில் அணைத்து நின்ருள்.

அப்போது தலைவி அங்கு வந்து சேர்ந்தாள். இடம் விட்டுப் பெயராமல் நின்ருள். பரத்தையை வெறுப்போடும் வியப்போடும் பார்த்தாள். பரத்தையோ கலங்கினுள். தலைவி விரைந்து சென்று பரத்தையை நோக்கி, "ஏனடி! ஏன் மயங்குகிருய்? இவனுக்கு நீயும் ஒருதாய்தான்" என்ருள். இதைக் கேட்ட பரத்தை, கையோடு களவு பிடிக்கப்பட்டவர்கள் போல் முகம் கவிழ்ந்து நாணி நிலத்தைக் கால்விரலால் கிளறியபடியே நின்ருள்.

"யான் ஒரு பரத்தையையும் அறியேன்" என்று பொய் கூறிய தலைவனை நோக்கித் தலைவி இந்த நிகழ்ச்சியை எடுத்துரைத்தாள். "இவ்வாறு அன்று நிகழ்ந்தது. அவள் உன் காதலி என்பதை நன்கு அறிவேன்" என்ருள். அதோடு நிற்காமல், கற்பு இல்லாத ஒருத்தியை நாடுவது அறமாகாது என்று இடித்துரைக்கும் நோக்கத்தோடு, பரத்தையைக் குறிப்பு மொழியால் பழித்தாள். "அவள்

அருந்ததி போன்ற கற்புடையவள் அல்லளோ? அதனுல் அவள் உன் மகனுக்குத் தாய் ஆவது பொருத்தம்தான் என்று எண்ணி அவளை நான் போற்றினேன்" என்றாள்:

தலைவி :

நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்
தாதின் அல்லி அயல்இதழ் புரையும்
மாசில் அங்கை மணிமருள் அவ்வாய்
நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்
யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத்
தேர்வழங்கு தெருவில் தமியோன் கண்டே
கூர்எயிற்று அரிவை குறுகினள், யாவரும்
காணுநர் இன்மையின் செத்தனள் பேணிப்
பொலங்கலம் சுமந்த பூண்தாங்கு இளமுலை
வருக மாளஎன் உயிரெனப் பெரிதுஉவந்து
கொண்டனள் நின்றோள் கண்டுநிலைச் செல்லேன்,
மாசில் குறுமகள் எவன்பே துற்றனை
நீயும் தாயை இவற்குஎன யான்தன்
கரைய வந்து விரைவனென் கவைஇக்
களவுடம் படுநரின் கவிழ்ந்துநிலம் கிளையா
நாணி நின்றோள் நிலைகண்டு யானும்
பேணினென் அல்லனோ மகிழ்ந வானத்து
அணங்கருங் கடவுள் அன்னோள் நின்
மகன்தாய் ஆதல் புரைவதுஆங்கு எனவே.*

---

*16. சாகலாசனர்.

நாய் - நீர் நாய். கலித்த - தழைத்த. செத்தனள் - செத்து - ஒப்புமை கருதி. மாள: அசை. பேதுற்றனை - மயங்கினாய். எவன் - ஏன். கரைய - கூற. மகிழ்ந - கணவனே. புரைவது - பொருந்துவது.

# 67. பாணன் மயக்கம்

தலைவன் பரத்தையிடம் நட்புக் கொள்வதற்குத் துணையாக இருந்தவன் பாணன்.

பாணன் தன் யாழால் இசை பரப்பிக் கலைத்தொண்டு செய்துவந்தவன். இசைவிருந்து கேட்டு மகிழ்ந்து பரிசு கொடுத்துத் தலைவன் அவனைக் காத்துவந்தான். கலைத் தொண்டு செய்து தலைவனை மகிழ்விக்கும் அந்த அளவில் பாணன் நின்றிருந்தால் போதும்; அதுவே அவனுடைய கடமையும் ஆகும். ஆனால் வரம்புமீறி நடந்தான். தன்போல் கலைத்துறையில் சிறந்து விளங்கியவள் பரத்தை. அவளுக்கு அக்காலச் சமுதாய அமைப்பின்படி ஒருவனோடு ஒழுங்காக வாழும் வாழ்வுக்கு வழி இல்லை. குடும்பத் தலைவனாகவும் செல்வனாகவும் உள்ள எவனையாவது தன் ஆடல் பாடல் அழகுகளால் கவர்ந்து அவனுடைய பொருளைக் கொண்டே வயிறு வளர்த்து வாழ வேண்டிய கொடிய நிலை அந்தச் சமுதாயத்தில் இருந்தது. பழக்கப்பட்ட காரணத்தால் அது ஒரு கொடுமை என்பதையும் அந்தக் காலத்தினர் மறந்து விட்டிருந்தனர். அந்த நிலையில் பாணன் ஒருபக்கம் பரத்தைக்கு உதவியாகவும் மற்றொரு பக்கம் தலைவனுக்கு உதவியாகவும் நடந்துகொள்ள முயன்றான். அதனால் தலைவன் அவனிடம் கொண்ட அன்பும் வளரும், கொடுக்கும் பரிசும் மிகும் என்ற ஆசை கொண்டே இந்த முயற்சியில் ஈடுபட்டான்.

பரத்தைவீட்டில் தலைவன் போய்த் தங்குவதற்கு உரிய சிறப்புக்கள் ஒருநாள் நடைபெறுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அன்று ஏறக்குறையத் திருமணம்போலவே பரத்தைவீட்டில் எல்லாம் கொண்டாடப்பட்டது. பாணன் குறித்த நேரத்தில் அவ்விடத்திற்குச் செல்வதற்காக ஆசை

யுடன் விரைந்து போய்க்கொண்டிருந்தான். போகும் வழியில் தலைவனுடைய இல்லம் இருந்தது. அங்கே தலைவன் இல்லை என்பதும், பரத்தையின் வீட்டில் மகிழ்ச்சியுடன் இருப்பான் என்பதும் அவனுக்குத் தெரியும். அதனால் தலைவியின் கண்ணில் படாதபடி போக வேண்டும் என்று தெருவின் மற்றொரு பக்கமாக ஒதுங்கிச் சென்றான். அப்போது எதிர்பாராத வகையாக, கன்று ஈன்ற பசு ஒன்று குறுக்கே வந்து, அவன் விரைந்து செல்வதைக் கண்டு மருண்டு பாய்ந்தது. அது பாய்தலைக் கண்ட பாணன், அஞ்சிக் கலங்கித் தன் கையில் இருந்த யாழை விட்டுவிட்டு, அடுத்திருந்த வீட்டினுள் நுழைந்து தற்காப்புத் தேடினான். ஆயின், அது தலைவி இருந்த வீடாகவே அமைந்துவிட்டது.

பரத்தைவீட்டில் நடைபெறும் ஏற்பாட்டையும் அதற்குப் பாணன் காரணமாக இருத்தலையும் நன்கு உணர்ந்திருந்தாள் தலைவி. ஆதலின் பாணன் அவ்வாறு யாழையும் கைவிட்டுக் கலங்கி ஓடிவந்து வீட்டினுள் புகுந்த காட்சியைக் கண்டதும் அவளுக்கு இரக்கம் தோன்றவில்லை; சிரிப்பே தோன்றியது. உடனே தன் மகிழ்ச்சியை உள்ளத்தே மறைத்துக்கொண்டு இகழ்ச்சிக்குறிப்போடு பாணன் எதிரே சென்று, "இந்த வீடு அன்று; அதோ அந்தத் தெருவில் உள்ளது உங்கள் வீடு" என்றாள். இந்தச் சொற்களைக் கேட்டதும் பாணன் தலைவியையும் பார்த்துத் தன்னையும் பார்த்துக்கொண்டு மனம் மயங்கி ஒன்றும் பேசாமல் தலைவியைத் தொழுதுநின்றான்.

இந்த நிகழ்ச்சியைத் தலைவி மறக்கவில்லை. தக்க வாய்ப்பு வரும்போது தலைவனுக்கு எடுத்துச் சொல்லி இடித்துக் கூற வேண்டும் எனக் காத்திருந்தாள்.

அந்த வாய்ப்பும் வந்தது. பரத்தையின் வீட்டிலிருந்த தலைவன் மறுநாள் தலைவியின் வீட்டிற்குத் திரும்பினான். வீட்டினுள் நுழைந்தபோது அவனுடன் தலைவி பேசவில்லை. அவளுடைய ஊடல்குறிப்பைத் தலைவன் உணர்ந்தான். ஊடலைத் தணிக்க வழி என்ன என்றும், எப்படிப் பேசுவது என்றும் அறியாமல் திகைத்துக்கொண் டிருந்தான். அவனுடைய குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு என்று அமைதியின்றி இருந்தது.

அந்த நிலையில் தலைவியின் உயிர்த்தோழி வீட்டிற்கு வந்தாள். அவளைக் கண்டு தலைவன் தன் குறையைச் சொல்வதற்கு முன்னமே தலைவி அவளிடம் சென்று பேசத் தொடங்கினாள். "தோழி! ஒரு நிகழ்ச்சி தெரியுமா? நினைத்தாலும் நகைப்பாக இருக்கின்றதே! நேற்று நம் தலைவனுக்குப் புதிய பரத்தையின் உறவை ஏற்படுத்துவதற்காக ஆசையோடு பாணன் இவ்வழியாக விரைவாக நடந்து சென்றான்" என்று தொடங்கி நடந்ததைக் கூறி நகையாடினாள்.

தலைவன் நெறிதவறி நடந்த குற்றத்தைத் தக்க காலத்தில் இவ்வாறு எடுத்துக் கூறிக் கடிந்தாள் அவள்.

தலைவி :

**நகையா கின்றே தோழி ; நெருநல்**
**தண்துறை யூரன் திண்தார் அகலம்**
**வதுவை நாளணிப் புதுவோர்ப் புணரிய**
**பரிவொடு வரூஉம் பாணன் தெருவில்**
**புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி யாழ்இட்டு**
**எம்மனைப் புகுதந் தோனே ; அதுகண்டு**
**மெய்ம்மலி உவகை மறையினென் எதிர்சென்று**

'இம்மனை அன்றுஅஃது உம்மனை' என்ற
என்னும் தன்னும் நோக்கி
மம்மர் நெஞ்சினேன் தொழுதுநின் றதுவே.*

## 68. பழங் கண்ணோட்டம்

பாத்தையின் வீட்டிலே புதுமணத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. தலைவன் தன்னைப் புதுவகையில் அழகு படுத்திக்கொண்டான். பாத்தையின் வீட்டை நாடிச் சென்று கொண்டிருந்தான். அவன் இருந்த இடத்திலிருந்து பரத்தை யின் வீட்டுக்குச் செல்லும் வழியில்தான் அவனுடைய வீடு இருந்தது. அங்கு அவனிடம் ஊடல் கொண்டவளாய்த் தலைவி தனித்திருந்தாள். அவளுடைய குழந்தை - சின்னஞ் சிறுவன் - உடன் இருந்தான். தலைவி தலைவனுடைய நடத்தையை நினைந்து ஊடியவாறு பற்பல எண்ணிக்கொண் டிருந்தாள்.

தன்னைப் புதுமை மிகப் புனைந்துகொண்ட தலைவன், தேர் ஏறித் தெரு வழியாகச் சென்றுகொண்டிருந்தான். அந்தத் தேரின் மணியோசை கேட்டதும் வீட்டினுள்ளே இருந்த சிறுவன் வாயிற்படியைக் கடந்து தெருவை நோக்கிச்

*56. மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்.

நகையாகின்று - நகை ஆயிற்று. நெருநல் - நேற்று. ஊரன் - மருதநிலத் தலைவன். அகலம் - மார்பு. வதுவை - திருமணம். நாளணி - அலங்காரம். புணரிய - சேர்த்துவைக்க. பரிவு - விருப்பம். புனிற்று - புனிறு ஆ - அண்மையில் கன்று ஈன்ற பசு. மறையி னென் - மறைத்தேனாய் - மறைத்து. என்னும் - என்னையும். தன் னும் - தன்னையும். மம்மர் - மயக்கம்.

சென்றான். தேரைக் காணும் வேட்கையோடு சென்றான். குழந்தை ஆகையால் தளர்ந்த நடையோடு விரைந்து சென்றான். அவ்வாறு தட்டுத் தடுமாறி விரைந்துவந்த மகனைக் கண்டதும், தேர் ஊர்ந்து சென்ற தலைவன் பாகனை நோக்கி, "வலவ! சிறிது நிறுத்துக" என்று நிறுத்தி இறங்கினான். உடனே மகனுடைய பவளச் செவ்வாய் தன் மார்பில் பொருந்துமாறு தழுவி, "பெருமானே! இனி வீட்டிற்குள் போய்விடு" என்று சொல்லிக் கீழேவிட முயன்றான். ஆனால் அந்தச் சிறுவன் கீழே இறங்கிப் போவதற்கு இசையாமல் அழுதான். வேறு வழி இல்லாமல், மகனைத் தோள்மேல் எடுத்தவாறே வீட்டிற்குள் புகுந்தான்.

இவ்வளவும் வீட்டினுள் இருந்தபடியே மறைந்து கண்டறிந்த தலைவி, அடிக்கும் கோல் எடுத்துக்கொண்டு மகன் எதிரே சென்றாள். வேண்டும் என்றே தேரைத் தடுப்பதற்காகவே குழந்தையைத் தெருவிற்கு அனுப்பியதாகத் தலைவன் எண்ணமலிருக்க வேண்டும் என்று, அதை எண்ணி நாணம்கொண்டு, குழந்தையை அடிப்பதற்காகக் கோல் கொண்டு சென்றாள். "இந்தக் கொடியவன் இவரைப் போக விடாமல் கலக்கிவிட்டான் போலும்" என்று கடிந்து கூறி நெருங்கினாள். அப்போது தலைவன் மகனைத் தன் தோளில் சேர்த்து அணைத்துக்கொண்டு, அவள் அடிக்காதவாறு காத்தான். அந்நேரத்தில் தலைவனுடைய வருகையை எதிர் பார்த்திருந்த பரத்தையின் வீட்டில் முழவின் இசை கேட்டது. திருமணத்திற்கு உரிய நேரம் ஆயிற்று என்பதை நினைவூட்டி அவனை அழைப்பதுபோல் அந்த முழவு ஒலித்தது. அந்த ஒலியைக் கேட்டும் தலைவன் அசையாமல் நின்றான்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு பரத்தையின் வீட்டுக்குச் சென்று மறுநாள் திரும்பினான் தலைவன். அவன் திரும்பிய

போது தலைவியின் ஊடலைக் கண்டான். தலைவன் வருந்தி நிற்பதைக் கண்ட தோழி, அவனுக்காக மனம் இரங்கி, தலைவியிடம் சென்று ஊடல் தணியுமாறு வேண்டினாள். அப்போது தலைவி அவளை நோக்கி, "தோழி! பலரும் சொல்லும் பழமொழி எல்லாம் உண்மையாவதை நான் உணரப் பெற்றேன். பகைவரும் விரும்பும் கள்ளமற்ற குழந்தைகளைப் பெற்றவர்கள் இந்த உலகத்தில் புகழோடு விளங்கி மறுமையுலகத்திலும் குற்றமற்று விளங்குவார்கள் என்பார்களே, அது உண்மையாயிற்று" என்று ஏதோ புதிய உண்மையை உரைப்பவள்போல், நேற்று நடந்த நிகழ்ச்சியை அவளுக்குக் கூறினாள். எல்லாம் கூறிய பிறகு, "தோழி! தொடக்கத்தில் கழங்கு விளையாடிக்கொண்டிருந்த ஆயத்திடையே வந்து நம்மிடம் அன்பு செலுத்தினாரே, அந்தப் பழைய அன்பும் தோற்றுப் போகுமாறு நடந்தார். பரத்தைவீட்டு மணமுழவுகள் அழைப்பவை போல் ஒலிப்பதைக் கேட்டும், அசையாமல் நின்றார். அந்தப் பரத்தைமணத்தையும் கைவிட்டு நின்றார் அல்லரோ?" என்றாள்.

தலைவனுடைய அன்பைப் பாராட்டுவதுபோல் அவனிடம் கொண்ட ஊடலைப் புலப்படுத்தினாள். எல்லாம் போலி அன்பே என்றும், மீண்டும் மீண்டும் பரத்தையை நாடும் உள்ளம் உடையவர் என்றும், இத்தகையவனுக்காகத் தோழி பரிந்து பேசுவதில் பயன் இல்லை என்றும் குறிப்பால் உணர்த்தினாள்.

பரத்தைவீட்டுக்குச் சென்று மணம் செய்துகொள்வதற்காகத் தலைவன் தன்னைப் புனைந்துகொண்டு வந்த காட்சியைத் தலைவி அன்றும் மறக்கவில்லை; நினைத்துப் பார்த்துத் தோழிக்கு உரைத்தாள். "மகனை எடுத்துக்கொண்டு அவன்

வீட்டிற்குள் நுழைந்தபோது, நிதிக்கிழவனாகிய குபேரன் என்று சொல்லும்படியாகத் தோன்றினான்'' என்றாள். குபேரன் மற்றொருவன் தோள்மேல் ஊர்ந்து வருபவன்; செல்வப் பெருமை புலப்படுத்தும் ஆடம்பரம் உடையவன். ஆதலின் தலைவி இந்த உவமையைக் கொண்டு தலைவனுடைய நிலைமையைத் தெளிவாக்கினாள் :

தலைவி :

இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறுவின்று எய்துப
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்மலோர்எனப்
பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்
வாயே ஆகுதல் வாய்த்தனம் தோழி ;
நிரைதார் மார்பன் நெருநல் ஒருத்தியொடு
வதுவை அயர்தல் வேண்டிப் புதுவதின்
இயன்ற அணியன் இத்தெரு இறப்போன்
மாண்தொழில் மாமணி கறங்கக் கடைகழிந்து
காண்டல் விருப்பொடு தளர்புதளர்பு ஓடும்
பூங்கண் புதல்வனை நோக்கி நெடுந்தேர்
தாங்குமதி வலவஎன்று இழிந்தனன் தாங்காது
மணிபுரை செவ்வாய் மார்பகம் சிவணப்
புல்லிப் '' பெரும ! செல்இனி அகத்து''எனக்
கொடுப்போர்க்கு ஒல்லான் கலுழ்தலின், தடுத்த
மாநிதிக் கிழவனும் போன்ம்என மகனொடு
தானே புகுதந் தோனே ; யான்அது
படுத்தனென் ஆகுதல் நாணி இடித்துஇவன்
கலக்கினன் போலும்இக் கொடியோன் எனச்சென்று
அலைக்கும் கோலொடு குறுகத் தலைக்கொண்டு
இமிழ்கண் முழவின் இன்சீர் அவர்மனைப்
பயிர்வன போலவந்து இசைப்பவும் தவிரான்

கழங்குஆடு ஆயத்து அன்றுநம் அருளிய
பழங்கண் ணோட்டமும் நலிய
அழுங்கினன் அல்லனோ அயர்ந்ததன் மணனே.*

## 69. உன்னைத் தேடுகிறாள்

தலைவன் பரத்தையோடு பொழுது போக்கிவிட்டுத் திரும்பினான். அவன் பரத்தையோடு அலங்கரிப்புச் செய்து கொண்டு ஆடி மகிழ்ந்திருந்த செய்தி தலைவிக்கும் தோழிக்கும் எட்டியது. அதனால் தலைவன் திரும்பியபோது தலைவி அவனை வழக்கம்போல் வரவேற்கவில்லை. தோழி அவனை எதிர்ப்பட்டு, பரத்தையோடு மகிழ்ந்திருந்த செய்தியைக் கூறி, அதனோடு நிற்காமல் குறிப்பாகப் பரத்தையை இகழ்ந்தும் பேசத் தொடங்கினாள்; புகழ்வதுபோல் கூறிப் பழித்தாள். தலைவனின் நடத்தை ஊரெல்லாம் அறிந்த அலராக இருப்பதையும் எடுத்துரைத்தாள்.

" ஐய ! திருவிழாவில் ஆடும் மகளிரொடு தழுவி ஆடுவதற்குரிய அணி செய்யப்பெற்றுப் பொலிவோடு விளங்கி,

---

*66. செல்லூர்க் கோசிகன் கண்ணனார்.

இசை - புகழ். மறு இன்று - குற்றம் இல்லாமல். செறுநர் - பகைவர். செய்தீர் - குற்றம் அற்ற. செம்மலோர் - தலைவர் - பெற்றோர். வாய் - உண்மை. நெருநல் - நேற்று. கறங்க - ஒலிக்க. கடை - வாயில். வலவன் - தேர்ப்பாகன். சிவண - பொருந்த. ஒல்லான் - உடன்படாமல். படுத்தனென் - செய்தேன். இமிழ் - ஒலிக்கும். சீர் - இசை. பயிர்வன - அழைப்பன. அழுங்கினன் - நிறுத்தினான்.

மலர்போன்ற அழகு பொருந்திய மையுண்ட கண்களையும் சிறந்த நகைகளையும் உடைய ஒரு பரத்தையோடு மகிழ்ந்திருந்தாய் அல்லையோ ? அவள் தன் முன்கையால் உன்னைப் பற்றிப் பிணித்துக்கொண்டிருந்தாளாம். அதை விடுவித்துக் கொண்டு நீ வந்தமைக்காக உன் காதலியாகிய அவள் சினம் கொண்டாள் போல் தெரிகிறது. உண்மைதானே ! எம்மைப் போல் புதல்வனைப் பெற்றுப் பெரிய வீட்டினுள் அகப் பட்டுத் துணை இல்லாமல் தனியே வாழ வேண்டும் என்று அவள் கடப்பாடு உடையவளோ ? அல்லள். (நாங்களே அப்படித் தனித்துக் கிடக்கக் கட்டுப்பட்டவர்கள்.) ஆகையால் அவள் தன் முகத்தின் அழகு சிதையுமாறு அழுது ஏங்குகிறாள். பொன்னை உருக்கி வார்த்தது போன்ற தேமலுடனும், பலமுறை நொடித்து விடுவதால் சிவந்த மெல்லிய விரல்களுடனும், கூரிய முனை மழுங்கிய பற்களுடனும், (ஊரெல்லாம் அலர் தூற்றுகின்ற) உன்னைக் காண்பதற்காகத் தேடிச் செல்கின்றாள்.

தோழி :

**விழவுஆடு மகளிரொடு தழூஉ அணிப் பொலிந்து**
**மலர்ஏர் உண்கண் மாண்இழை முன்கைக்**
**குறுந்தொடி துடக்கிய நெடுந்தொடர் விடுத்தது**
**உடன்றனள் போலும்நின் காதலி ; எம்போல்**
**புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து**
**நெல்லுடை நெடுநகர் நின்இன்று உறைய**
**என்ன கடத்தளோ மற்றே ; தன்முகத்து**
**எழுதுஎழில் சிதைய அழுதனள் ஏங்கி**
**வடித்தென உருத்த தித்திப் பல்லூழ்**

தொடித்தெனச் சிவந்த மெல்விரல் திருகுபு
கூர்நுனை மழுகிய எயிற்றள்
ஊர்முழுது நுவலும்நின் காணிய சென்மே.*

## 70. தடுப்பவர் இல்லை

**ப**ரத்தையின் வீட்டில் சிலநாள் கழித்துவிட்டுத் திரும்பிய தலைவன் நேரே தலைவியை அணுகிச் செல்லத் துணியவில்லை. குற்றமுள்ள நெஞ்சு அவனைத் தயங்கச் செய்தது. தலைவியின் நெருங்கிய நட்புக்கு உரியவளான தோழியிடம் சென்றான். அவள்வாயிலாகத் தலைவியின் அன்பைப் பெற முயன்றான். ஆயின் தோழி அதற்கு உடன்படாமல் மறுத்தாள். தலைவியின் ஊடல்குறிப்பை உணர்ந்தே மறுத்தாள். அப்போது அவள் கூறிய சொற்கள் நுட்பமும் திறனும் வாய்ந்தவை. நாகரிகப் பெற்றி தவறாமல் நயமுறக் கூறி, தலைவன் மனம் நொந்து வருந்தும்படியாகச் செய்தாள்.

அவனுடைய மருத நிலத்தைச் சிறப்பிப்பவள்போல் ஓர் எருமையின் வாழ்வை எடுத்துரைத்து, அதன் நெறியற்ற வாழ்வைக் கண்டித்து உவமை வாயிலாகத் தலைவனுடைய

---

*176. மருதம் பாடிய இளங்கடுங்கோ.

தழூஉ - தழுவி ஆடுதல். தொடி - வளையல். தடக்கிய - பிணித்த. உடன்றனள் - சினந்தாள். புல்உளைக் குடுமி - சிறிய உளை போன்ற குடுமி உடைய. நகர் - வீடு. நின்இன்று - நீ இல்லாமல். கடத்தல் - கடப்பாடு உடையவள். உருத்த - உருக்கொண்ட. தித்தி - தேமல். ஊழ் - முறை. நுனை - முனை. நுவலும் - அலர் தூற்றும். காணிய - காண்பதற்காக. சென்ம் - செல்லும் - செல்வாள்.

குற்றமான போக்கைக் குறிப்பால் உணர்த்தினுள். " உன் ஊரில் தனக்கு இயல்பான சேற்றில் நின்று நின்று வெறுத்து விட்ட எருமை, ஊரார் உறங்கும் நள்ளிரவில் வலிய கட்டை அறுத்துச் சென்று, கூர்மையான முள்வேலியைத் தன் கொம்பால் நீக்கி, நீர் மிகுந்த வயலில் பாய்ந்து மீன்கள் ஒருங்கே அஞ்சி ஓடச் செய்து அழகிய வள்ளைக் கொடிகளை மயக்கிவிட்டுத் தாமரை மலரைத் தின்னும்" என்ருள். "நீயும் தலைவியோடு வாழும் இயல்பான இல்வாழ்க்கையை வெறுத்து விட்டு, நாணத்தையும் நீக்கி, யாரும் அறியாதபடி நெறி தவறி நடந்து, பரத்தையோடு வாழ்கின்ருய்" என்பதைச் சொல்லாமலே புலப்படுத்திவிட்டாள்.

தோழி :

*சேற்றுநிலை முனைஇய செங்கண் காரான்*
*ஊர்மடி கங்குலின் நோன்தளை பரிந்து*
*கூர்முள் வேலி கோட்டின் நீக்கி*
*நீர்முதிர் பழனத்து மீனுடன் இரிய*
*அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை*
*வண்டுஊது பனிமலர் ஆரும் ஊர !*

இவ்வளவும் சொல்லிவிட்ட பிறகு, " நாங்கள் உன்னுடன் ஊடல் கொள்வதாக எண்ண வேண்டா. நீ யார் ? நாங்கள் யார் ? உன்னேடு ஊடுவதற்கு எங்களுக்கு என்ன உரிமை உள்ளது ? மற்றவர்கள் பேசிக்கொள்கிருர்கள், அது தான் தெரியும் ? யாரோ ஒருத்தியை நம் வீட்டிற்குக் கொணர்ந்து மணம் செய்துகொண்டாய் என்று சொல்கிருர்கள். அதுவும் எங்களுக்குத் தெரியாது. நாங்கள் சொல்ல மாட்டோம். என் தோழி (உன் துணைவி) உன்னுடைய பிரிவால் வாடி மெலிந்தாலும் மெலியட்டும். நீ அதற்காகக்

கவலைப்படாதே. நீ பரத்தையிடம் செல்க. உன்னைத் தடுப்ப வர் யாரும் இல்லை " என்றாள் :

தோழி :

*யாரை யோ நின் புலக்கேம் ;...*
*பிறரும் ஒருத்தியை நம்மனைத் தந்து*
*வதுவை அயர்ந்தனை என்ப ; அஃதுயாம்*
*கூறேம் வாழியர்...என்*
*ஒண்டொடி நெகிழினும் நெகிழ்க ;*
*சென்றீ பெருமநின் தகைக்குநர் யாரே.**

## 71. ஆவது ஆக

தலைவன் உறவு கொண்டிருந்த பரத்தை இன்னாள் என்று அறிந்த தலைவியும் தோழியும் அவளைப் பழித்தனர். அந்தப் பழிச்சொல்லைப் பிறர்வாயிலாக அறிந்தாள் பரத்தை ; அறிந்து சினம் கொண்டாள். நாணம் அற்றவள், நெறி அற்ற வள் என்று பழித்ததாகக் கேள்வியுற்றமையால் அவள் நாணத்தையும் நெறியையும் பொருட்படுத்தாமல், தன் அழகே வலையாக அந்தத் தலைவனை மீண்டும் பிணிக்கப் போவ தாகவும் தன் வெற்றியை நிலைநாட்டப் போவதாகவும் கூறினாள். தலைவியைச் சேர்ந்தவர்கள் தன் தெரு வழியாகப் போனபோது, அவர்களின் செவியில் விழுமாறு தன் பெரு மிதம் தோன்றக் கூறினாள் :

---

*46. அள்ளூர் நன்முல்லையார்.

முனைஇய - வெறுத்த. காரான் - எருமை. தளை - கட்டு. நோன் (தளை) - வலிய (தளை). கோட்டின் - கொம்பாலே. பழனம் - வயல். இரிய - ஓட. புலக்கேம் - ஊட மாட்டோம். சென்றீ - செல்க. தகைக்குநர் - தடுப்பவர்.

தலைவன் அஞ்சி அஞ்சி வாழ்கின்றவனாக உள்ளான். பெரிய பொய்கையில் இரையை விரும்பி எழுந்த வெண்ணிற மான ஆண்வாளைமீனை உண்ண வேண்டும் என்று முயலும் நாரை, தன் அடியின் ஒலியைப் பிறர் அறியாமல் இருக்க வேண்டும் என்று அஞ்சி மெல்ல மெல்லத் தளர்ந்து நடக் கும்; காவல் உள்ள வீட்டில் புகும் திருடன்போல் மெல்ல நடக்கும்; அத்தகைய துறைபொருந்திய ஊர்த்தலைவனின் உறவு காரணமாக இனி ஆவது ஆகட்டும். இனிமேல் நாணம் என்பதும் உண்டோ? அந்தத் தலைவன் எங்கள் தெருப் பக்கம் வரட்டும். அவனுடைய பெண்டிர் பார்க்கும்படியாக அவன்மாலையையும் ஆடையையும் பற்றி, ஆரியர்கள் பழக்கி வைத்த பெண்யானை ஆண்யானையைப் பிடித்துத் தருவது போல், என் தோளை கட்டுத்தறியாக என் கூந்தலைக் கொண்டு கட்டி அவனுடைய மார்பைச் சிறைப்படுத்துவேன். அவ்வாறு யான் செய்யத் தவறினால், ஆர்வமுற்று இரந்து கேட்டவர்க்குக் கொடுக்காமல் சேர்த்து வைத்தவனுடைய பொருள் பரந்து வெளிப்படாமல் வீணாவதுபோல் தாய் போற்றி வளர்த்த என் அழகு வருந்திப் பாழ்படுவதாக" என்றாள் :

பரத்தை :

நீள் இரும் பொய்கை இரைவேட்டு எழுந்த<br>
வாளை வெண்போத்து உணீஇய நாரைதன்<br>
அடியறி வுறுதல் அஞ்சிப் பைப்பயக்<br>
கடியிலம் புகூஉம் கள்வன் போலச்<br>
சாஅய் ஒதுங்கும் துறைகேழ் ஊரனொடு<br>
ஆவது ஆக; இனிநாண் உண்டோ?<br>
வருகதில் அம்மஎம் சேரி சேர;<br>
அரிவேய் உண்கண் அவன்பெண்டிர் காணத்

தாரும் தானையும் பற்றி ஆரியர்
பிடிபயின் று தரூஉம் பெருங்களிறு போலத்
தோள்கந்து ஆகக் கூந்தலின் பிணித்துஅவன்
மார்புகடி கொள்ளேன் ஆயின் ஆர்வுற்று
இரந்தோர்க்கு ஈயாது ஈட்டியோன் பொருள்போல்
பரந்து வெளிப்படா தாகி
வருந்துக தில்லயாய் ஓம்பிய நலனே.*

## 72. என்ன ஆவாளோ !

தலைவன் மழைக்காலத்தில் வருவதாகச் சொல்லிவிட்டு, அரசனுடைய ஆணைப்படி போர்க்களத்திற்குச் சென்றான். அவனைப் பிரிந்த தலைவி மழைக்காலத்தின் வருகையை எதிர் பார்த்துக் காத்திருந்தாள். மழைக்காலம் வந்துவிட்டது. போர்க்களத்திலும் பெருமழை பெய்தது. அங்கே பாசறையில் இருந்து அதைக் கண்ட தலைவன் வீட்டை நினைந்தான். தான் திரும்பி வருவதாகத் தலைவியிடம் சொல்லிப் பிரிந்ததை நினைந்தான். இன்னும் திரும்பிச் செல்ல முடியாத நிலையிலேயே தான் இருப்பதை எண்ணி வருந்தினான். போரிலே வெற்றி பெற வேண்டும் என்றும், அதன் வாயிலாகப் புகழ் பெற வேண்டும் என்றும், அரசன் முனைந்து நின்று போர் நடத்துவதால் தான் திரும்பிச் செல்ல வழி இல்லையே என்றும், போரில் பொறுப்பு மிக்க கடமை தன்னைச் சார்ந்திருக்கிறதே

*276. பாணர்.

வேட்டு - விரும்பி. போத்து - ஆண் மீன். உணீஇய - உண்பதற்காக. பைப்பய - மெல்ல. கடியிலம் - காவல் உள்ள வீடு. சாஅய் - மெலிந்து, தளர்ந்து. அரிவேய் - செவ்வரி பொருந்திய. கந்து - கட்டுத்தறி.

என்றும் எண்ணிக் கவலையுற்ருன். தன் சொல்லை நம்பித் தன்னை எதிர்பார்த்துக் காத்திருக்கும் துணைவி என்ன துயர் அடைவாளோ என்று கலங்கினுன்.

"வானத்தின் இடம் எல்லாம் மறையுமாறு பரவிக் கதிரவனையும் மறைத்துக்கொண்டு மேகம் மழை பொழிந்தது. பெரிய யானைக்கூட்டம் குளிருமாறு மிக்க துளிகளை வீசிப் பெருமழை பொழிந்தது. அரசனும் மிக்க பகை கொண்டு மாறுபட்டு, பாசறையில் இருந்து, பகைவரை வென்று பெறும் புகழையே விரும்பி, உறக்கத்தையும் விட்டு, போரில் முனைந்திருக்கிருன். போர் செய்யும் பொறுப்பும் என்னைச் சார்ந்ததாக உள்ளது. ஊரில் என் வரவை எதிர்பார்த் திருக்கும் தலைவியோ யான் கூறிய மொழியை நம்பித் தெளிந் திருந்தாள்; இப்போது என்ன நிலைமை அடைவாளோ? மாலைக்காலம் வந்ததும் யான் திரும்பும் நேரம் என்று எதிர் பார்த்துக் கலங்குவாள். மந்தையோடு திரும்பும் காளைமாடுகளின் கழுத்தில் கட்டிய மணிகள் தெளிந்த ஓசையோடு அப்போது ஒலிக்கும். பசுக்களைச் செலுத்திவரும் கோவலர் ஊதும் ஆம்பல்குழலின் ஓசையும் கலந்து கேட்கும். கணவரைப் பிரிந்த மகளிர்க்குத் துன்பம் தரும் யாழ் செவ்வழிப் பண்ணை வகுத்து உயிர்களை வருத்தும் தெளிந்த இசையும் கேட்கும். இவற்றை எல்லாம் மாரிக்காலத்து மாலையில் தனியாக இருந்து கேட்பாள் அவள்; கேட்டு என்ன துன்பம் உறுவாளோ?"

தலைவன் :

> **அகலிரு விசும்பகம் புதையப் பாஅய்ப்**
> **பகலுடன் கரந்த பல்கதிர் வானம்**
> **இருங்களிற்று இனநிரை குளிர்ப்ப வீசிப்**
> **பெரும்பெயல் அழிதுளி பொழிதல் ஆனுது ;**

வேந்தனும் வெம்பகை முரணி ஏந்திலை
விடுகதிர் நெடுவேல் இமைக்கும் பாசறை
அடுபுகழ் மேவலொடு கண்படை இலனே ;
அமரும் நம்வயி னதுவே ; நமர்என
நம்அறிவு தெளிந்த பொம்மல் ஓதி
யாங்குஆ குவள்கொல் தானே ஓங்குவிடைப்
படுசுவல் கொண்ட பகுவாய்த் தெண்மணி
ஆபெயர் கோவலர் ஆம்பலொடு அளைஇப்
பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப
ஆருயிர் அணங்கும் தெள்ளிசை
மாரி மாலையும் தமியள் கேட்டே.*

## 73. கேட்டால் மகிழ்வாள்

போரின் காரணமாகப் பிரிந்து சென்ற தலைவன் நெடு நாளாகப் போர்க்களத்திலேயே தங்கியிருந்து போர் செய்ய நேர்ந்தது. இறுதியில் போர் வெற்றியாகவே முடிந்தது. வந்த கடமை வெற்றி பெற முடிந்ததும், தலைவன் ஊர்க்குத்

*214. வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்.

அகல் - அகன்ற. இரு - பெரிய. விசும்பகம் - வானத்தின் இடம். புதைய - மறைய. பாஅய் - பாவி. கரந்த - மறைந்த. ஆனாது - ஓயாது. முரணி - மாறுபட்டு. ஏந்து இலை - நிமிர்ந்த இலையை உடைய (வேல்). இமைக்கும் - மின்னும். மேவல் - விரும்புதல். கண்படை - உறக்கம். நம்வயினது - நம்மிடத்தது; நமது. பொம்மல் - பொலிவு. ஓதி - கூந்தல், கூந்தலை உடையவள். விடை - காளை. சுவல் - பிடர். ஆம்பல் - ஆம்பல் குழல். அளைஇ - கலந்து. பையுள் - துன்பம். செவ்வழி - ஒரு பண். அணங்கும் - வருத்தும்.

திரும்பிச் செல்லத் தொடங்கினான். அந்நிலையில் தலைவி எவ்வாறு வருந்திக்கொண் டிருப்பாள் என்பதை அவன் எண்ணிப் பார்த்தான். அவனுடைய கற்பனையில் தலைவி தன்னைப் பழித்தவாறே வருந்திக்கொண் டிருப்பதாகக் கண்டான்.

"இன்ன நாளில் திரும்பி வருவோம் என்று தலைவர் கூறிச் சென்ற நாட்களும் பொய்யாகிவிட்டன. செவ்வரி பரந்த அழகிய கண்களும் விடாமல் நீர் சொரிகின்றன. குளிர்ந்த மழை பெற்றமையால் அரும்பெடுத்த முல்லைக் கொடியின் கூரிய வெண்ணிற அரும்புகள் மலர்ந்துள்ளன. மாலை அணியும் அழகை இழந்த கூந்தலையும் அவர் நினைக்கவில்லை. இவ்வாறு நம் தலைவர் அருள் மாறினாலும் மாறுக. ஆனால் அறத்திற்கும் அஞ்சாதவர் ஆகிவிட்டாரே; சொன்ன சொல் பிறழ்ந்துவிட்டாரே" என்று தலைவி சிறு சிறு சொற்களாகச் சொல்லி மிகவும் துன்புறுவதாகக் கற்பனை செய்து கண்டான்.

தலைவன் :

"வருதும் என்ற நாளும் பொய்த்தன ;
அரிஏர் உண்கண் நீரும் நில்லா ;
தண்கார்க்கு ஈன்ற பைங்கொடி முல்லை
வைவாய் வான்முகை அவிழ்ந்த ; கோதை
பெய்வனப்பு இழந்த கதுப்பும் உள்ளார் ;
அருள்கண் மாறலோ மாறுக ; அந்தில்
அறன்அஞ் சலரே ஆயிழை நமர் "எனச்
சிறிய சொல்லிப் பெரிய புலம்பினும்...

இவ்வாறு வருந்திக்கொண் டிருக்கும் தலைவியைத் தான் சென்று அடைவதற்கு முன்னே, போர்க்களத்து வெற்றிச்

செய்தி விரைந்து சென்று எட்டிவிடும் என்பதைத் தலைவன் எண்ணிப் பார்த்தான். அவ்வாறாயின், வெற்றிச் செய்தி கேட்டவுடனே அவளுடைய வருத்தம் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போகும் என்றும், தன்னைக் கண்டு தழுவி மகிழ்வது போலவே வெற்றிச் செய்தியைக் கேள்வியுற்றதும் பெரிதும் மகிழ்வாள் என்றும் எண்ணினான்.

" இவ்வாறு சில சில சொல்லிப் பெரிதும் புலம்பிய போதிலும், குளிர்ந்த நறுமண மாலை குழையுமாறு நம்மோடு வெறுப்புத் தீரத் தழுவி மகிழ்வதுபோல் மிக்க மகிழ்ச்சி அடைவாள், நெஞ்சே! ஆராய்வன ஆராய்ந்து போரை வென்ற வெற்றிச் செல்வத்தைப் பற்றி நம்மைச் சார்ந்தவர் சிலர் நமக்கு முன்னே விரைந்து சென்று கூற, அந்தச் செய்தியைக் கேட்கும்பொழுது துன்பம் எல்லாம் தீர அத்தகைய பெருமகிழ்ச்சி அடைவாள் " என்றான் :

தலைவன் :

**சிறிய சொல்லிப் பெரிய புலம்பினும்**
**பனிபடு நறுந்தார் குழைய நம்மொடு**
**துனிதீர் முயக்கம் பெற்றோள் போல**
**உவக்குவள் வாழிய நெஞ்சே...**
**அமர் ஓர்த்து அட்ட செல்வம்**
**தமர்விரைந்து உரைப்பக் கேட்கும் ஞான்றே.***

---

*144. மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார்.

அரி - செவ்வரி. ஏர் - அழகு. வை - கூர்மை. வான் - வெண்மை. அவிழ்ந்த - மலர்ந்தன. கோதை - மாலை. கதுப்பு - கூந்தல். அந்தில் : அசை. துனி - வெறுப்பு. ஓர்த்து - ஆராய்ந்து. ஞான்று - போது - காலம்.

## 74. கிளியே ! சொல்

மேற்கொண்ட கடமையை முடித்த தலைவன் தன் ஊர்க்கு விரைந்து திரும்பி வந்துகொண்டிருந்தான். பாகனை நோக்கி, "தேரை விரைந்து செலுத்துக" என்று ஏவினான். பாகனும் அவனுடைய உள்ளத்தின் ஆவலை—தனித்து வருந்தும் தலைவியை விரைவில் சென்று காண வேண்டும் என்னும் ஆவலை—நன்கு உணர்ந்து குதிரைகளைத் தூண்டி விரைந்து செலுத்தினான்.

வரும் வழியில் கண்ட காட்சி ஒன்று தலைவனுடைய ஆவலை விரைவுப்படுத்தியது. மான்கள் அவ்வழியில் இருந்தமை கண்டான். அவற்றுள் ஆண்மான்கள் பெண்மான்களை அன்போடு காக்கும் வாழ்க்கையைக் கண்டான். பெண் மான்கள் அறுகம்புல்லைத் தின்னுமாறு செய்து, தெளிந்த நீர் ஓடும் கானாற்றின் மணல்கரையில் தூங்கச் செய்து, அவ் வாறு தூங்கும்போது இடையூறு நேராதபடி அசையிட்ட வாறே காவலும் காத்தன. அவற்றின் பக்கத்தே மான் மறிகள் (குட்டிகள்) துள்ளி விளையாடும் காட்சியும் இருந்தது. எல்லாம் சேர்ந்து மான் குடும்பத்தின் அன்பான வாழ்க்கை யையும், குடும்பப் பொறுப்பு உணர்ந்து கடமையை ஆர்வத் தோடு செய்யும் ஆண்மான்களின் சிறப்பையும் தலைவனுக்கு உணர்த்தின. அவற்றை உணர்ந்த தலைவன் பாகனை நோக்கி, "இந்த ஆண்மான்களின் பெருந்தன்மையைக் கண்டு என் நெஞ்சம் உடைந்தது. பாக ! என் நெஞ்சம் தளர்ச்சி நீங்கி இன்புறுமாறு தலைவியை விரைவில் சென்று காண வேண்டும். ஆதலின், தேர் விரைவில் செல்வதாக" என்றான் :

தலைவன் :

**இருதிரி மருப்பின் அண்ணல் இரலை**
**செறியிலைப் பதவின் செங்கோல் மென்குரல்**

*மறியாடு மருங்கின் மடப்பிணை அருத்தித்*
*தெள்ளறல் தழீஇய வார்மணல் அடைகரை*
*மெல்கிடு கவுள துஞ்சுபுறம் காக்கும்*
*பெருந்தகைக்கு உடைந்த நெஞ்சம் ஏமுறச்*
*செல்க தேரே நல்வலம் பெறுந !*

ஆண் மான்களைப் பாராட்டியபோது " பெருந்தகை " என்று குறிப்பிட்டது, அவனுடைய உள்ளத்தில் இருந்த ஆர்வ மிகுதியைத் தெரிவிக்கிறது !

இவ்வாறு ஆர்வம் மிக்கவனாய்க் கூறியதும், அவன் நெஞ்சம் ஊரை நினைந்தது ; ஊரில் உள்ள தன் வீட்டை நினைந்தது; அந்தப் பெரிய வீட்டில் உள்ளவரோடு நெஞ்சாரப் பழகாமல் தன் வரவை எதிர்நோக்கி ஏங்கிக்கொண்டிருப் பாளோ என்று தலைவியையும் நினைந்தது.

காவல் பொருந்திய பெரிய வீடு அது. அங்கு அன்னப் பறவைகள் வாழ்ந்திருந்தன. அவைகள் துணையோடு கூடி மகிழ்ந்து வாழும் வாழ்க்கையைத் தலைவன் பலமுறை கண் டிருக்கிறான். அத்தகைய சூழ்நிலையை நினைந்தான் தலைவன். அது ஒரு காலத்தில் தனக்கும் அவளுக்கும் இன்பக் காட்சி யாக இருந்ததை நினைந்தான். இப்போது தனித்து வருந்தும் தலைவிக்கு அன்னப் பறவைகள் துணையோடு வாழும் அந்தக் காட்சி பிரிவுத் துன்பத்தைப் பெருக்கும் அன்றோ என நினைந்தான்.

வீட்டில் கிளி ஒன்று வளர்க்கப்பட்டுவந்தது. அந்தக் கிளியும் தலைவியின் பொழுதுபோக்குக்கு உரியதாக இருந் தது. தலைவி பலகாலும் அந்தக் கிளியிடம் சென்று கொஞ்சிக் கொஞ்சிப் பேசிய காட்சி தலைவனுடைய நினைவுக்கு வந்தது. இப்போது அவள் அந்தக் கிளியிடம் அவ்வாறு கொஞ்சிப் பேசுவதற்கு ஏற்ற மனநிலை இல்லாமல் வருந்துவாளே என

எண்ணினான். ஒருகால் தன் வரவை யாரேனும் அறிவிப்பார்களோ என்று ஏங்கும் அவளுக்கு அந்தக் கிளிதான் ஆறுதலாக இருக்குமோ என எண்ணினான். அவள் அந்தக் கிளியிடம் என்ன சொல்வாள் எனக் கற்பனை செய்து பார்த்தான். அவள் தன் முன்கையில் அந்தப் பசுங்கிளியை ஏந்திக்கொண்டு, "கிளியே! நீ என்ன என்னவோ சொல்வாயே! நான் கற்பித்த சொற்களை எல்லாம் சொல்வாயே! இப்போது ஒன்று சொல்கின்றேன், அதைச் சொல். என்னைப் பிரிந்து சென்ற தலைவரைப் பற்றிச் சொல். 'அவர் இன்று வருவார்' என்று சொல்" என்று கூறுவதாக எண்ணினான். ஆயின், அப்போது அவள் கூறும் சொல் வீட்டில் உள்ள மற்றவர் அறியாதவாறு மெல்லக் கூறுவதாக இருக்கும் என்று கருதினான். தலைவி நாணம் மிக்கவள் ஆதலால், தன் ஏக்கம் வீட்டாருக்குத் தெரியக் கூடாது என்று அஞ்சி மெல்லக் கூறுவதாக எண்ணினான். இவ்வாறு அவன் எண்ணிய கற்பனையிலும் தலைவி சொல்லும் சொல்லின் இனிமையை உணர்ந்து குழைந்தான். "மழலை இன்சொல்" என்றான். அதைப் பலமுறை கிளிக்குச் சொல்லிச் சொல்லிப் பழக்குவாள்; கிளியிடம் தலைவி கற்கவேண்டிய நிலை இல்லை; கிளி அவளிடம் மழலை இன்சொல் கற்றுப் பழகவேண்டும் என்று தன் நெஞ்சிற்குள்ளே பாராட்டிக்கொண்டான்.

தலைவன் :

> இருதிரி மருப்பின் அண்ணல் இரலை
> செறியிலைப் பதவின் செங்கோல் மெல்குரல்
> மறியாடு மருங்கின் மடப்பிணை அருந்தித்
> தெள்ளறல் தழீஇய வார்மணல் அடைகரை
> மெல்கிடு கவுள் துஞ்சுபுறம் காக்கும்

பெருந்தகைக்கு உடைந்த நெஞ்சம் ஏமுறச்
செல்க தேரே நல்வலம் பெறுந !
...எகினம்
துணையொடு திளைக்கும் காப்புடை வரைப்பில்
செந்தார்ப் பைங்கிளி முன்கை ஏந்தி
இன்றுவரல் உரைமோ சென்றிசினோர் திறத்தெ ன
இல்லவர் அறிதல் அஞ்சி மெல்லென
மழலை இன்சொல் பயிற்றும்
நாணுடை அரிவை மாண்நலம் பெறவே.*

## 75. இதுதான் பருவம்

தலைவன் கார்காலத்தில் திரும்பி வருவான் என்று எதிர் பார்த்திருந்த தலைவி, ஆற்றுமையால் மெலிந்து துன்புற்றாள். அவள்நெற்றி பசலையுற்றது. பெரிய தோள்கள் மெலிந்தன. வேளைதோறும் உணவு உண்ணவும் மனம் கொள்ளாமல் உண்ணுமல் வருந்தி உயிர் நீங்குமளவிற்கு மெலிந்து விட்டாள். "யான் இந்த நிலையில் வருந்துமாறு இங்கே என்னை விட்டுப் பிரிந்து சென்ற அவர் அறநெறி உடையவர்

---

*34. மதுரை மருதன் இளநாகனார்.

இரு - பெரிய. மருப்பு - கொம்பு. அண்ணல்-தலைமை. இரலை - ஆண்மான்(கள்). பதவு - அறுகு. கோல் - தண்டு. குரல் - கொத்து. மறி - குட்டி. மருங்கு - பக்கம். பிணை - பெண் மான்(கள்). அறல் - நீர். மெல்கிடு - அசையிடும். கவுள் - கன்னம். ஏமுற - இன்புற. வலம் - வல்லமை. எகினம் - அன்னம். திளைக்கும் - மகிழும். வரைப்பு - வீட்டு எல்லை. செந்தார் - செந்நிறமான (கழுத்தின்) வரிகள். பயிற்றும் - பழக்கப்படுத்தும். அரிவை - பெண் - தலைவி.

அல்லர்'' என்று அவள் பலவாறு கூறி வாழ்க்கையில் வெறுப் புக் கொண்டு துயரத்தில் ஆழ்ந்தாள்.

அவளை எவ்வாறு தேற்றுவது என்று தோழி கவலை யுற்றாள். "அம்மா! நீ இவ்வாறு துயருற்று வருந்தாதே" என்றாள். உடனே, அவர் திரும்பி வருவதாகக் கூறிய கார் காலத்தின் வருணனையைக் கூறி, அக்காலத்தில் விலங்கு களும் பறவைகளும் இன்பமாக வாழும் வாழ்வையும் குறிப் பிட்டால் அவளுடைய உள்ளத்திற்கு நன்மை பயக்கும் என எண்ணினாள். "தோழி! திரையன் ஆளுகின்ற வேங்கட (திருப்பதி) மலையின் சாரலில் பெண் யானையின் பசியையும் கன்றின் பசியையும் தீர்ப்பதற்காக ஆண்யானை முற்றாத மூங்கிலின் முளையைத் தந்து அன்போடு உண்ணச் செய்விக் கும். அங்கே வேங்கை மரங்கள் சாலையில் நன்றாகப் பூத்து விளங்கும். அந்த வேங்கைப் பூக்களின் தாது படிந்த மயில், குருந்த மரத்தின் மணம் மிகுந்த கிளைகளில் இருந்து தன் துணையை அழைத்துக் கூவும்படியான சிறப்பை உடை யது கார் காலம். விரைந்து வருகின்ற அத்தகைய கார் காலத்தில் தாம் வருவதாகக் கூறித் தேற்றிச் சென்றார் காதலர். அந்தப் பருவம் இதோ பார்; பருவத்திற்கு உரிய மழையும் பரவி வந்தது பார்; ஆதலின் அவரும் விரைந்து வருவார்" என்றாள்:

தோழி:

> நன்னுதல் பசப்பவும் பெருந்தோள் நெகிழவும்
> உண்ணா உயக்கமொடு உயிர்செலச் சாஅய்
> இன்னம் ஆகவும் இங்குநம் துறந்தோர்
> அறவர் அல்லர் அவர்எனப் பலபுலந்து
> ஆழல் வாழி தோழி; சாரல்
> ஈன்றுநாள் உலந்த மென்னடை மடப்பிடி

கன்றுபசி களைஇய பைங்கண் யானை
முற்றா மூங்கில் முளைதருபு ஊட்டும்
வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை
நன்னாள் பூத்த நாகிள வேங்கை
நறுவீ ஆடிய பொறிவரி மஞ்ஞை
நனைப்பசுங் குருந்தின் நாறுசினை இருந்து
துணைப்பயிர்ந்து அகவும் துனைதரு தண்கார்
வருதும் யாம்எனத் தேற்றிய
பருவம் காண்அது பாயின்றால் மழையே.*

## 76. வல்வாய்ச் சிறுகுழல்

போர்க்களத்தில் அரசனுக்கு உதவுவதற்காகப் பிரிந்த தலைவன் இன்னும் திரும்பவில்லை. அவன் திரும்புவதாகக் கூறிச் சென்ற பருவம் - கார்காலம் - வந்துவிட்டது. தலைவி அவன்வருகையை எதிர்பார்த்து எதிர்பார்த்து ஏமாந்து கலங்கினாள்; மிக வருந்தினாள். அவளை ஆற்றுவிக்கும் பொருட்டுத் தோழி பல நல்லுரைகளை எடுத்துரைத்தாள்.

தலைவர் விரைவில் வருவார், இன்றே வருவார் என்று தோழி எடுத்துக் கூறித் தலைவியின் துயரத்தைத் தணிக்க முயன்றாள். "போர் முடிந்திருக்கும். நம் படை வெற்றி பெற்றிருக்கும். வெற்றியோடு மகிழ்ச்சி மிகுந்தவராய்த் தலைவர் மீள்வார். போர்த் தொழிலில் வல்ல வீரர்கள்

---

*85. காட்டூர் கிழார் மகனார் கண்ணகனார்.

உயக்கம் - வருத்தம். சாஅய் - மெலிந்து. ஆழல் - துயரத்தில் அழுந்தாதே. நாள் - காலை. நாகு - இளமை. மஞ்ஞை - மயில். பயிர்ந்து - அழைத்து. துனைதரு - விரைந்து வரும். பாயின்று - பரவிற்று.

அவருடைய முயற்சியின் வலிமையை வாழ்த்திக்கொண்டு வர, அவர் திரும்புவார். அவர் கூறிச் சென்ற கார் காலம் வந்துள்ளதையும் நன்கு அறிவார். தண்மையான மழை பொழிந்து பசுமையுற்ற காலம் இது. குருதிபோல் செந்நிறம் பெற்ற தம்பலப்பூச்சிகள் (பட்டுப்பூச்சிகள்) வழிப் பக்கத்தில் சிறியன பலவாய்ப் பரந்து நிலத்தை அழகுபடுத்துகின்றன. முல்லைக்கொடியின் மெல்லிய புதிய மலர்கள் பலவும் வெண்ணிறக் களரில் அரித்துள்ள மணலில் நன்முகப் பரந்துள்ளன. அரும்புகளை வண்டுகள் ஊதி அலர்த்துகின்றன. முல்லை நிலமெல்லாம் தண்மை நிறைந்து மணம் கமழ்கின்றது. இத்தகைய வழியில் அவர் வருவார். கரிய கொம்புகளை உடைய ஆண்மானுடன் உள்ள அழகிய பெண்மானின் மருண்ட பார்வையை அவ்வழியில் காண்பார். காணும் போதெல்லாம் அவர் உன் மருண்ட பார்வையை நினைத்து, உன்னை நினைப்பார். உடனே தேர்ப்பாகனை நோக்கி, 'வலவ, விரைந்து செலுத்துக' என்று ஏவி இன்றே வந்து விடுவார். நாம் வருந்தி நடுங்காமல் இருப்போம்'' என்றாள் :

தோழி :

**வினைவலம் படுத்த வென்றியொடு மகிழ்சிறந்து**
**போர்வல் இளையர் தாள்வலம் வாழ்த்தத்**
**தண்பெயல் பொழிந்த பைதுறு காலைக்**
**குருதி உருவின் ஒண்செம் மூதாய்**
**பெருவழி மருங்கில் சிறுபல வரிப்பப்**
**பைங்கொடி முல்லை மென்பதப் புதுவீ**
**வெண்களர் அரிமணல் நன்பல தாஅய்**
**வண்டுபோது அவிழ்க்கும் தண்கமழ் புறவில்**
**கருங்கோட்டு இரலை காமர் மடப்பிணை**
**மருண்டமான் நோக்கம் காண்தொறும் நின்நினைந்து**

*திண்தேர் வலவ கடவுஎனக் கடைஇ*
*இன்றே வருவர் ஆன்றிகம் பனி...*

இவ்வாறு இனிய நல்ல சொற்கள் பலவற்றைப் பல முறையும் திரும்பத் திரும்ப எடுத்துக் கூறித் துயரப் படாமல் இருக்குமாறு வற்புறுத்தினாள் தோழி. இவற்றைக் கேட்ட தலைவி தோழிக்குக் கூறிய மறுமொழி, அவளுடைய உள்ளத்தின் ஆற்றாமையை நன்கு புலப்படுத்தியது.

"தோழி ! நீ இனிய நல்ல சொற்கள் பலவற்றைப் பல முறை எடுத்துரைக்கிறாய். நீ சொல்வதை உறுதிபெற ஏற்றுக் கொண்டு நான் அமைதியோடு இருப்பேன். ஆனால் இருக்க முடியவில்லை. நாள்தோறும் துன்பம் செய்யும் மாலைக்காலம் வருகின்றது. அந்த மாலைக்காலத் துன்பத்துக்குப் பொருந்து மாறு (வேறு ஒன்றும் தெரியாத) ஆயர்கள் சிறிய குழலை எடுத்து ஊதுகின்றார்கள். அந்தக் குழலின் வாய் வல்வாயாக இருந்து என் உள்ளத்தைப் புண்படுத்தும் இசையை எழுப்பு கின்றது. குழல் இவ்வாறு என்னை வருத்தாமலிருந்தால், யான் உன் சொற்களின்படி அமைதியாகவும் இருக்க முடியும்" என்றாள் :

தலைவி :

**வன்புறை இன்சொல் நன்பல பயிற்றும்**
**நின்வலித்து அமைகுவன் மன்னே அல்கல்**
**புன்கண் மாலையொடு பொருந்திக் கொடுங்கோல்**
**கல்லாக் கோவலர் ஊதும்**
**வல்வாய்ச் சிறுகுழல் வருத்தாக் காலே.***

---

*74. மதுரைக் கவுணியன் பூதத்தனார்.

வலம்படுத்த - வெற்றி பெறச் செய்த. வென்றி - வெற்றி. தாள் - முயற்சி. பைது - பசுமை. மூதாய் - தம்பலம் பூச்சி (பட்

நுண்ணிய உணர்வு உடையவர்களை எளிதில் இயக்க வல்லது இசை. கோவலர் ஊதும் குழலோசையைக் கேட்டதும் தலைவி மாலைக்காலம் வந்துவிட்டதே என்று எண்ணி உருகினாள். தலைவன் பிரியாமல் தன்னுடன் இருந்தபோது, இதே குழலோசையைக் கேட்டுத் தலைவனும் மகிழ்ந்தான்; தானும் மகிழ்ந்தாள்; கார்காலத்து மாலைப்பொழுது அப்போது அவர்களுக்கு இனியதாய் இருந்தது. இப்போது குழலோசை, தலைவியின் உள்ளத்தில், தலைவன் வரவில்லையே என்ற ஏக்கத்தையும் உண்டாக்கியது; சென்ற ஆண்டில் அவன் தன்னுடன் இருந்து மகிழ்ந்த நிலையை நினைவூட்டித் துயரத்தையும் விளைவித்தது. அதனால், தான் ஆற்றியிருக்க வேண்டும் என்று முயன்றாலும் முடியவில்லையே எனக் கலங்கினாள். 'குழல் வருத்தாமலிருக்குமானால், யானும் உன் சொல் கேட்டு அமைதியாக இருப்பேன்' என்றாள். குழல் மேல் தனக்கு உள்ள வெறுப்பையே 'வல்வாய்ச் சிறுகுழல்' என்ற தொடரில் புலப்படுத்தினாள். அதை ஊதும் கோவலரின் மேலும் அவள் வெறுப்புக்கொண்டு, 'கல்லாக் கோவலர்' என்றாள். வெறுப்பு அந்த அளவில் நிற்காமல், கோவலர் கையில் கண்ட கோலின் மேலும் சென்றது. அதன் வளைந்த தன்மையைக் கண்டு, அதிலும் நேர்மை காணேமே என்று பழிப்பவளாய், 'கொடுங்கோல்...கோவலர்' என்றாள்.

தோழியின் சொற்களைத் தலைவி அன்போடு ஏற்றுக்கொண்டாள். ஆயினும் தன் ஆற்றாமையை எடுத்துரைத்து

டுப் பூச்சி). வரிப்ப - அழகுபடுத்த. வீ - மலர். புறவு - முல்லை நிலம். ஆன்றிகம் - அமைவோம். பனி - நடுக்கம். வலித்து - துணிந்து. அல்கல் - நாள்தோறும்.

வருந்தினாள். தோழியின் சொற்கள் இனியவை, நல்லவை, பலமுறை எடுத்துரைக்கப்பட்டும் வெறுப்புத் தராதவை என்பதைத் தலைவி உணர்ந்தாள்; 'இன்சொல் நன்பல பயிற்றும்' என்றாள்.

தோழியின் சொற்களில் உள்ள இனிமையும் நன்மையும் என்ன? தலைவன் போர்க்களத்தில் வெற்றி பெற்றுத் தன்னைச் சூழ்ந்த இளைஞர் செய்யும் வெற்றிமுழக்கத்துடன் வருவதாகத் தோழி கூறிய சொல் இனியது என்று தலைவி உணர்ந்தாள். தன் கணவன் வெற்றி பெற்றதும், அவன் பலராலும் வாழ்த்திப் போற்றப்படுகிறான் என்பதும் கேட்டு அவள்உள்ளம் மகிழ்ந்தது. இத்தகைய மகிழ்ச்சியைத் துயரத்திற்கிடையே தோழி விளைவிப்பதைத் தலைவி உணராமற்போகவில்லை. தலைவன் வரும் வழியில் ஆண்மான் தன் துணையோடு கூடிவாழும் காட்சியைக் காண முடியும் என்று தோழி உரைத்த சொல் நன்மை பொதிந்த சொல். வழியில் நல்ல காதல் வாழ்க்கையைக் கண்டு தலைவன் தன்னை நினைப்பான் என்ற எண்ணம் தலைவியின் உள்ளத்திற்கு அருமருந்தாய் நன்மை செய்ய வல்லது. அந்தக் காட்சியைக் கண்டதும் பழைய காதல் அவன்உள்ளத்தே தழைக்கும் என்று உணர்ந்து தலைவி மகிழ்ந்தாள். மேலும் தோழி கூறியது அவளுக்கு எவ்வளவோ ஆறுதல் தந்ததாயிற்று. பெண் மானின் மருண்ட பார்வையைக் கண்டதும், தலைவனுக்குத் தன் துணைவியின் மான்போன்ற பார்வை நினைவுக்கு வரும் என்றது, அவன் என்றும் மாறாத பேரன்பு உடையவன் என்பதை மறைமுகமாக எடுத்துரைத்ததாகும். அத்தகைய அன்புள்ளம் அவனுக்கு இருத்தலைக் கேட்டதும் தலைவியின் உள்ளம் குளிரத் தொடங்கியது. ஆயினும், பயன் இல்லை.

இத்தகைய தேறுதல் மொழிகளால் விளையும் பயனை யெல்லாம் ஒருநொடிப் பொழுதில் கோவலர் ஊதும் குழ லோசை பாழாக்கிவிட்டது. அதனால்தான் தன்னால் ஆற்றி யிருக்க முடியவில்லை என்று தலைவி எடுத்துரைத்தாள்.

## 77. நல்லை! தோழி!

தலைவன் தலைவியைக் கண்டான்; காதல்கொண்டான்; தோழியை அணுகினான்; இரந்து வேண்டினான்; தன் னிடம் அன்புகொண்டு உதவிசெய்யுமாறு தோழியை வற் புறுத்தினான். தோழி தலைவியை அணுகினாள்; நயமான முறையில் தலைவியின் நெஞ்சம் நெகிழும் வகையில் தக்க சொற்கள் கூறினாள். தலைவி முதலில் மறுத்தாள்; வெறுத் தாள்; பிறகு இசைந்தாள். தோழியின் உதவியால் தலைவியும் தலைவனும் பலநாள் பழகினர். அந்தத் தோழி யின் திறமையால் திருமண ஏற்பாடும் செய்யப்பட்டது. திருமணமானபின் தலைவி தலைவனோடு இல்லறம் இனிது நடத்தி வந்தாள். காதலின் தொடக்க நிலையில் நிகழ்ந் தவை எல்லாம் பழங்கதை ஆய்விட்டன. தலைவியைக் காண வேண்டுமென ஒருநாள் தோழி வந்தாள். அவளைக் கண்டதும் தலைவி பெரிதும் மகிழ்ந்தாள். தான் இப்போது நடத்தும் இனிய இல்வாழ்க்கைக்கு அவள்தான் காரணம், அவள் தலைவனைப் புகழ்ந்து கூறித் தன் நெஞ்சை நெகிழ் வித்தமையே காரணம் என நினைந்தாள்; நன்றியுணர்வோடு நினைந்தாள்; தன் உள்ளத்தில் பொங்கி எழுந்த நன்றி யுணர்வைத் தோழியிடம் எடுத்துரைத்தாள்.

"'தலைவன் நல்ல குடியில் பிறந்தவன்; கூடி நட்புக் கொண்டவர்களைக் கைவிட்டுப் பிரியாதவன்; கெட்ட

சொற்களைச் சொல்லாத நா உடையவன் ; அன்பு உடைய வன் ’ என்று நீ வல்ல வகையில் எனக்குக் கூறிப் பொருத்த மாகச் சேர்த்துவைத்தாய். ஆராய்ந்து பார்த்தால், நீ நல்ல வள் ; அன்பு மிக்க தோழி ! புகழ் பொருந்திய பாணன் எண்ணும் முறைப்படி இசைத்துப் பொருத்திய பண்களை விட, அவன் புதிதாக இயற்றிய பண்வகையைவிட, என் திருமண நாளைவிட, எனக்கு மிக்க இனிமையுடையவனாக உள்ளான் தலைவன் :”

தலைவி :

குடிநன்கு உடையன் கூடுநர்ப் பிரியலன்
கெடுதா மொழியலன் அன்பினன் என நீ
வல்ல கூறி வாய்வதின் புணர்த்தோய் ;
நல்லை காணின் ; காதலந் தோழி !
...உரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்
புதுவது புனைந்த திறத்தினும்
வதுவை நாளினும் இனியனால் எமக்கே.*



*352. அஞ்சியத்தை மகள் நாகையார்.

வாய்வதின் - பொருத்தமாக. உரை - புகழ். சால் - நிறைந்த. திறம் - பண்வகை. வதுவை - திருமணம்.

# பொருள்

